ஸ்ரீ :

# ஸகல காரியஸித்தி பெற

# ஸீதா ராமாநுக்ரஹ சேமிப்பு

# இதய உண்டி



ராம் ராமாய நம :

ஸ்ரீராம : சரணம் மம

இவ்விரண்டு மந்த்ரங்களைப் பெரியோரிடம் உபதேசம் பெற்று சுத்தமாய் ஸமயம் கிடைக்கும் போதெல்லாம் ஜபித்து வந்தால், இதயமெனும் உண்டி ஜப மஹிமையால் நிரம்பி, உரம் பெற்று, ஸகலதீய குணங்களும் நீங்கி எல்லா நற்பண்பாடுகளும் வலுப்பெற்று, பரத, லக்ஷ்மண, ஹநுமதாதிகள் போல் ஸ்ரீ ஸீதா ராம பக்தியுடன் இங்கு ஸகல காரியங்களிலும் ஸித்தி பெற்று, பரத்திலும் நல்வாழ்வு பெறலாம். ஐயமில்லை.

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

# ஸ்ரீ ராமர் ஜாதகம்

ததச்ச த்வாதசே மாஸே சைத்ரே நாவமிகே திதௌ |
நக்ஷத்ரே(அ)திதி தைவத்ய ஸ்வோச்ச ஸம்ஸ்த்தேஷு பஞ்சஸு ||
க்ரஹேஷு கர்க்கடகே லக்னே வாக்பதா விந்துனா ஸஹ |
ப்ரோத்யமானே ஜகந்நாதம் ஸர்வலோக நமஸ்க்ருதம்
கௌஸல்யா(அ)ஜநயத் ராமம் ஸர்வலக்ஷண ஸம்யுதம் ||

—ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | சூரியன் புதன் | | கேது |
| | ராசி சக்கரம் | | லக்னம் குரு சந்திரன் |
| செவ்வாய் | | | |
| ராகு | | சனி | |

"மேடமா மதிதிதி நவமி மீன்கழை
நீடுறு மாலைகர்க் கடகம் நீதிசேர்
ஓடைமா களிறஸன் உதய ராசிகோள்
நாடினே காதசர் நால்வர் உச்சரே."

—கம்ப ராமாயணம்

ஸ்ரீய: பதியான பகவான் ஸ்ரீமந் நாராயணனுடைய அவதாரங்களில் முக்கியமானது **ஸ்ரீ ராமாவதாரம்.** ஸ்ரீ ராமபிரானுடைய ஜனன ஜாதகத்தில் ஐந்து க்ரஹங்கள் உச்ச ஸ்தானத்தில் இருக்கின்றன. எனவே இந்த மஹா சிரேஷ்டமான ஜாதகத்தைப் பூஜா மண்டபத்தில் எழுந்தருளப் பண்ணி, தினந்தோறும் சிரத்தையுடன் ஆராதிப்பது அவசியம். இந்தப் புனிதமான ஜாதகத்தை வைத்திருப்பவர்களுக்கும், பூஜிப்பவர்களுக்கும், ஜாதக ரீதியாய் ஏற்பட்டிருக்கும் நவக்ரஹ தோஷ நிவிருத்தியும், ஸர்வ வ்யாதி நிவிருத்தியும், ஐசுவர்ய அபிவிருத்தியும், ஆயுள் ஆரோக்யம் முதலான ஸகல பாக்ய அபிவிருத்திகளும் ஸ்ரீ சக்கரவர்த்தித் திருமகன் திருவருளால் திண்ணமாக ஏற்படும் என்பது ஸர்வ சாஸ்த்ர ஸம்மதம்.

# முதற்பதிப்பின் ஆசியுரை




அம்ருதவாக்வர்ஷி, உபந்யாஸக சக்ரவர்த்தி,
வைதிக தர்மஸம்ரக்ஷக,
ப்ரவசன துரீண, வேதயாக பரிபாலக,
ராமாயண தத்வ உபதேசக,
ராமாயண கேஸரி, பாரதஸிம்ஹம்,
தர்மோபதேச வாசஸ்பதி, யக்ஞரக்ஷக,

**சேங்காலிபுரம் அனந்தராம**

25, வடக்கு மரவனேரி, சேலம்-1
(Camp) சென்னை,
26-9-1960.


பகவான் ராமகிருஷ்ணாதிகளாய் இவ்வுலகில் அவதாரம் செய்ததால் நவக்ரஹங்களின் அனுக்ரஹத்தை விரும்புகிறவராகவும், அவற்றிற்குக் கட்டுப்பட்டுள்ளவராகவும் இருக்கின்றார். அதனாலேயே ஸ்ரீ ராமன் முதலியவர்களுக்கு நக்ஷத்திரம், லக்னம் முதலியவற்றை முனிவர்கள் கூறியுள்ளனர். இப்படித் தெய்வத்திற்கே நவக்ரஹங்களின் உதவி தேவையென்றால் மனிதர்களான நம் யாவருக்கும் நவகரஹ ப்ரஸாதம் மிக்க அவசியமேயன்றோ! அந்த நவக்ரஹங்களின் அனுக்ரஹம் அடைவதற்கு மார்க்கத்தைக் கருணாமூர்த்தியான ஸ்ரீ பரமேச்வரன் ஸ்ரீ பார்வதி தேவிக்கு உபதேசம் செய்திருப்பதாய் உமாஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது. அதுவும், ஸம்ஸாரிகளான நமக்குச் சுலபமாய் நவக்ரஹ தோஷங்கள் விலகி, ஆயுஸ், ஆரோக்யம், ஸந்தானம், ஸம்பத்து முதலிய மங்களங்களை அளிப்பதாக அமைந்துள்ளது. இம்முறையை உலகிலுள்ள யாவரும் அறிந்துகொள்வதற்காக, **லிட்டில் ப்ளவர் கம்பெனியார்** வெகு அழகான முறையில் சிறு குழந்தைகள், ஸ்திரீகள், பெரியவர்கள் யாவரும் நித்யம் பாராயணம் செய்யும்படி, **"தசாபுக்திகளும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும்"** என்னும் ஒன்பது புஸ்தகங்களையும் **"ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும்"** என்னும் புஸ்தகத்தையும் அச்சிட்டு வெளியிட்டுள்ளனர்.

ஸ்ரீமத் ராமாயணத்தில் நவக்ரஹ தோஷங்களைப் போக்கி, ஸகல பாக்யங்களையும் கொடுக்கக்கூடிய, பல ஸர்க்கங்கள் அமைந்துள்ளன. எந்தஎந்த தசைக்கு எந்தஎந்த சர்க்கத்தின் கதையை உணரவேண்டுமோ, எந்தஎந்த தசைகளின் புக்திகளின் தோஷங்களை விலக்கிக்கொள்ள எந்தஎந்த ஸர்க்கத்தின் கதையை உணர வேண்டுமோ, அந்தஅந்த ஸர்க்கங்களின் கதையை எளிய நடையில் தமிழில் இக்கம்பெனியார் அச்சிட்டளித்தது நமது தென்னாட்டின் பாக்யமேயாகும்.

இதோடு அந்தஅந்த ஸர்க்கத்தின் ஆரம்ப சுலோகத்தையும் முடிவு சுலோகத்தையும் ஒவ்வொரு ஸர்க்கத்திலும் சேர்த்து அச்சிட்டிருக்கின்றனர். அவ்விரண்டு சுலோகங்களையும் படிப்பதால் அந்த ஸர்க்கம் முழுவதையும் படித்த பயன் ஏற்படும். அந்த ஸர்க்கத்தின் அர்த்தத்தை ஸ்ரீ ராமனிடத்தில் அளவு கடந்த பக்தி உள்ளவரும், ஸ்ரீ ராமாயணத்தின் உட்கருத்தை வெகு எளிய நடையில் எழுதியவருமான அபிநவ தியாக ப்ரம்ம, கீர்த்தனாசார்ய ஸ்ரீ C. R. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் அவர்கள் மொழிபெயர்த்தபடி வெளியிட்டுள்ளனர்.

அதோடு "ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும்" என்ற ஒரு சிறந்த புஸ்தகத்தையும் இக்கம்பெனியார் வெளியிட்டுள்ளனர். இதுவும் ஒவ்வொரு குடும்பத்திற்கும் ரக்ஷையாக இருக்கும்.

இப்புஸ்தகங்களில் பல ஸ்தோத்ரங்களையும் பல தெய்வங்களின் அஷ்டோத்தரங்களையும் நாமாவளிகளையும் சேர்த்து அச்சிட்டுள்ளனர். பக்தர்களுக்கு இதுவும் ஒரு பெரிய லாபமாகும்.

**இவைகளைப் படிப்பதால் நவக்ரஹ ப்ரஸாதமும், ஸ்ரீ ராமனுடைய ப்ரஸாதமும், ஸர்வதேவதா ப்ரஸாதமும் கிடைப்பது நிச்சயம்.**

ஆஸ்திகர்கள் அனைவரும் இப்புஸ்தகங்களை வாங்கி இக்கம்பெனியாருக்கு இம்மாதிரி இன்னும் பல புஸ்தகங்களை வெளிய உத்ஸாஹத்தை உண்டுபண்ணும்படி கேட்டுக்கொள்கிறேன்.

இப்படிக்கு,

**சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்.**



# பதிப்பாசிரியரின் முன்னுரை

## நான்கு புருஷார்த்தங்கள்

ஆதிப் பரம்பொருளின் படைப்பில பகுத்தறிவுடன் விளங்கும் மானிட ஜன்மமே உயர்ந்ததாகும். அத்தகைய மானிட ஜன்மத்தைப் பயனுள்ளதாகச் செய்துகொள்ள அறம், பொருள், இன்பம், வீடு எனப்படும் நான்கு புருஷார்த்தங் களையும் அடையவேண்டும். இவைகளில் தர்மத்தைக் கடைப் பிடித்தே ஏனைய புருஷார்த்தங்களை அடையவேண்டுமென்பதே, தர்மத்தை முதலாவதாக அமைந்ததன் நோக்கம் ஆகும்.

பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை" என்பதற்கேற்ப நியாயமாக ஈட்டிய பொருளும், அறத்திற்குப் புறம்பாகாத இன்பமும், அவைகளை ஆதாரமாகக் கொண்ட மற்றவைகளும் மானிட வாழ்விற்கு மிகமிக அவசியமாகின்றன.

மேற்கண்ட பொருளும் இன்பமும் அவைகளைச் சார்ந்த மற்றவைகளும், நம் சாஸ்திரங்களில் சொல்லியபடியும், நம் முன்னோர்கள் ஆணையிட்டபடியும், அவரவர் முன்வினைப் பயனாகவே குறிப்பிட்ட அளவில் குறிப்பிட்ட காலத்தில் கிடைக்கின்றன.

## வினைப்பயனாவது யாது?

இறைவனின் படைப்பில் எத்தனையோ லக்ஷம் ஜீவராசிகள் இருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு விதமான சரீர அமைப்பும் வெவ்வேறு விதமான செயற்பாடுகளும் பலவேறு விதமான தேவைகளும், முயற்சிகளும், முரண்பாடுகளும் உள்ளன. இப்படி ஒன்றுக்கொன்று இவ்வளவு வித்தியாசமாக இருக்கக் காரணம் என்ன? இதற்குக் காரணம் அந்த அந்த ஜீவாத்மா செய்த முன்வினையே என்பர் நம் பெரியோர்.

இப்போது நாம் மற்ற ஜீவராசிகளையெல்லாம் விட்டுப் பூவுலகிலுள்ள மனிதவர்க்கத்தை மாத்திரம் எடுத்துக்கொள் வோம். ஆஹா! மனிதர்களில் எவ்வளவு, எவ்வளவு வித்தியாசம்!

ஒருவன் பணக்காரன் — இன்னொருவன் ஏழை.
ஒருவன் அறிவாளி — இன்னொருவன் மூடன்.
ஒருவன் சிவப்பு — இன்னொருவன் கருப்பு.
ஒருவன் நெட்டை — இன்னொருவன் குட்டை.

இத்தகைய முரண்பாடுகள் எல்லாம் ஒருவருக்கு ஒருவர் சம்பந்தமில்லாதவர்களுக்கு மாத்திரந்தானே என்று நினைக்க வேண்டா. ஒரே தாயின் வயிற்றில் பிறந்த பிள்ளைகளில்கூட இந்த முரண்பாடுகள் உள்ளன. உதாரணமாக, ஒரே தாய் வயிற்றில் பிறந்த பல பிள்ளைகளில் ஒரு பிள்ளை மாதம் ஆயிரக் கணக்கில் சம்பாதிக்கும் அதிகாரி! இன்னொரு பிள்ளை தன் பெண்டு பிள்ளைகளைக் கூடக் காப்பாற்றப் போதாத ஐம்பது ரூபாய் சம்பளம் வாங்குபவன்! இன்னொரு பிள்ளை சமையற்காரன்! இன்னொருவன் தலையில் சாமான்களைச் சுமந்து வீதி வீதியாக விற்பவன்! இப்படிப் பலவிதம் உண்டு!

மற்றொரு விதமும் உண்டு: தகப்பன் படிப்பு வாசனையே அறியாதவன்; ஆனால், பிள்ளையோ உலகமெலாம் புகழும் உயர்ந்த மேதாவி. அல்லது தந்தை உலகமெல்லாம் புகழும் அறிவாளி. பிள்ளையோ எழுத்து வாசனையே அறியாத மூடன்.

மேலும், ஒரே மனிதனின் வாழ்க்கையை எடுத்துக்கொண் டாலும், அவனுக்கு வெவ்வேறு காலங்களில் நேரும் வெவ்வேறு தொழில்களையும் சுகதுக்கங்களையும் பார்க்கிறோம். ஒரு சமயம் தேவையான அநேக வசதிகளுடன் அமோகமாக அவன் வாழ்கிறான். அநேகவிதச் சிறப்புக்களை அடைகிறான். அதே மனிதனுக்குத் தன் வாழ்நாளில் மற்றொரு சமயத்தில் ஸகல ஸௌக்கியங்களும் மறைந்து, ஆற்று வெள்ளம் வற்றினது போல் ஆகிறது. செல்வம் அவனை விட்டு அகலுகிறது. உலகம் அவனைத் தாழ்ந்தவனாக மதிக்கிறது. இதற்கெல்லாம் காரணம் பூர்வ ஜன்ம கர்மம் என்று சொல்லப்படும் முற்பிறப்பு வினையே யாகும். "**பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே**" என்பது பட்டினத்தார் வாக்கு.

பூர்வ ஜன்ம கர்மம் என்பது, புண்ணிய ரூபமாகவும் பாவ ரூபமாகவும் இருக்கும். ஒவ்வொருவனும் தன் வாழ்நாள் முழு வதும் புண்ணியம் மாத்திரமோ, பாவம் மாத்திரமோ தனியாகச் செய்திருக்கமாட்டான். மிகுந்த புண்ணிய சீலனுங்கூடத் தனக்குத் தெரியாமலே ஏதாவது பாவம் செய்திருக்கலாம். அவ்விதமே பாவியும் தனக்குத் தெரியாமல் ஏதாவது புண்ணியம் செய்திருப்பான். ஆகையால், ஒருவன் முன் ஜன்மத்தில் செய்த புண்ணியத்தையும் பாவத்தையும் அநுபவிப்பதற்காகவே மறு படியும் ஜன்மம் எடுக்கிறான் என்பது இயற்கை நியதி.

மனிதனுடைய வாழ்க்கையை ஒரு தராசுக் கோலுக்கு ஒப்பிடலாம். அதன் இருபுறத்திலும் உள்ள தட்டுக்களில் ஒன்றில் புண்ணியமும், மற்றொன்றில் பாவமும் வைக்கப்பட்டிருக் கின்றன. புண்ணியம் அதிகமாக இருந்தால் அதற்குத் தக்க படி வீடு, வாசல், வாகனம், பூமி, பசு, தனம், தானியம்

போன்ற அதிக சுகங்களை அநுபவிக்கிருன். அதனுல் அவனைப் புண்ணியம் செய்தவன் என்று உலகில் பேசுவார்கள். ஆனுல், அவனும் முன் ஜன்மத்துப் பாவத்தின் பலனை அதே சமயத்தில் ஓரளவுக்கு அனுபவிக்காமலில்லை. உதாரணமாக, கை நிறையப் பணமும், கண் நிறைந்த மனைவியும், மற்ற வாழ்க்கை வசதிகளும் இருந்தும், தனக்குப் பின் தன் பெயர் சொல்ல—தன் செல்வத்தை அநுபவிக்க—ஒரு குழந்தை பிறக்கவில்லையே என்று ஏங்குகிறவன் இருக்கிருன் அல்லவா? இம்மாதிரியே பாவம் செய்தவன் என்று எண்ணப்படும் மற்ெருருவன், மனைவி மக்களும், உற்ருர் உறவினரும் நிறைந்திருந்தும் குடிக்கக் கூழும் உடுக்கத் துணியும் இல்லையே என்று அல்லும் பகலும் அல்லற்படுகிருன். ஆகையால், மனிதன் என்னும் தராசுக் கோலுக்கு இருபுறமும் இருக்கும் புண்ணிய பாவங்கள் இடத்தை விட்டு மாருமல் மனிதனுக்குச் சுகத்தையும் துக்கத்தையும் மாறி மாறிக் கொடுத்து வருகின்றன என்பது கண்கூடாகும்.

வேெருரு விதமும் காணலாம்: ஒருவன் துஷ்டன்; பல பாவச் செயல்களைப் புரிகிருன். ஆனுல், அவன் வாழ்நாளில் வசதியாக வாழ்கிருன. மற்ெருருவன் நல்லவன்; ஒருவருக்கும் தீங்கு செய்ய மனத்தாலும் நினையாதவன்; தெய்வ பக்தி உள்ளவன். ஆனுல், அவன் படும் கஷ்டமோ சொல்லி முடியாது. நம் கண்முன் சுகங்களை அனுபவிக்கும் துஷ்டன் இந்த ஜன்மத்தில் தீச்செயல்களைப் புரிபவனுக இருந்தாலும், முன் ஜன்மத்தில் செய்த புண்ணியத்தின் பலனை இந்த ஜன்மத்தில் அநுபவித்து வருகிருன். அவனே இந்த ஜன்மத்திலும் புண்ணிய காரியமே செய்வானுனல், இந்தப் பிறப்பின் முடிவிலேயே மறு பிறப்பில்லாத முக்தியை அடைவது திண்ணம். ஆனுல், அவன் தீச்செயல்களைச் செய்வானுகில் அதன் தீய பலனை இப்பிறப்பிலோ அல்லது அடுத்த ஜன்மத்திலோ அநுபவிப்பது நிச்சயம். அப்படியே இந்த ஜன்மத்தில் நற்செயல் புரிபவனுக இருந்தும், கஷ்டத்தை அநுபவிப்பவன் தன் கஷ்டங்களுக்குப் 'பூர்வ ஜன்ம வினையே' காரணம் என்று தெரிந்து, அதற்காகத் தன்னுலியன்ற அளவில் நற்காரியங்களைச் செய்ய மேன்மேலும் முயல வேண்டும்.

இதை மற்ெருரு விதமாகவும் விளக்கலாம்: ஒருவன் ஒரு பாங்கில் பணம் போட்டு வைக்கிருன். பணம் போடுகிறவன் நல்லவனு கெட்டவனு என்பதைப்பற்றிப் பாங்கிக்காரர்களுக்கு அக்கறை இல்லை. அவன் போட்டிருக்கும் பணம் கணக்கில் இருக்கும் வரையில் அவன் கேட்டபொழுதெல்லாம் பணம் கொடுத்துக்கொண்டே வருகிருர்கள். அவனுடைய பாங்கில் மிச்சம் இல்லாதிருந்தால் அவன் கொடுக்கும் 'செக்கை'த் திருப்பி அனுப்பிவிடுவார்கள், அதுபோலவே, ஒருவன் இப்பொழுது

துஷ்டனுக இருந்தாலும், பூர்வ ஜன்மத்தில் அவன் சேர்த்து வைத்த புண்ணியம் செலவழிந்து போகும்வரையில் அந்தப் புண்ணியத்துக்குத் தகுந்த சுகத்தைப் பகவான் கொடுத்து வருகிருர். அவ்விதமே பாங்கில் கடன்பட்டவன் நல்லவனுனுலும் அவன் கடன் முழுவதையும் தீர்க்கும்வரையில் பாங்கிக்காரர்கள் அவனை வருத்துவதுபோலவே, பூர்வ ஜன்மத்தில் செய்த பாவம் தீரும்வரையில் இந்த ஜன்மத்தில் நல்லவனுக இருந்தாலும் அவனுக்குப் பகவான் கஷ்டங்களைக் கொடுத்து வருகிருர். இம் மாதிரி பாங்கிக்காரன் உள்ள நிலையில் இருக்கும் பகவானை நிந்திப்பதில் என்ன பயன்?

## ப்ரார்த்தனையின் மஹிமை

பூர்வ ஜன்மத்தில் பாவம் செய்ததனுல் தற்பொழுது கஷ்டத்தை அநுபவிப்பவர்களுக்கு விமோசனமே இல்லையா என்ருல், இருக்கிறது.

அதையும் ஓர் உதாரணத்தால் விளக்கலாம் : ஒருவன் ஏதோ குற்றம் செய்துவிட்டான். அவன் செய்த குற்றத்திற்கு அவனுக்கு ஏழு வருஷம் கடின தண்டனை விதிக்கப்படலாமென்று சட்டம் இருக்கிறது. அவன் கண்ணீரும் கம்பலையுமாக, மனம் நெகிழ்ந்து தான் குற்றத்தை உணர்ந்து நீதிபதியிடம் தனக்குத் தண்டனையேயில்லாமல் மன்னித்துவிடவேண்டுமென்று மன்ருடிக் கேட்டுக்கொள்கிருன். ஆனுல் சட்டப்படி தவறு செய்தவன் தண்டனையை அநுபவித்தே தீரவேண்டுமென்று இருப்பினும், அவன் தன் குற்றத்துக்காக மனமார வருந்தியதனுல் ஏழு வருஷ தண்டனையை ஐந்து வருஷமாகக் குறைத்துவிட்டதாக நீதிபதி தீர்ப்பளிக்கிருர். அவ்விதமே முன் ஜன்மத்தில் செய்த பாவத்துக்கு இந்த ஜன்மத்தில் கஷ்டங்களை அநுபவிக்க வேண்டியது நியதியாலுைம், மனம் உருகி மன்ருடிக் கேட்டுக் கொண்டால் பகவான் நம் கஷ்டங்களைக் குறைத்து, அத்தோடு கஷ்டங்களைப் பொறுத்துக்கொள்ளும் ஆற்றலையும் அருளுகிருர். நல்ல நிலையில் உள்ளவர்கள் மீண்டும் மீண்டும் பகவானைத் துதித்து வந்தால், அவர்களுக்கு மேன்மேலும் சுகம் உண்டாகும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? ஆகவே,

> **"கல்லாப் பிழையும் கருதாப் பிழையும் கசிந்துருகி**
> **நில்லாப் பிழையும் நினையாப் பிழையும்நின் னைந்தெழுத்தைச்**
> **சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப்பிழையும்**
> **எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி ஏகம்பனே!"**

என்று பட்டினத்தார் கூறுகின்றபடியும்,

> **"தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்**
> **சங்கரா ஆர்கொலோ சதுரர்**
> **அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்**
> **யாதுநீ பெற்றதொன் றென்பால்**

**சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்**
**திருப்பெருந் துறையுறை சிவனே**
**எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்**
**யானிதற் கிலன்ஓர் கைம் மாறே."**

என்று மணிவாசகர் கூறுகின்றபடியும் நெஞ்சம் நெக்குருகி நினைந்து நினைந்து துதிக்கவேண்டும். தெய்வம் செவிசாய்க்கும்.

எந்த வேலையில் ஈடுபட்டிருக்கையிலும் மனத்துக்குள் "ஸ்ரீ ஹரி : சரணம்; ஸ்ரீ ஹரி : சரணம்; ஸ்ரீ ஹரி : சரணம்" என்றோ அல்லது வேறு பகவந் நாமாக்களையோ ஸ்மரணை செய்வதனால் ஏற்படும் நன்மைகளை அம்மாதிரியான முறையை அனுஷ்டித்து வருபவரே அறிவர். சுருங்கக் கூறின், பிரார்த்தனையின் இன்பத்தை அனுபவிப்பவர் வேறு இன்பத்தை வேண்டார்.

## பூஜை அறை

எந்த ஒரு காரியத்தைச் சாதிப்பதற்கும் சூழ்நிலையும் சுற்றுப்புறமும் சரிவர அமைந்திருக்கவேண்டும் என்பது யாவரும் அறிந்ததே. உதாரணமாக, அலுவலகங்களில் ஊழியர்கள் தளர்ச்சியடையாமல் திறமையுடன் பணிபுரிவதற்காக ஏர்கண்டிஷன் செய்கிறார்கள். அதேபோல் நாள் பூராவும் கடினமாக உழைக்கும் ஒரு மனிதன் பகவந் நிஷ்டையில் நிம்மதியுடன் ஈடுபட விரும்பினால் அதற்குப் பூஜை அறையைவிடச் சிறந்த சாதனம் இருக்கமுடியாது. ஆனால், மத்தியதரக் குடும்பத்தைச் சேர்ந்த பெரும்பாலான நம் மக்கள் நகரங்களில் ஒண்டிக் குடியாக வாழும் நிலையில் பூஜைக்காக ஒரு தனி அறை ஒதுக்குதல் சாத்தியமா என்ற கேள்வி எழுதல் நியாயமே. பூஜைக்காகத் தனி அறை இல்லை என்பதற்காக மனச்சஞ்சலமடைந்து பிரார்த்தனை செய்ய வேண்டும் என்ற எண்ணத்தைக் கைவிடவேண்டிய அவசியம் இல்லை. தினமும் குறித்த நேரத்தில் ஏதாவதொரு தனிப்பட்ட இடத்தில் மனநிம்மதியோடு வெகு சுத்தமாய்ப் பிரார்த்தனையில் ஈடுபட்டால் போதுமானது. தினமும் தவறாமல் உருக்கத்துடன் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இஷ்ட தெய்வத்தின் சொரூபத்தைத் திடமாக மனத்தில் இருத்தி மிகவும் பக்தியுடன் பிரார்த்தனை செய்து வந்தால் அந்த இடத்திற்கே ஒரு தெய்வீகத் தன்மை வாய்ந்த மகத்துவம் ஏற்பட்டுவிடுகிறது. உலகில் கிடைக்கும் சாதனம் எவற்றிலும் பல கோடி மடங்கு உயர்வான கடவுளின் அருளை விரைவில் பெறத் தீவிர முயற்சியுடனும் தளரா உறுதியுடனும் பிரார்த்தனையில் ஈடுபடவேண்டும். பிரார்த்தனையின் மூலம் கடவுளின் சித்தத்தைத் தொட்டவர் கெட்டுப் போவதில்லை.

## ப்ரார்த்தனை செய்தபின்பே தினசரி அலுவல்கள் ஒவ்வொன்றையும் செய்தல்.

கோரிய பலன் கிட்டக்கூடாத எந்த ஒரு செயலிலும் ஈடுபட நாம் விரும்புவதில்லை. ஆனால், அடிக்கடி நம் செயல்களில் பல வெற்றி பெறாமல் வீணாவது வாஸ்தவமே. எந்த ஒரு காரியத்தையும் ஆரம்பிக்கும் முன்பும் கடவுளை உருக்கமாகப் பிரார்த்தித்துவிட்டுப் பிறகு செயல்பட ஆரம்பித்தால் தோல்விகளையும் ஏமாற்றங்களையும் தவிர்க்கலாம்.

நாம் சாதாரணமாகத் தினமும் செய்வது என்னென்ன என்பதையும், அவைகளுக்குப் பொருத்தமான பிரார்த்தனைகள் எவை என்பதையும் கவனிப்போம்.

### 1. துயிலெழுதல்

(அதிகாலையில் தூக்கம் கலைந்து விழித்தவுடன் கடவுளை நினைத்து ஒரு விநாடி பிரார்த்தித்தால் அன்றைப் பொழுது நல்ல படியாகக் கழியும். **"உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும் மெள்ள எழுந்த 'ஹரி' என்ற பேரரவம், உள்ளம் புகுந்து குளிர்ந்து"** என்பது திருப்பாவை.)

ஹரி: ஹரி: ஹரி:
(மூன்று தரம் உச்சரிக்கவேண்டும்.)

### 2. பல் துலக்குதல்

ஆயுர் பலம் யசோ வர்ச்ச: ப்ரஜாம் பசு வஸூநி ச ।
ப்ரஹ்ம ப்ரஜ்ஞாம் ச மேதாம் ச த்வம் நோ தேஹி வநஸ்பதே ।

### 3. நீராடல்

ஸமஸ்த ஜகதாதார சங்கசக்ர கதாதர ।
தேவ தேஹி மமாநுஜ்ஞாம் யுஷ்மத் தீர்த்த நிஷேவணே ।

### 4. ஸ்நானம் முடிந்தவுடன்

(தினசரி பூஜைக்குமுன்)

அஸ்மத் குருப்யோ நம:

### 5. போஜனத்துக்கு உட்காருதல்

அச்யுத! அநந்த! கோவிந்த!

### 6. ஆபீஸுக்குப் புறப்படுதல்

வனமாலீ கதீ சார்ங்கீ சங்கீ சக்ரீ ச நந்தகீ ।
ஸ்ரீமாந் நாராயணோ விஷ்ணு: வாஸுதேவோ பிரக்ஷது ।

### 7. ஆபீஸை அடைந்து வேலையை ஆரம்பிக்குமுன்

யாம் மேதாம் தேவகணா: பிதரஸ்சோபாஸதே ।
தயா மாமத்ய மேதயாக்நே மேதாவிநம் குரு ஸ்வாஹா ॥

### 8. மாலையில் ஆபீஸிலிருந்து வீடு திரும்புதல்

(இப்போதும் ஒரு ச்லோகம்)

*யா க்ருபா முநி ஸந்த்ராணே யா க்ருபா கபி ரக்ஷணே ।*
*யா விபீஷண ரக்ஷாயாம் ஸா ராம மயி தியதாம் ॥*

### 9. மாலையில் வீட்டில்

(வழக்கமான பிரார்த்தனைக்குப் பிறகு)

*தவ தாஸோஹம் தவ தாஸோஹம்*
*தவ தாஸோஹம் தாசரதே ।*

### 10. இரவு போஜனத்துக்கு முன்

*ச்ரத்தாம் ப்ராதர் ஹவாமஹே ச்ரத்தாம் மத்யந்திநம் ப:*
*ச்ரத்தாம் ஸூர்யஸ்ய நிம்ருசி ச்ரத்தே ச்ரத்தாபயேஹ :*

### 11. படுக்கைக்குச் செல்லுமுன்

(நிம்மதியாகத் தூங்குவதற்காக)

*ராமஸ்கந்தம் ஹநூமந்தம் வைநதேயம் வ்ருகோதரம் ।*
*சயநே ய: ஸ்மரேந் நித்யம் துஸ்ஸ்வப்நம் தஸ்ய நச்யதி*

### 12. ஏதாவதொரு முக்கியமான வேலையை ஆரம்பிக்கும் முன்னர் விசேஷ ப்ரார்த்தனை

*அசேஷ விக்ந சமந மநீகேச்வர மாச்ரயே ।*
*ஸ்ரீமத: கருணாம்போதௌ சிக்ஷாஸ்ரோத இவோத்திதம்*

### 13. முக்கியமான பிரயாணத்துக்கு முன்

(யாத்ராதானம் முதலியவை செய்து ஆசி பெற்று விசேஷப் பிரார்த்தனை செய்தல்)

*அக்ரத: ப்ருஷ்டதஸ்சைவ பார்ச்வதஹ்ச மஹாபலௌ ।*
*ஆகர்ண பூர்ண தந்வாநௌ ரக்ஷேதாம் ராமலக்ஷ்மணௌ ॥*

### 14. மருந்துண்ண ஆரம்பிக்குமுன்

*அபாமார்ஜது கோவிந்தோ நரோ நாராயணஸ் ததா ।*
*ஸதாஸ்து ஸர்வ துக்காநாம் ப்ரசமோ வசநாத்தரே: ॥*

### 15. எதிர்பாராமல் நேரவிருக்கும் ஆபத்திலிருந்து தப்புவதற்கு

*நம: கோதண்ட ஹஸ்தாய ஸந்திக்ருத சராய ச ।*
*கண்டிதாகில தைத்யாய ராமாயாபந் நிவாரிணே ॥*

### 16. அவகாசம் கிடைத்தபோதெல்லாம் உச்சரிக்க வேண்டிய ப்ரார்த்தனை

**ஸநா ச ஸோம ஜேஷி ச பவமாந மஹிச்ரவ : ।**
**அதாநோ வஸ்ய ஸ்ஸ்க்ருதி ॥**

### 17. எல்லாம் அடங்கிய ப்ரார்த்தனை

ஔஷதே சிந்தயேத் விஷ்ணும் போஜநே ச ஜநார்தநம் |
சயநே பத்மநாபம் ச விவாஹே ச ப்ரஜாபதிம் ||
யுத்தே சக்ரதரம் தேவம் ப்ரவாஸே ச த்ரிவிக்ரமம் |
நாராயணம் தநுத்யாகே ஸ்ரீதரம் ப்ரியஸங்கமே ||
துஸ்ஸ்வப்நே ஸ்மர கோவிந்தம் ஸங்கடே மதுஸூதநம் |
காநநே நாரஸிம்ஹம் ச பாவகே ஜலசாயிநம் ||
ஜலமத்யே வராஹம் ச பர்வதே ரகுநந்தநம் |
கமநே வாமநம் சைவ ஸர்வகார்யேஷு மாதவம் ||

### 18. மாணவர்கள் பாடங்களைப் படிக்க ஆரம்பிப்பதற்குமுன்

ஜ்ஞாநாநந்தமயம் தேவம் நிர்மல ஸ்படிகாக்ருதிம் ||
ஆதாரம் ஸர்வ வித்யாநாம் ஹயக்ரீவமுபாஸ்மஹே ||

### 19. பள்ளியில் ஒவ்வொரு பாடவகுப்பும் ஆரம்பமாவதற்குமுன்

ஸரஸ்வதி நமஸ்துப்யம் வரதே காமரூபிணி |
வித்யாரம்பம் கரிஷ்யாமி ஸித்திர் பவது மே ஸதா ||

### 20. பரீக்ஷை எழுத ஆரம்பிப்பதற்குமுன்

புத்திர் பலம் யசோ தைர்யம் நிர்பயத்வ மரோகதா |
அஜாட்யம் வாக்படுத்வம் ச ஹநூமத் ஸ்மரணாத் பவேத் ||

### 21. வாய்மொழியான பரீக்ஷை ஆரம்பமாவதற்குமுன்னரும் விவாதத்தில் பங்கெடுத்துக்கொள்வதற்கு முன்னரும்

"ஹயக்ரீவ! ஹயக்ரீவ!! ஹயக்ரீவ!!!"

### 22. தீர்வு காணமுடியாத பிரச்னை எதிர்நோக்கி இருக்கும்போது

கார்ப்பண்ய தோஷோபஹத ஸ்வபாவ :
ப்ருச்சாமி த்வாம் தர்ம ஸம்மூட சேதா: |
யச்ச்ரேய: ஸ்யாந் நிச்சிதம் ப்ரூஹி தந் மே
சிஷ்யஸ் தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம் ||

### 23. பகவானைச் சரணடைந்து செய்துகொள்ளவேண்டிய ப்ரார்த்தனை

த்வய்யாராதந காமோயம் வ்ரதம் சரிதுமிச்சதி |
ஸங்கல்ப ஸித்த்யை பகவந் பூரயாஸ்ய மநோரதாந் ||

### 24. பயம் நீங்கவும் எந்த ஸமயத்திலும் எந்தவிதமான பிரச்னைகளையும் துணிவுடன் சமாளிக்கவும்

அபயம் மித்ராத் அபயம் அமித்ராத்
அபயம் ஜ்ஞாதாத் அபயம் புரோ ய: |

அபயம் நக்தம் அபயம் திவா ந:
ஸர்வா ஆதா மம மித்ரம் பவந்து ||

### 25. புகழ் கிட்டுவதற்கு

யசோ மா த்யாவா ப்ருதிவீ யசோ மேந்த்ர ப்ருஹஸ்பதீ |
யசோபகஸ்ய விந்தது யசோ மா ப்ரதிமுச்யதாம் ||

### ஒரு வேண்டுகோள்

மேலே கொடுத்துள்ள ப்ரார்த்தனைகள் மிகவும் சுருக்க மானவை. நாள் முழுவதும் ஓய்வு ஒழிவில்லாமல் வேலை செய் பவர்கள்கூட மனம் வைத்தால் சில நாட்களில் மனப்பாடம் செய்யக்கூடியவை. எனவே, ஆஸ்திக மஹாஜனங்களை நாம் வேண்டிக்கொள்வது என்னவென்றால், தினமும் தாங்கள் செய்ய வேண்டிய பல வேலைகளுக்கிடையில் மேலே கொடுத்துள்ள ப்ரார்த்தனைகளை அவ்வப்போது உச்சரிப்பதற்கு எப்படியாவது அவகாசம் கண்டுபிடித்து பகவானின் பரம கருணையில் நம்பிக்கை வைத்துப் பக்தியுடன் உச்சரித்து வந்தால் தோல்வியும் தீய சக்திகளும் தங்களை அண்டாமல், தங்கள் முயற்சிகளில் எல்லாம் வெற்றியடைந்து, தங்களுக்கும் தங்களைச் சேர்ந்தவர்களுக்கும் சகலவித நன்மைகளும் ஸித்திக்கப் பெறுவது உறுதி.

## ப்ரத்யேக ப்ரார்த்தனை

மேலே பொதுவாகத் தினமும் பல சமயங்களில் செய்ய வேண்டிய ப்ரார்த்தனைகளைப் பார்த்தோம். தெய்வபக்தியுடன் தினமும் செய்யத்தக்க ப்ரார்த்தனைகள் யாவும் செய்து வருபவ னும் துன்பச் சுழலில் அகப்பட்டுத் தவிப்பதைச் சில ஸமயங் களில் பார்க்கிறோம். அதைப் பூர்வ ஜன்ம பாவம் என்றே சொல்லவேண்டும்; ஏனெனில், ஒருவன் ஆரோக்கிய வழியினின்று மாறுபடாமல் நடந்துவந்தாலும் ஒரோவொரு சமயத்தில் அவனையும் நோய் வருத்துகிறது. அத்தகைய நோய் வந்தால் எப்போதும் கடைப்பிடிக்கும் ஆரோக்கிய நெறி தவறாமல் மேலும் வைத்தியரிடமும் சென்று அவர் தரும் மருந்துகளையும் பத்தியங்களையும் பொறுமையுடன் தாங்கி மீண்டும் நலம் பெறுகிறோம். அதுபோலவே தசாபுக்தி விசேஷத்தாலும் பூர்வ ஜன்ம பாபங்களாலும் கஷ்டங்கள் வருமாயின் அவற்றை நீக்கிக்கொள்ள ப்ரத்யேக ப்ரார்த்தனைகள் செய்யவேண்டும். அத்தகைய ப்ரார்த்தனைகளில்,

1. **ஸ்ரீமத் ராமாயண பாராயணம்** மிகச் சிறப்பு வாய்ந்தது.

2. அதுபோலவே, **திராவிட வேதங்களாகிய தேவார, திருவாசக திவ்ய ப்ரபந்தங்களும்** பெருஞ்சிறப்பு வாய்ந்தவை.

## 1. ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் காரிய ஸித்தியும்

ஸ்ரீமத் ராமாயணம், மஹாபாரதம், பாகவதம் ஆகிய மூன்றும் நம் நாட்டுத் தெய்விக நிதிகளாகும். நம்மிடம் கொண்டுள்ள அளவற்ற கருணையால் முனிவர்கள் இம்மூன்று அழியாச் செல்வங்களையும் நமக்கு அருளியுள்ளார்கள். அவற்றுள் ராமாயணம் தலைசிறந்தது.

மக்கள் உய்யும்பொருட்டு நம் முன்னோர் நல்ல வழிகளை வகுத்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட ஸன்மார்க்கங்களை ஸ்ரீமத் ராமாயணம் அழகாக எடுத்துக் காட்டுகிறது. ஸ்ரீராம, லட்சுமண பரத, சத்ருக்னர் என்ற நான்கு அவதார மூர்த்திகளும் மனிதன் கடைப்பிடிக்க வேண்டிய பலவித தர்மங்களை நல்ல முறையில் நடத்திக் காட்டியிருக்கிறார்கள். ஸ்த்ரீ தர்மத்தைச் சிறப்பாக விளக்கவே, நம் லோகமாதா "ஸீதா தேவியாக" அவதரித்தார். முக்கியமாக, "சரணாகதி" தத்துவத்தை விளக்கவே திருமால், ஸ்ரீ ராமசந்த்ர மூர்த்தியாக அவதரித்தார். "சரணாகதிக்கு ஜாதி மத வேறுபாடு இல்லை; ஆண் பெண் வேறுபாடு இல்லை. உயர்திணை, அஃறிணைப் பாகுபாடு இல்லை" என்னும் உண்மையை அவர் காண்பித்திருக்கிறார்.*

நம் வாழ்க்கையில் துன்பம் வரும்பொழுது ராம கதையைப் பாராயணம் செய்தால், துன்பங்கள் விலகி மனச்சாந்தி ஏற்படும்

---

* The conception of God in the TIRUVAIMOLI is very sublime. The very first line of the TIRUVAIMOLI describes the Lord as One whose excellence is supreme. But this Being of Supreme Excellence is not a far-off, high and mighty Being, indifferent to the weal and woe of souls. Hidden in everything It pervades everything, even as the invisible soul pervades and actuates the body. This being is so full of love for souls that in the incarnations, e. g., Ramavatara, it takes on the human form and suffers every woe that human flesh is heir to.

"Are those born in the world, anything in themselves, if they do not become devotees of the Lord, after having heard how He was born in wthe orld and for the sake of human beings endured untold suffering; Who, seeking out the evil ones who afflicted the earth, destroyed them and thus protected and redeemed the world?"

— Dr. V. A. Devasenapathi (in "The Bhavan's Journal")

என்பது நம் முன்னோர்கள் கண்ட உண்மை. அந்தக் கருத்துடன் தான் வால்மீகி முனிவர் ராமாயண காவியத்தைப் பாடினார். ராம நாமத்துக்கு அளவற்ற பெருமை உண்டு. சர்வமங்களத்தையும் அளிக்கக்கூடிய ஸ்ரீமத் ராமாயணத்தை எல்லோரும் பாராயணம் செய்து பெரும் பயன் அடைதல் வேண்டும்.

> "நன்மையும் செல்வமும் நாளும நல்குமே !
> தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே !
> சென்மமும் மரணமும் இன்றித் தீருமே !
> இம்மையே 'ராம'வென் றிரண்டெ டுத்தினால்"

என்ற கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பரின் வாக்கு, கல்லையும் கனிவிக்கும் ; இரும்பையும் இளகவைக்கும்.

நாம் கஷ்டத்தில் இருக்கும்பொழுது கஷ்டங்களைக் குறைத்துக் கொள்ளவும், கவலையுற்றிருக்கும்போது மனச்சாந்தி பெறவும், சுகத்தில் இருக்கும்பொழுது மேன்மேலும் சுகத்தை வளர்த்துக் கொள்ளவும் எளிதாக அநுசரித்து வரக்கூடிய பல பொது வழிகளை நம பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஜாதகத்தில் ஒவ்வொரு தசைக்கும், தசையில் உள்ள புக்திகளுக்கும் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத திலிருந்து குறிப்பிட்ட சில ஸர்க்கங்களைத் தினந்தோறும் பக்தியுடன் பாராயணம் செய்துவந்தால் நவக்ரஹ சாந்தியுண்டாகின்றதென்றும் சொல்லியிருக்கிறார்கள்.

மற்றும், ராமாயணத்தின் ஒவ்வொரு ஸர்க்கத்தையும் பாராயணம் செய்வதற்கு பிரத்தியேகமான ஒரு பலன் உண்டு. இதை ஸர்வலோக ரக்ஷகனை ஸ்ரீ பரமேசுவரன் லோகமாதாவான பார்வதிதேவியிடம், மனிதனுக்கு எந்தெந்த ஸமயங்களில் எந்தெந்தக் காரியங்கள் ஸித்திப் பதற்கு எந்தெந்த ராமாயண ஸர்க்கங்களைப் பாராயணம் செய்ய வேண்டும் என்பதைக் கூறியிருக்கிறார். இதனைப் பதினென் புராணங் களில் ஒன்றான வாயு புராணத்தைச் சேர்ந்த 'உமா ஸம்ஹிதை' என்ற பகுதி கூறுகிறது.

## 2. திராவிட வேதங்களும் காரிய ஸித்தியும்

> " வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
> வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
> ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
> சூழ்க வையக முந்துயர் தீர்கவே"

— திருஞான. தேவாரம்

என்ற பாசுரத்தை எழுதி வையையாற்றில் இட்டார் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார். அவ்வேடு நீரோட்டத்தை எதிர்த்துச் சென்று திருவேடகம் என்ற இடத்தில் கரையேறிற்று.

**" மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு**
**சுந்தரமாவது நீறு துதிக்கப் படுவது நீறு**
**தந்திரமாவது நீறு சமயத்தில் உள்ளது நீறு**
**செந்துவர் வாயுமை பங்கன் திருவால வாயான் திருநீறே"**

என்று பாசுரத்தைக் கூறிக் கூன்பாண்டியன் தன் கொடுநோயைத் தீர்த்தார்.

அங்ஙனமே ஆழ்வார்களும் அனந்தரம் ஆண்டவன் அரிய லீலா விபூதியில் ஈடுபட்டுத் தம்மை மறந்து அருள்வாக்குகளைப் பொழிந்துள்ளனர். இன்ன பொருள் வேண்டுமென்பதை நமக்குக் கேட்கத் தெரியாது; எப்படிக் கேட்பதென்பதும் தெரியாது; அப்பெரியார்கள் நமககு என்னென்ன பொருட்கள் வேண்டு மென்பதை அறிந்து அவைகளைக் கேட்கவேண்டிய முறையையும் நமக்குக் காட்டியுள்ளார்கள். நாமே பகவானைத் தோத்திரம் செய்து கேட்பதைவிட,

" முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்
பொன்னேபோற் போறறி"

ஆசாரியர்களுடைய பாசுரங்களை உருக்கமாகத் தினமும் பாராயணம் செய்து வந்தால் எத்தகைய இடுக்கணும் கதிரவன் முன் பனியாய் நீங்கிப் பேரின்பம் பெறலாம்.

**ஆகவே, இந்நூலில் திராவிட வேதங்களினின்றும் தேர்ந்தெடுக்கப் பட்ட தெய்வீகத தன்மை மிகுந்தனவும் கல்வி, செல்வம் ஆகியவற்றை அளிக்கக்கூடியனவும் ஆபத்து, துன்பம் முதலியவைகளைப் போக்கக் கூடியனவும் ஆகிய சிறந்த பாசுரங்களும் சேர்க்கப்பட்டுள்ளன.**

எனவே, புராணப் பிரசித்தமான உமாஸம்ஹிதையை ஆதாரமாகக் கொண்டும், ஆன்றறிந்து அடங்கிய பொய்யா நாவிற் புலமை மிக்க சான்றோர்களின் அனுமதி பெற்றும் "ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் திராவிட வேதங்களும்" என்ற இந்தப் புத்தகத்தைப் பிரசுரித்துள்ளோம்.

## இந்தப் புத்தகம் எதற்காக?

*"ஆண்டவனின் படைப்புத் திறம் ஒரு விசித்திரம்; அவனது அழிவு வேலையும் ஒரு விசித்திரந்தான்.

"ஒரு புறத்தில் தூய்மையைப் பரப்பிவைக்கிறான்; எதிர்ப் புறத்தில் கயமையையும் தூண்டிவைக்கிறான். அழகையும் அற்புதத்தையும் படைக்கிறான் ஒரு புறத்தில்; அவலட்சணத்தை யும் மறந்துவிடாமல் கூடவே குவித்துவைக்கிறான் — மறுபுறத்தில்.

* கல்கி", 18-9-1960.

"அத்துடனு? அவனது பராமரிப்பில்தான் எத்தகைய ஜாலங்கள்? தன் ஜாலங்களை எங்கேயோ இருந்தபடி கண்டு சிரிக்கிறுன். அவனது சிரிப்பொலியின் பெயர் விதி!"

இந்த விதியினுல் ஏற்படும் தீய விளைவுகளைப் பக்தியால் சமாளிக்கலாம்; விதியினுல் விளையும் இன்பங்களைப் பக்தியால் பெருக்கலாம்.

பக்தியைப் பேரளவில் பரப்பவே, முன் காலத்தில் நம் தேசத்தை ஆண்ட அரசர்கள் தெய்வ நம்பிக்கை மிகுந்து தெய்வ வழிபாட்டில் அதிக அக்கறை காட்டி வந்தனர்.

கோயில்களில் பூஜை செய்பவர் பகவானுக்குப் பாமாலையும் பூமாலையும் சூட்டிப் பூஜை செய்து கடைசியில் "தேசமெல்லாம் சுகமாக இருக்கவேண்டும்" (ஸர்வே ஜநாஸ் ஸுகிநோபவந்து) என்று பிரார்த்தனை செய்வது வழக்கம். அதனுல் நாட்டுக்காவது, தனி மனிதனுக்காவது எவ்விதக் கெடுதியும் நேராமலிருந்தது; மாதம் மும்மாரி பொழிந்தது; நாடு செழித்தது. மக்களும் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தனர்.

ஆனுல், இன்று நம் நாட்டின் நிலை என்ன? நாம் எல்லோரும் எதிர்பார்த்த சுதந்திரம் கிடைத்தது. ஆயினும் சுதந்திரத்தால் நாம் எதிர்பார்த்த சுகம் கிடைக்கவில்லை. அதற்குப் பதிலாக நம்மைச் சுற்றி எங்கே பார்த்தாலும் கஷ்டம்! கஷ்டம்! கஷ்டம்! வாழ்க்கைக்கு மிகவும் அவசியமான பொருள்களின் விலைவாசிகள் விஷம்போல் ஏறி வருகின்றன. கள்ள மார்க்கெட் வியாபாரத்தாலும், கெட்ட வழக்கங்களாலும் மனிதன் மனிதனையே விழுங்க முயலுகிறுன். அருகதையற்றவன், தன் அதிகாரியிடம் கோள் சொல்லி, அருகதையும் அநுபவமும் நிறைந்த, முன்னேற வேண்டியவனைப் புறக்கணிக்கச் செய்து, தன் அதிகாரத்தில் உயர்வைப் பெறுகிறுன். இந்த அநீதிகள் எல்லாம் ஒழியவேண்டுமானுல், கடவுளைக் குறித்து தினந்தோறும் கூட்டுப் பிரார்த்தனை (Mass-Prayers) நடத்தவேண்டும். *கூட்டுப் பிரார்த்தனையின் மகிமையாலேயே நாம் சுதந்திரத்தை அடையமுடியும் என்பதை அண்ணல் காந்திமகான் தன் அன்றுட வாழ்க்கையில் செய்து

* "Of the twelve Alvārs, Nammalvar ls considered to be the greatest. Taking the Alvars as a 'whole', Nammalvar is considered to be their soul. The very term 'Nammalvar' (which means our Alvar) shows the esteem in whice he was and is held by the Vaishnavites. But we can go further and say that not only Vaishnavites but also all those whose hearts are thrilled by the utterances of the mystics, can claim Nammalvar as their own.

[Contd. on the next Page

காட்டினார். ஆகையால், ஒவ்வொருவரும் தங்கள் வீட்டில் ராமாயணத்தையும, நாலாயிர திவ்யப்ரபந்தம், தேவாரம், திருவாசகம் முதலியவைகளையும் தினந்தோறும் பாராயணம் செய்து வந்தால், அதுவே ஒரு வகையில் கூட்டுப் பிரார்த்தனைக்கு ஒப்பாகி, நாட்டுக்கு நன்மை உண்டாக்கும் என்பது எங்களுடைய திடமான நம்பிக்கை. முக்கியமாக மேற்படி கிரந்தங்களையும் பாசுரங்களையும் முழுவதும் பாராயணம் செய்வதற்குச் சௌகரியமில்லாதவர்கள் சில ஸர்க்கங்களையாவது அல்லது சில பாசுரங்களையாவது நாள்தோறும் பாராயணம் செய்வார்களானால் அதன்மூலம் அவர்களுடைய கஷ்டங்களெல்லாம் நீங்கி சுகம் உண்டாகும்.

நம் முன்னோர்கள் தம் நலத்துக்காக மட்டும் அல்லாமல், உலகமெல்லாம் உய்யவேண்டும் என்னும் பரந்த நோக்கத்துடனேயே தெய்வ வழிபாட்டைச் செய்து வந்தார்கள். அவ்விதம் அனைவரும் நாள்தோறும் தாம் செய்யும் பாராயணத்தால் 'எல்லாரும் இன்புற்றிருக்கவேண்டும்' என்னும் நல்ல மனப்பான்மையுடன் பாராயணம் செய்வார்களாக !

அனைவரும் முக்கியமாக மனத்தில் இருத்திக்கொள்ள வேண்டிய மற்றொரு விஷயமும் உண்டு. நாம் தெய்வத்தை வழிபாடு செய்வது இம்மைப் பயன் ஒன்றுக்காக மாத்திரம் இல்லை. இம்மைப் பயன் அழிவுள்ளது; சுக துக்கங்களுக்குக் காரண

---

Contd. from the previous Page]

"Nammalvar worships the Supreme as Vishnu. But he does not frown upon those who worship the Supreme under other names. He is sure that all true worship must be of the Supreme. Every one, according to his capacity, worships the Supreme as he conceives It and attains It. Hence there is no deficiency in the object of worship. In other words, his message is: 'Let the worship be sincere; it will reach the Supreme.'

"It is usual to deplore Kaliyuga as a period wholly given over to wickedness. Nammalvar's remedy is sincere and joint worship. He says, 'If you sincerely and jointly worship, there will be no Kaliyuga.' This is sound practical advice. If we all worship the Supreme, the One with infinite auspicious qualities, how can there be wickedness? If light is let in, how can there be darkness? There is no use deploring darkness when we are enveloped by it. Let us let in light. Darkness will automatically disappear. Even so, worship of the Supreme is the antidote to wickedness."

— Dr. V. A. Devasenapathi (in "The Bhavan's Journal")

மான மறுபிறப்பை அளிக்கவல்லது. ஆகையால், அழிவற்ற மறுமைப் பயனை, அதாவது பிறப்பில்லாத முக்தி நிலையை அடைவதே நம் வழிபாட்டின் முக்கிய நோக்கமாக இருத்தல் வேண்டும். இதையே நம் முன்னோர்கள் வாழையடி வாழையாகச் சொல்லி வந்திருக்கிறார்கள்.

அப்படி ஒவ்வொருவரும் இம்மை மறுமைப் பயன்களையும் உலக நன்மையையும் விரும்பி, இந்தப் புத்தகத்திலுள்ள ராமாயண ஸர்க்கங்களையும் திராவிட வேதப் பாசுரங்களையும், பாராயணம் செய்து வருவார்களானால் நம் நாட்டில் இன்று இருக்கும் அவல நிலை ஒழிந்து, ராமராஜ்ய சௌக்கியங்கள் உண்டாகும் என்பது திண்ணம்.

ஸம்ஸ்கிருதத்தில் ஓரளவு அறிவு பெற்றவர்களே ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தைத் தொடர்ந்து தினமும் பாராயணம் செய்து வர முடியும். ஸ்ரீமத் ராமாயணத்தை முழுவதும் பாராயணம் செய்யமுடியாதவர் ஸுந்தர காண்டத்தையேனும் பாராயணம் செய்வது சிறந்தது. அதுவும் முடியாதவர்கள் விசேஷ பலனைக் கொடுக்கக்கூடிய தேர்ந்தெடுக்கப்பட்ட ஸர்க்கங்களில் தமக்குத் தேவையானதொன்றை மட்டும் முறையாகப் பாராயணம் செய்து வரலாம்.

அதுபோலவே, ஆழ்வார்கள், நாயன்மார் முதலியவர்கள அருளிய பாசுரங்களையும் முழுவதும் படிப்பது விசேஷமானது. ஆனாலும் சில பகுதிகளைப் படிப்பதால் விசேஷ நன்மைகள் உண்டாகும். ஸகல காரியங்களிலும் ஸித்தி உண்டாகும்.

ஸம்ஸ்கிருதம் தெரியாதவர்கள் ஸ்ரீமத் ராமாயணத்தை எந்த மொழியிலும் படித்துப் பலன் பெறலாம். ஏனெனில், நமக்கு ஸம்ஸ்கிருதம் தெரியாமல் இருக்கலாம் ; ஆனால் ஆண்டவனுக்கு எல்லா மொழியும் தெரியும் ; புரியும். ஆகவே

> **"வடகலை தென்கலை வடுகு கன்னடம்**
> **இடமுள பாடையா தொன்றி னாயினும்**
> **திடமுள ரகுகுலத் திராமன் தன்கதை**
> **அடைவுடன் கேட்பவர் அமரர் ஆவரே"**

என்று கம்பர் கூறியபடி, எம்மொழியிலும ராமாயணத்தைப் படித்துப் பலன் பெறலாம். அதனாலேயே ஸம்ஸ்கிருதம் தெரியாத தமிழ் மக்களனைவரும் ராமாயண பாராயணம் செய்து பலனை அடையவேண்டுமென்னும் நோக்கத்துடன் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்திற்குக் கீர்த்தனாசார்ய ஸ்ரீ C. R. ஸ்ரீநிவாஸ அய்யங்கார், B.A. அவர்கள் செய்த உயர்ந்த மொழிபெயர்ப்பு இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதைப் பாராயணம் செய்தாலே மூலக் கிரந்தத்தைப் பாராயணம் செய்த பலன் உண்டாகும்.

இனி, தங்கள் குறை என்ன? அதை நிவர்த்திக்க ராமாயணத்தின் எந்த ஸர்க்கங்களைப் பாராயணம் செய்ய வேண்டும்? அதற்கு நிவேதனப் பொருள்களும் மற்ற நியமங்களும் என்ன? இந்த விவரங்களைப் பக்கங்கள் (xxxi), (xxxii)-ல் அட்டவணையிட்டுக் காட்டியுள்ளோம்.

இவ்வாறே பகவானுடைய அனந்த கல்யாண குணங்களில் ஈடுபட்டு ஆழ்வார்களும் நாயன்மார்களும் மற்ற அடியார்களும் மனம் நெகிழ்ந்து அருளிய பல இன்னிசைப் பாசுரங்களையும் அவ்வப்போது நெஞ்சுருகிப் பாராயணம் செய்து வருதல் ஸகல காரியங்களையும் ஸித்திபெறச் செய்யும். ஆகவே, அத்தகைய அருட்பாடல்களையும் வகைப்படுத்தி இந்நூலில் கொடுத்துள்ளோம், அவைகளின்படி பாராயணம் செய்து, பக்தர்கள் "ஸகல காரியங்களிலும் ஸித்தி" பெறவேண்டுமென்று ஸர்வேசுவரனைத் துதிக்கின்றோம்.

மேலும் மக்களை ஆட்கொள்ளவே எம்பெருமான் இந்நிலவுலகில் ஆங்காங்குக் கோயில் கொண்டருளியிருக்கிறார். இதனை மணிவாசகப் பெருமான் "**வான்பழித்து இம்மண் புகுந்து மனிதரை ஆட்கொண்ட வள்ளல்**" என்று போற்றுகிறார். அத்தகைய கோயில்கள் பலவற்றுக்கும் சென்று அவன் அன்பிலே திளைத்து பக்தியிலே ஊறி அவனை நினைந்து நினைந்து உருகி உருகிப் பதறிக் கதறிப் பாசுரம் பல செய்து மனித குலத்துக்கே வழி காட்டிகளாக இருக்கிறார்கள் ஆழ்வார்களும் நாயன்மார்களும். தீயன கடிந்து நல்லன இவையென நாட்டிப் பேரின்பம் பெற்றுப் பெருவாழ்வு வாழும் வகையிஃதெனப் பன்னிப் பன்னிப் பலவகையாலும் உணர்த்தியிருக்கிறார்கள். ஆழ்வாராதிகளாலும் நாயன்மார் முதலியவர்களாலும் பாடப்பெற்ற புகழ்வாய்ந்த பெரிய கோயில்கள் இமசேது பரியந்தம் ஏராளமாக இருக்கின்றன. எல்லா கோயில்களுக்கும் எல்லாரும் சென்று எம்பிரானைத் தரிசனம் செய்வது எளிதல்ல. ஆகையால் இயன்றவரை கோயில்களுக்குச் சென்று கண்குளிரக் கண்டுகளித்துத் துதித்து வழிபடுதலும் பகவானுடைய அனுக்ரஹத்தைப் பெற்று ஸகல காரியங்களிலும் ஸித்தி பெறுவதற்கு மற்றொரு வழியாகும். எனவே, பல க்ஷேத்ரங்களில் கோயில் கொண்டுள்ள ஸ்ரீ ராமபிரானின் திருவுருவப் படங்களையும் இப்புத்தகத்தில் சேர்த்துள்ளோம்.

**ஸர்வே ஜனாஸ் ஸுகினோ பவந்து ||**

**ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி :**

—**கீழாத்தூர் ஸ்ரீநிவாஸாச்சாரியர், P.O.L.,**

நியாயசிரோமணி, ஹிந்தீ விசாரத்,

(பரீக்ஷாமந்த்ரி, ஸம்ஸ்க்ருத பாஷா ப்ரசாரிணீ ஸபா)

**பதிப்பாசிரியர்.**

**ஸகல காரிய ஸித்தி பெற சுலபமான வழிகள்**

1. அவரவர் ஸம்ப்ரதாயப்படி நெற்றிக்குறி இட்டுக்கொள்ளுதல்; சுருக்கமாகவாவது நித்யகர்மாநுஷ்டானங்களைச் செய்தல்;
2. ஸ்ரீ ராமநாம ஜபம்;
3. பெரியோர்களிடம் பணிவும் மதிப்பும் கொண்டிருத்தல்;
4. இவ்வனைத்துக்கும் மேலாக, மனத்தாலும் வாக்கினாலும் செய்கையினாலும் பிறர்க்குக் கெடுதல் சிறிதும் செய்யாதிருத்தல்;
5. எவரிடமும் த்வேஷ மனப்பான்மை காட்டாதிருத்தல்.

# ருக்வேத மந்த்ரங்களும் ஸகல காரிய ஸித்தியும்

ஸ்ரீ சௌநகர் எனும் முனிவர் ருக்வேதத்தில் உள்ள மந்த்ரங்களைக் கொண்டு இஷ்டப்ராப்தி அநிஷ்ட நிவ்ருத்திகளைப் பெறும் முறைமை விளக்கி ருக்விதாநம் எனும் நூலை இயற்றியுள்ளார். திருவானைக்காவல் வாஸியும் ருக்வேதத்தில் தலைசிறந்த பண்டிதராக அகில பாரதத்திலும் போற்றப்படுபவருமான தசக்ரந்தி K. S. வெங்கட்ராம சாஸ்த்ரிகள் இதனை "ருங்மந்த்ர பரிஹாரம்" எனும் பெயருடன் வெளியிட்டிருக்கிறார்.

அன்பர்கள் ஸ்ரீமத் ராமாயணத்தைப் பாராயணம் செய்யும் பொழுது முன்போ பின்போ இந்த ருங்மந்த்ரங்களையும் தம்மால் முடிந்த ஆவ்ருத்தி ஜபம் செய்து வந்தால் அனுபானத்துடன் அருந்தப்படும் ஔஷதம் விரைவில் பலமளிப்பதுபோல் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் விரைவில் பலனைத் தட்டின்றி அளிக்கும்.

இந்த உத்தேசத்துடன் அந்த மந்த்ரங்களின் ருஷிச் சந்தோ தேவதாந்யாஸத்துடன் விநியோகமும் தரப்பட்டுள்ளது. ஆஸ்திகர்கள் உபயோகித்துப் பயனடையவேண்டும் என்று பகவானைப் பிரார்த்திக்கிறோம்.

இதற்கு அனுமதி தந்த தசக்ரந்தி ருக்வேத கனபாடி K. S. வெங்கட்ராம சாஸ்திரிகளுக்கு நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

இதில் தேவையான மந்த்ரங்களைத் தம் ஆசார்யரிடமிருந்து உபதேசம் செய்துகொள்ள வேண்டுவது அவசியம். அதனால் அக்ஷரங்களைப் பிழையற உச்சரிக்கவும் மந்த்ரங்களைச் சக்தியுள்ளதாகச் செய்யவும் ஸௌகர்யப்படும். ரொம்ப ஆசாரத்துடனும், ச்ரத்தையுடனும், நம்பிக்கையுடனும் பாராயணம் செய்தல் வேண்டும்.

லிப்கோ பதிப்பகத்தார்.

ஸ்ரீ ।

# ருக்வேத மந்த்ரங்களும் ஸகல கார்ய ஸித்தியும்

### 1. நற்பணியில் இடையூறு நீங்க

கணாநாம் இத்யாதி மந்த்ரஸ்ய க்ருத்ஸமத: ருஷி:, ஜகதீ சந்த:, ப்ரஹ்மணஸ்பதிர்தேவதா. நிர்விக்ந தர்மகார்ய ஸித்த்யர்த்தே ஜபே விநியோக:।

"கணாநாம் த்வா கணபதிகும் ஹவாமஹே
கவிம் கவீநாம் உபமஶ்ர வஸ்தமம் ।
ஜ்யேஷ்டராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்பத
ஆந: ஶ்ருண்வந் ஊதிபி: ஸீத ஸாதநம் ॥"

108 தடவை ஜபம்

### 2. செய்தொழிலில் தனலாபமுண்டாக

ஶசீவ இத்யாதி மந்த்ரஸ்ய ஆங்கிரஸ: ஸவ்ய: ருஷி:, ஜகதீ சந்த:, இந்த்ரோ தேவதா. தனலாப ஸித்த்யர்த்தே ஜபே விநியோக: ॥

"ஶசீவ இந்த்ர புருக்ருத் த்யுமத்தம
தவேதித மபிதஶ் சேகிதே வஸு ।
அத: ஸங்க்ருப்யாபிபூத ஆ பர
மா த்வாயதோ ஜரிது: காமமூநயீ: ॥"

ப்ரதி தினமும் 10 தடவை ஜபம்

### 3. கல்யாணமாகாதவர்களுக்குக் கல்யாணம் நடக்க

ப்ராத ரக்நி மித்யாதி மந்த்ரஸ்ய மைத்ராவருணி: வஸிஷ்டருஷி:, ஜகதீ சந்த:, அக்நிர்தேவதா, அபீப்ஸித (வர) (வதூ) ஸித்த்யர்த்தே ஜபே விநியோக: ॥

"ப்ராதரக்நிம் ப்ராதரிந்த்ரம் ஹவாமஹே
ப்ராதர்மித்ரா வருணா ப்ராதரஶ்விநா ।
ப்ராதர்பகம் பூஷணம் ப்ரஹ்மணஸ்பதிம்
ப்ராதஸ்ஸோமம் உத ருத்ரம் ஹுவேம ॥"

லக்ஷம் தடவை ஜபித்து 100 தடவை பொரியால் ஹோமம் செய்தால் பொருத்தமான கன்யா (வர) லாபம் ஏற்படும்.

### 4. மோக்ஷபலன் ஸித்திக்க

இதம் விஷ்ணுரித்யாதி மந்த்ரஸ்ய மேதாதிதி: காண்வ: ருஷி:, அநுஷ்டுப் சந்த்:, விஷ்ணுர்தேவதா. மோக்ஷஸித்த்யர்த்தே ஜபே விநியோக: ||

"இதம் விஷ்ணுர் விசக்ரமே
த்ரே தா நிதத்தே பதம் |
ஸமூடமஸ்ய பாகும்ஸுரே "

எப்பொழுதும் ஜபம் செய்யவும்

### 5. அபஸ்மாராதிகள் நீங்க

தீவ்ரஸ்யேத்யாதி மந்த்ரஸ்ய வைஶ்வாமித்ர: பூரணோ ருஷி:, த்ரிஷ்டுப் சந்த:, இந்த்ரோ தேவதா.
அபஸ்மார (வ்யாதி) நிவாரணார்த்தே ஜபே விநியோக: ||

"தீவ்ரஸ்யாஸ்ய வயஸோ அஸ்ய பாஹி
ஸர்வரதா விஹரீ இஹ முஞ்ச |
இந்த்ர மாத்வா யஜமாநாஸோ அன்யே
நிரீரமந் துப்ய மிமே ஸுதாஸ: ||"

ப்ரதி தினம் 108 தடவை ஜபம்

### 6. பேய், பிசாசு, பில்லி சூன்யம் நீங்க

ராத்ரீ இத்யாதி மந்த்ரஸ்ய ஸௌபர: குசிக: ருஷி:, காயத்ரீ சந்த்:, ராத்ரிர் தேவதா.
பிஶாசாதி பாதா நிவ்ருத்த்யர்த்தே ஜபே விநியோக: |

"ராத்ரீ வ்யக்யதாயதீ, புருத்ராதேவ்யக்ஷபி: |
விஶ்வா அதி ஶ்ரியோ தித |"

தினமும் ராத்திரி 3 தடவை ஜபிக்கவும்

### 7. பைத்தியம் தெளிய

ஈளே இத்யாதி மந்த்ரஸ்ய ஆங்கிரஸ: குத்ஸருஷி:, ஜகதீ சந்த: அக்நிர்தேவதா! மௌட்ய நிவ்ருத்தி பூர்வக ஸம்யக்ஜ்ஞாந ஸித்த்யர்தே ஜபே விநியோக: ||

ஈளே த்யாவாப்ருதிவீ பூர்வசித்தயே
அக்நிம் தர்மம் ஸுருசம் யாமந்நிஷ்டயே |
யாபிர்பரேகார மம்ஶாய ஜின்வதஸ்
தாபிருஷு ஊதிபி ரஶ்விநா கதம் ||"

பில்வ மரத்தினடியில் 10,000 ஜபம்

## 8. தரித்திர நிலை நீங்க

ஸக்துமித்யாதி மந்த்ரஸ்ய ஆங்கிரஸ: ப்ருஹஸ்பதி: ருஷி: த்ரிஷ்டுப சந்த:, ஜ்ஞாநம் தேவதா. தாத்ர்யநிவ்ருத்த்யர்த்தே ஜபே விநியோக: ।

"ஸக்து மிவ திதஉநா புநந்தோ
யத்ர தீரா மநஸா வாச மக்ரத ।
அத்ராஸகாய: ஸக்யாநி ஜாநதே
பத்ரைஷாம் லக்ஷ்மீர் நிஹிதாதி வாசி ॥

தினம் 100 தடவை ஜபம்

## 9. அடுத்தடுத்து வரும் ஆபத்து நீங்க

ஸுகோ ஹீவோ இத்யாதி மந்த்ரஸ்ய க்ருத்ஸமத: ருஷி:, த்ரிஷ்டுப் சந்த:, ஆதித்யா: தேவதா. ஸர்வ ஆபந்நிவாரணார்த்தே ஜபே விநியோக: ।

ஸுகோ ஹி வோ அர்யமன் மித்ர பந்தா:
அந்ருக்ஷரோ வருண ஸாது ரஸ்தி ।
தேநாதித்யா அதி வோசதா நோ
யச்சதா நோ துஷ்பரிஹந்து ஸர்ம ॥"

தினமும் 100 தடவை ஜபம்

## 10. எதிர்பாராது வந்த ஆபத்து நீங்க

அயம் தேவாயேத்யாதி மந்த்ரஸ்ய காண்வோ மேதாதிதி: ருஷி:, காயத்ரீ சந்த:, ருபவோ தேவதா.

அதர்க்கித ஸத்ருக்ருதாபத் விமோசநார்த்தே ஜபே விநியோக: ॥

"அயம் தேவாய ஜன்மநே
ஸ்தோமோ விப்ரேபி ராஸயா ।
அகாரி ரத்ம தாதம: ॥"

சிவ ஸந்நிதியில் தினமும் 13 தடவை ஜபம்

## 11. விட்டுப் பிரிந்தவர் வந்து சேர

ஸம்பூஷன் இத்யாதி மந்த்ரஸ்ய கௌர: கண்வோ ருஷி:, காயத்ரீ சந்த:, விஷ்ணுர் தேவதா. வியுக்த பந்துஜந ஸங்கமார்த்தே ஜபே விநியோக: ।

"ஸம்பூஷந் நத்வநாஸ்தி
ரவ்யம் ஹோ விமுசோநபாத் ।
ஸக்ஷ்வா தேவ ப்ரண ஸ்புர: ॥"

யதா சக்தி ஜபம்

## 12. துஸ்வப்ன தோஷம் நீங்க

அத ஸ்வப்நஸ்ய இத்யாதி மந்த்ரஸ்ய தைர்க்கதமஸ:
ஔபஜ: சக்ஷீவான் ருஷி:, காயத்ரீ சந்த:, அஸ்விநௌ தேவதே।
துஸ்வப்ந நிவ்ருத்த்யர்த்தே ஜபே விநியோக: ।

அத ஸ்வப்நஸ்ய நிர்விதே
ऽபுஞ்ஜதஸ்ச ரேவத: ।
உபாதா பஸ்ரி நஸ்யத:

1008 தடவை ஜபம் செய்யவும்.

## 13. பகவதபசாரம் நீங்க

தத்விப்ராஸ இதி மந்த்ரஸ்ய காண்வ: மேதாதிதி ருஷி: காயத்ரீசந்த: விஷ்ணுர் தேவதா. அபசார பரிஹாரார்த்தே ஜபே விநியோக: ॥

"தத்விப்ராஸோ விபந்யவோ
ஜாக்ருவாகும் ஸஸ் ஸமிந்ததே ।
ஒர்யத் மரமம் பதம் ॥"

யதா சக்தி ஜபம்

## 14. ஸத்புத்ரன் உண்டாக

இமாம் த்வமிந்த்ர இத்யாதி மந்த்ரஸ்ய ஸாவித்ரீ ருஷி: அநுஷ்டுப் சந்த: ஸாவித்ரீ தேவதா । ஜீவத்ஸுகுணஸுபுத்ர லாபார்த்தே ஜபே விநியோக: ॥

"இமாம் த்வமிந்த்ர மீட்வ: ஸுபுத்ராம் ஸுபகாம் க்ருணு ।
தஸ்யாஸ்யாம் புத்ரா நாதேஹி பதி மேகாதசம் க்ருதி ॥"

தினம் 100 தடவை ஜபித்தால அறிவும் பாக்யமும் நீண்ட ஆயுளும் உள்ள பிள்ளைகளை அடைவார்கள்.

## 15. ஸுகப்ரஸவம் உண்டாக

ஸயோ ஜருஷேத்யாதி மந்த்ரஸ்ய
வார்ஷாகிர: ருஷி: த்ரிஷ்டுப் சந்த: இந்த்ரோ தேவதா
(ஸுகப்ரஸவஸித்த்யர்த்தே ஜபே விநியோக:)

ஸயோ வ்ருஷா வ்ருஷ்ணயேபி: ஸமோகா
மஹோ திவ: ப்ருதிவ்யாஶ்ச ஸம்ராட் ।
ஸதீ ந ஸத்வா ஹவ்யோ பரேஷு
மருத்வாந் நோ பவத்விந்த்ர ஊதீ ॥

சிவாலயத்தில் யதாசக்தி ஜபம்

## 16. சிறைவாஸ பயம் நீங்க

த்ருவாஸு இத்யாதி மந்த்ரஸ்ய மைத்ராவருணிர்
வஸிஷ்ட: ருஷி: த்ருஷ்டுப் சந்த: வருணோ தேவதா ।
காராக்ருஹவாஸ நிவ்ருத்த்யர்த்தே ஜபே விநியோக:

"த்ருவாஸுத்வா ஸுக்ஷிதிஷு க்ஷியந்தோ
வயஸ்மத் பாஶம் வருணோ முமோசத் ।
அவோ வந்வாநா அதிதே ருபஸ்தாத்
யூயம் பாத ஸ்வஸ்திபி: ஸதா ந: ॥

30000 தடவை ஜபம்

## 17. துர்நடத்தையுள்ள பிள்ளை நல்லவனாக

யஜ்ஞோ தேவா நாமித்யாதி மந்த்ரஸ்ய ஆங்கிரஸ: குத்ஸ: ருஷி: ஜகதீ சந்த: விஶ்வே தேவா தேவதா । குமாரஸ்ய ஸுகுண ப்ராப்த்யர்த்தே ஜபே விநியோக: ॥

"யஜ்ஞோ தேவாநாம் ப்ரத்யேதி ஸும்நம்
ஆதித்யாஸோ பவதா ம்ருளயந்த: ।
ஆவோர்வாசீ ஸுமதிர் வவ்ருத்யா—
தம்ஹோ ஶ்சித்யா வரிவோ வித்தராஸத் ॥"

யதா சக்தி ஜபம்

## 18. நினைத்த காரியம் நிறைவேற

மந்தஸ்யேத்யாதி மந்த்ரஸ்ய க்ருத்ஸமத: ருஷி:, ஜகதீ சந்த ருது தேவதா: தேவதா। சிந்திதமநோரதாவாப்த்யர்த்தே ஜபே விநியோக: ॥

"மந்த்ஸ்வ ஹோத்ராத் அநுஜோஷாமந்தஸோ—
ऽத்வர்யவஸ் ஸபூர்ணா வஷ்டயாஸிசம் ।
தஸ்மா ஏதம் பரத தத்வஶோ ததிர்—
ஹோத்ராத் ஸோமம் த்ரவிணோத: பிப ருதுபி:

யதா சக்தி ஜபம்

### 19. ராஜாங்கக் கார்யங்களில் வெற்றி பெற

க்ருணுஷ்வேத்யாதி மந்த்ரஸ்ய கௌதமோ வாமதேவோ ருஷி:, த்ருஷ்டுப் சந்த:, ரக்ஷோ ஹா அக்நிர் தேவதா, ராஜத்வாரே ஸர்வாநுகூல்ய ஸித்த்யர்த்தே ஜபே விநியோக: ||

"க்ருணுஷ்வ பாஜ: ப்ரஸிதிம் ந ப்ருத்வீம்
யாஹி ராஜே வாமவாம் இபேந |
த்ருஷ்வீமநு ப்ரஸிதிம் த்ருணாநோ
அஸ்தாஸி வித்த்ய ரக்ஷஸஸ்தபிஷ்டை: ||"

யதா சக்தி ஜபம்

### 20. தம்பதிகளுக்குள் ப்ரேமை பெருக

ஸமஞ்ஜந்து இத்யாதி மந்த்ரஸ்ய ஸாவித்ரீருஷி: அநுஷ்டுப் சந்த: ஸாவித்ரீ தேவதா| தம்பத்யோ: அவிச்சிந்நப்ரீதி அபிவ்ருத்த்யர்த்தே ஜபே விநியோக: ||

"ஸமஞ்ஜந்து விஶ்வே தேவா:
ஸமாபோ ஹ்ருதயாநி நௌ |
ஸம் மாத ரிஶ்வா ஸம் தாதா
ஸமுதேஷ்ட்ரீ ததாது நௌ ||"

யதா சக்தி ஜபம்

## முக்கியமான த்யான சுலோகங்கள்

ஸ்ரீமத் ராமாயண பாராயணம் செய்வதற்குமுனபு, கீழ்க்கண்ட த்யான ஶ்லோகங்களைப் படிக்கவேண்டும்:—

### ஸ்ரீ வால்மீகி

கூஜந்தம் ராம ராமேதி மதுரம் மதுராக்ஷரம் |
ஆருஹ்ய கவிதா சாகாம் வந்தே வால்மீகி கோகிலம் ||
வால்மீகேர் முநிஸிம்ஹஸ்ய கவிதா வந சாரிண: |
ச்ருண்வன் ராமகதா நாதம் கோ ந யாதி பராம்கதிம் ||

### ஸ்ரீ ஹநுமான்

கோஷ்பதீக்ருத வாராசிம் மசகீக்ருத ராக்ஷஸம் |
ராமாயண மஹாமாலா ரத்நம் வந்தே(அ) நிலாத்மஜம் ||
யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம்
தத்ர தத்ர க்ருதமஸ்தகாஞ்ஜலிம் |
பாஷ்ப வாரி பரிபூர்ண லோசநம்
மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம் ||

### ஸ்ரீ ராமன்

வைதேஹீ ஸஹிதம் ஸுரத்ருமதலே ஹைமே மஹாமண்டபே
மத்யே புஷ்பகமாஸநே மணிமயே வீராஸநே ஸுஸ்த்திதம் |
அக்ரே வாசயதி ப்ரபஞ்ஜநஸுதே தத்வம் முனிப்ய: பரம்
வ்யாக்யாந்தம் பரதாதிபி: பரிவ்ருதம் ராமம் பஜே ச்யாமளம் ||

## முக்கியமான மங்கள சுலோகங்கள்

ஸ்ரீமத் ராமாயண பாராயணம் முடிந்தபிறகு, கீழ்க்கண்ட ஸ்லோகங்களைப் படிக்கவேண்டும் :—

ஸ்வஸ்தி ப்ரஜாப்ய: பரிபாலயந்தாம்
ந்யாய்யேன மார்கேண மஹீம் மஹீசா: |
கோப்ராஹ்மணேப்ய: சுபமஸ்து நித்யம்
லோகாஸ் ஸமஸ்தாஸ் ஸுகினோ பவந்து ||

காலே வர்ஷது பர்ஜந்ய: ப்ருதிவீ ஸஸ்யசாலிநீ |
தேசோயம் க்ஷோபரஹித: ப்ராஹ்மணாஸ்ஸந்து நிர்ப்பயா: ||
மங்களம் கோஸலேந்த்ராய மஹநீய குணாப்தயே |
சக்ரவர்த்தி தநூஜாய சார்வபௌமாய மங்களம் ||
வேத வேதாந்த வேத்யாய மேக ச்யாமள மூர்த்தயே |
பும்ஸாம் மோஹந ரூபாய புண்ய ச்லோகாய மங்களம் ||
விச்வாமித்ராந்தரங்காய மிதிலா நகரீ பதே:
பாக்யாநாம் பரிபாகாய பவ்யரூபாய மங்களம் ||
பித்ரு பக்தாய ஸததம் ப்ராத்ருபிஸ்ஸஹ ஸீதயா |
நந்திதாகில லோகாய ராமபத்ராய மங்களம் ||
த்யக்த ஸாகேத வாஸாய சித்ரகூட விஹாரிணே |
ஸேவ்யாய ஸர்வயமிநாம் தீரோதாராய மங்களம் ||
ஸௌமித்ரிணா ச ஜானக்யா சாபபாணாஸி தாரிணே |
ஸம்ஸேவ்யாய ஸதா பக்த்யா ஸ்வாமிநே மம மங்களம் |
தண்டகாரண்யவாஸாய கண்டிதாமர சத்ரவே |
க்ருத்ர ராஜாய பக்தாய முக்திதாயாஸ்து மங்களம் ||
ஸாதரம் சபரீ தத்த பலமூலாபிலாஷிணே |
ஸௌலப்ய பரிபூர்ணாய ஸத்வோத்ரிக்தாய மங்களம் ||
ஹநுமத் ஸமவேதாய ஹரீசாபீஷ்ட தாயிநே |
வாலி ப்ரமதநாயாஸ்து மஹா தீராய மங்களம் ||
ஸ்ரீமதே ரகுவீராய ஸேதூல்லங்கித ஸிந்தவே |
ஜித ராக்ஷஸ ராஜாய ரணதீராய மங்களம் ||
ஆஸாத்ய நகரீம் திவ்யாம் அபிஷிக்தாய ஸீதயா |
ராஜாதிராஜ ராஜாய ராமபத்ராய மங்களம் ||
மங்களாசாஸந பரை: மதாசார்ய புரோகமை: |
ஸர்வைச்ச பூர்வைராசார்யை: ஸத்க்ருதாயாஸ்து மங்களம் ||

ஸ்ரீமத் ராமாயணத்தில் சில கட்டங்களைப் பாராயணம் செய்வதால், அவரவர்களுடைய கோரிக்கைகள் நிறைவேறுமென்று வாயுபுராணத்தைச் சேர்ந்த உமா ஸம்ஹிதையில் சொல்லிய பாராயணக்கிரம விவரம்

| வரிசை எண் | குறிப்பிட்ட காரியங்கள் | காண்டம் | பாராயண ஸர்க்கங்கள் | பாராயண கட்டத்தின பெயர் | பாராயணம் செய்யவேண்டிய காலம் | நிவேதனப் பொருள் முதலியன |
|---|---|---|---|---|---|---|
| 1 | எடுத்த கருமகாரியம் நிறைவேற | அயோ | 21, 22, 23, 24, 25 | கௌஸல்யா ராம ஸம்வாதம் | காலை அல்லது மத்யானம் | 5 வாழைப்பழங்கள் |
| 2 | செய்தொழிலில் தனலாபமுண்டாக | ,, | 32 | யாத்ராதானம் | காலை, மத்யானம், மாலை | ,, |
| 3 | கல்யாணமாகாதவர்களுக்கு, கல்யாணம நடக்க | பால | 73 | ஸீதா கல்யாணம் | காலை | அப்போது கறந்த பசுவின் பால் |
| 4 | மோக்ஷபலன் ஸித்திக்க | ஆரண்ய | 65, 66, 67, 68 | ஜடாயு மோக்ஷம் | காலை | 5 வாழைப்பழங்கள் |
| 5 | அபஸ்மாரம், சுவாஸம், காஸம், குஷ்டம் தீர | யுத்த | 59 | ராவண கிரீட பங்கம் | இரண்டு வேளை | முதலில் தேன், முடிவில் பால் |
| 6 | பேய் பிசாசு, பில்லி சூன்யம் நீங்க | ஸுந்தர | 3 | லங்கா விஜயம் | மாலை | முதலில் சர்க்கரைப் பொங்கல், ஹநுமாரை த்யானம் செய்து கடைசியில் கற்பூர ஹாரதி |
| 7 | பைத்தியம் தெளிய | ,, | 13 | ஹநுமத் சிந்தை | காலை | உளுந்தன்னம் |
| 8 | தரித்திர நிலை நீங்க | ,, | 15 | ஸீதா தரிசனம் | காலை | 5 வாழைப்பழங்கள் |
| 9 | அடுத்தடுத்து வரும் துக்கம் நீங்க | யுத்த | 116 | ஸீதாஞ்ஜனேய ஸம்வாதம் | காலை | 5 வாழைப்பழங்கள் |

[P.T.O.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 10 | எதிர்பாராமல் வந்த ஆபத்து ஒழிய | யுத்த | 18, 19 | விபீஷண சரணாகதி | காலை | முதலிலும் கடைசியிலும் தேங்காய் |
| 11 | விட்டுப் பிரிந்தவர் வந்து சேர | ஸுந்தர | 36 | அங்குலீயக ப்ரதானம் | காலை மாலை | பலாப்பழம், மாம்பழம் |
| 12 | துர்சொப்பன தோஷம் நீங்க | ,, | 27 | திரிஜடை ஸ்வப்னம் | காலை | 3 நாட்கள் பாராயணம், சர்க்கரை நிவேதனம் |
| 13 | பரஸ்த்ரீ கமன தோஷம் நீங்க | ,, | 7, 8, 9 10, 11 | ஹநுமார் சிந்தை | காலை | இருபது அப்பங்கள் |
| 14 | ஸ்ரீராமனுக்குச்செய்த அபசார தோஷம் நீங்க | ,, | 38 | காகாசுர விருத்தாந்தம் | காலை | 5 வாழைப்பழங்கள் |
| 15 | மறுபிறவியில் ஸகல சுகங்களும் பெற | யுத்த | 131 | ஸ்ரீராம பட்டாபிஷேகம் | காலை | ஒரு மாதம் பாராயணம் செய்யவேண்டும். வெண்பொங்கல் |
| 16 | பிள்ளையில்லாதவர்களுக்குப் பிள்ளையுண்டாக | பால | 15, 16 | புத்திரகாமேஷ்டி பாயஸ தானம் | காலை | 20 நாட்கள் பாராணம். நெய் பாயஸம் நிவேதனம் |
| 17 | சுகப்ரஸவம் உண்டாக | ,, | 18 | ஸ்ரீ ராமாவதாரம் | காலை | கர்ப்பிணி கேட்கவேண்டும். ஏதாவது ஸ்வல்ப நிவேதனம் |
| 18 | சிறைவாஸபயம் நீங்க | யுத்த | 117 | விபீஷணன் ஸீதையை ஸ்ரீ ராமரிடம் சேர்த்தல் | காலை | மதுர பதார்த்தங்கள் |
| 19 | துர்நடத்தையுள்ள பிள்ளை நல்லவனாக | அயோ | 1, 2 | ஸ்ரீ ராமகுண வர்ணனம் | காலை | 5 வாழைப்பழங்கள் |
| 20 | நினைத்த காரியம் நிறைவேற | பால | 75, 76 | பரசுராம கர்வபங்கம் | காலை | பாயஸம், அப்பம் |
| *21 | ராஜாங்க காரியங்களில் வெற்றிபெற | அயோ | 100 | ராஜ தர்மங்கள் | காலை | 5 வாழைப்பழங்கள் |

* இது 'உமா ஸம்ஹிதை'யில் கூறப்படாதது.

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

# 1. எடுத்த தருமகாரியம் நிறைவேற

## For the Fulfilment of Virtuous Acts

---

**ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்**

**அயோத்யா காண்டம்**

**ஸர்க்கங்கள் 21 முதல்**

**25 முடிய**

**உமா ஸம்ஹிதா**

*த⁴ர்ம காம்மது கௌஸல்யா ராம ஸம்வாத³மாத³ராத் ।*
*மங்க³ளார்த்தம் படே²த் ப்ராத: மத்⁴யாஹ்நே வா ஸ்மரந் ப்ரபு⁴ம் ॥*

தாம் தொடங்கிய தருமகாரியங்களுக்கு ஏதாவது விக்னம் ஏற்பட்டு, அவை நிறைவேறுமற் போனால், "கௌஸல்யா ராம ஸம்வாதம்" என்ற அயோத்யா காண்டம் 21, 22, 23, 24, 25 ஆகிய ஐந்து ஸர்க்கங்களையும் காலையிலோ மாலையிலோ பாரா யணம் செய்யவேண்டும்.

நிவேதனம் : ஐந்து வாழைப்பழங்கள்.

**ஸங்கல்பம்**

*ஸ்ரீ ஸீதாலக்ஷ்மண ப⁴ரத சத்ருக்⁴ந ஹநுமத் ஸமேத*
*ஸ்ரீ ராமசந்த்³ர ப்ரபோ⁴ : ப்ரஸாதே³ந*
*ப்ராரீப்ஸித த⁴ர்மகார்ய ஸமாப்த்யர்த²ம்*
*"கௌஸல்யா ராமஸம்வாத³ா" த்மக*
*ஸ்ரீமத்³ ராமாயணக⁴ட்ட பாராயணம்*
*அஹம் கரிஷ்யே ।*



RUTTMS ; BRLX

## ஸர்க்கம் 21

# ராமன் கௌஸல்யையை ஸமாதானம் செய்தது

*ததா² து விலபந்தீம் தாம் கௌஸல்யாம் ராமமாதரம் ।*
*உவாச லக்ஷ்மணோ தீ³ந: தத்கால ஸத்³ருஶம் வச: ॥* (1)

அப்படிப் பிரலாபிக்கும் கௌஸல்யையைப் பார்த்து லக்ஷ்மணன் மிகுந்த வருத்தத்துடன் அந்தச் சமயத்திற்குத் தகுந்தபடி பின்வருமாறு பேசினார் :

"அம்மா! ஒரு ஸ்த்ரீயின் வார்த்தைக்குக்கட்டுப்பட்டு, தனக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை விட்டு ராமன் காட்டிற்குப் போவது உசிதமென்று எனக்கும் தோன்றவில்லை. 'கைகேயியின் உத்தரவால் நான் போகவில்லை ; அரசனுடைய கட்டளையாலல்லவா போகிறேன்' என்றால், அவரோ மிகவும் வயது சென்றவர் ; இந்திரிய ஸுகங்களில் ஆசையை ஒழிக்க முடியாதவர். ஆனால் 'பரிசுத்தமானவனை இந்திரியங்கள் என்ன செய்யமுடியும்?' என்றால், இப்பொழுது அவர் ஒரு ஸ்திரீயிடத்தில் எல்லையற்ற ஆசை கொண்டிருக்கிறார். ஆகையால் அவருடைய புத்தி விபரீதமாயிருக்கிறது. இது அநியாயமென்று அவருக்குத் தெரியவில்லை. தான் மிகவும் பிரீதி வைத்த ஸ்திரியை ஸந்தோஷப்படுத்துவதற்காக எல்லையற்ற அதிகாரத்தைப் பெற்றிருக்கும் ஒரு மஹாராஜா என்னதான் சொல்லமாட்டார் ? என்னதான் செய்யமாட்டார் ?

"ராமனிடத்தில் எந்தக் குற்றத்தையாவது தோஷத்தையாவது கண்டு வனத்திற்கு அனுப்பியிருக்கக்கூடாதோ என்றால் ராஜத் துரோகம் முதலிய கொடியகுற்றங்களை ராமன் செய்தாரா அல்லது கோரமான பாபங்களைச் செய்தாரென்றாவது சொல்ல முடியுமா ? அவருக்குப் பரமசத்துருவானாலும் அல்லது ஏதாவது குற்றம் செய்து அதற்காக அவரால் தண்டிக்கப்பட்டிருந்தாலும் அவர் இல்லாதவிடத்திலும் அவரைப்பற்றித் தோஷத்தைக் கற்பிக்கக்கூடிய மனிதனை இந்த லோகத்தில் காணேன். அப்படியிருக்க அவருக்கெதிரில் எவனாவது சொல்லத் துணிவானோ ?

"இது நான் ஸ்னேஹமாகச் சொல்லும் விஷயமல்ல. எல்லோருக்கும் வெளிப்படையாகத் தெரிந்ததே; ராமனோ தேவதைகளைப்

"தாங்கள் சொன்னபடி செய்தேன். தாங்கள் பிருகு வம்சத்தில் பிறந்த பிராம்மண சிரேஷ்டர்; என் குருவான விசுவாமித்திரருடைய ஸஹோதரி தங்களுடைய பிதாவைப் பெற்றவள்; யால் தங்களுடைய உயிரை வாங்கும் இந்தப் பாணத்தைப் பிரயோகிக்க முடியாமலிருக்கிறேன். இந்தப் பாணமோ விஷ்ணுவைச் சேர்ந்தது; சத்ருவை ஜயிக்காமல் திரும்பாது; பலத்தையும் கர்வத்தையும் அழிக்கும். வீண் போகாதது; தங்களுடைய தபோபலத்தால் ஸம்பாதித்த உத்தம லோகங்களை அடையாமல் செய்யட்டுமா? அந்தத் தவத்தின் பயனை இதற்குப் பலி கொடுக்கிறீர்களா; அல்லது நினைத்த லோகங்களுக்குப் போகும் தங்களுடைய சக்தியை அழிக்கட்டுமா?" என்றார்.

தன் பூர்வாவதாரமான பரசுராமரிடத்திலிருந்து தன் வில்லையும் பாணத்தையும் வாங்குவதாய் வெளிக்குக் காட்டி, ராமன் அவரிடத்தில் முன்பு வைத்த சக்தியைத் தானே மறுபடியும் தன்னிடத்தில் வருவித்துக்கொண்டார். அந்த ஆச்சரியத்தைப் பார்க்க பிரஹ்மாது தேவர்களும் மஹரிஷி கந்தர்வ அப்ஸரஸ் ஸித்த சாரண கின்னர யக்ஷ நாக ராக்ஷஸ கணங்களும் கூட்டம் கூட்டமாக வந்தார்கள். ஸகலப் பிராணிகளும் அசைவற்று நின்றன. பரசுராமரிடத்திலிருந்து விஷ்ணு தேஜஸ் அவரைவிட்டு விலகிற்று. ஒன்றும் தோன்றாமல் இதென்ன ஆச்சர்யமென்று அவர் ராமனை உற்றுப் பார்த்தார்.

தன் சக்தி குறைவதற்கு அவருடைய தேஜஸே காரணமென்று உணர்ந்த பரசுராமர், மலர்ந்த செந்தாமரை இதழ்களைப் போன்ற நேத்திரங்களை உடைய ராமனை மஹாவிஷ்ணு என்றறிந்து மெதுவாய், "காசியபருக்கு இந்தப் பூமியை நான் தானம் செய்தபொழுது அவர் 'என் ராஜ்யத்தில வஸிக்கக்கூடாது' என்றார். அவருடைய வார்த்தைககுக் கட்டுப்பட்டு இந்தப் பூமியில் ஒரு ராத்திரிகூடத் தங்குவதில்லையென்று பிரதிக்ஞை செய்தேன். ஆகையால, நான், நினைதத இடங்களுககுப் போகும் சக்தியை அழிக்கவேண்டாம். மனோவேகமாய் மஹேந்திர பர்வதத்திற்குப் போய்விடுகிறேன். என் தவத்தால் ஸம்பாதித்த உத்தமலோகங்களை நான் அடையாமல் செய்; தாமதம் வேண்டாம்; நீ தேவாதி தேவனென்றும் அழிவற்றவனென்றும் மதுகைடபர்களை ஸம்ஹரித்த மஹாவிஷ்ணுவென்றும் அறிந்தேன். இந்த வில்லை வேறொருவா எடுத்து வளைக்கமுடியுமா? உனக்குப் பரம மங்களமுண்டாகட்டும். இதோ பார். தேவகணங்களும் பராபரவஸ்துவான உன்னை ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். லோகநாதனான உன்னால் ஜயிககப்படுவதில் எனக்குக் கொஞ்சமும் அவமானமில்லை. நீ பாணத்தைப் பிரயோகித்தவுடன் மஹேந்திர பர்வதத்திற்குப் போகிறேன்" என்றார்.

ராமன் அப்படிச் செய்ய, உத்தம லோகங்களை அடைய அனுஷ்டித்த பரசுராமருடைய புண்ணிய பலம் அழிந்தது. அதைக் கண்ட பின், அந்த ஜமதக்னியின் குமாரர் அதிவேகமாய் மஹேந்திர பர்வதத்திற்குப் போய்விட்டார்.

உடனே திக்குகள் இருள் நீங்கிப் பிரகாசித்தன. பிரஹ்மாதி தேவகணங்களும் ரிஷிகளும் கோதண்டபாணியான ராமனைக் கொண்டாடினார்கள். இப்படிப் பரசுராமன் தசரத ராமனைப் புகழ்ந்து பிரதக்ஷிணம் செய்து தன்னிடத்திற்குச் சென்றார்.

ராமம் த[3]ாஶரதி[2]ம் ராமோ ஜாமத[3]க்[3]ந்ய: ப்ரஶஸ்ய ச ।
த[3]த: ப்ரத[3]க்ஷிணம் க்ருத்வா ஜக[3]மாத்ம க[3]திம் ப்ரபு[4]: ॥ (25)



ஸ்ரீ ராமசந்த்ராய நம :

# 21. ராஜாங்கக் காரியங்களில் வெற்றி பெற*

## (For Success in Government Affairs)

---

### ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

### அயோத்யா காண்டம் : ஸர்க்கம் 100

முடியரசானாலும் குடியரசானாலும் ராஜாங்கத்தோடு எல்லாருக்கும் ஏதோ ஒரு வழியில் சம்பந்தம் இருக்கும். ஆகவே, ராஜாங்கத்தில் தமக்கு ஒரு காரியம் நிறைவேறுவதற்கு நியாயரீதியாக, தாம் செய்யவேண்டிய ஸகல முயற்சிகளையும் செய்தபின்பு, தம் காரியங்கள் விரைவில் அனுகூலமாக நிறைவேறவேண்டுமென்பதற்காக, ஸ்ரீ ராமன் பரதனுக்கு ராஜ தர்மங்களை உபதேசம் செய்யும் அயோத்யா காண்டம் 100-வது ஸர்க்கத்தைப் பாராயணம் செய்யவேண்டும்.

நிவேதனம் : ஐந்து வாழைப்பழங்கள்.

**ஸங்கல்பம்**

ஸ்ரீ ஸீதாலக்ஷ்மண ப⁴ரதசத்ருக்⁴ந ஹநுமத்ஸமேத
ஸ்ரீராமசந்த்ரப்ரபோ: ப்ரஸாதே³ந
ராஜத்³வாரே ஸர்வாநுகூல்யஸித்³த்⁴யர்த்த²ம்
⁴ப⁴ரதம் ப்ரதி ஸ்ரீராமக்ருத குஶல
ப்ரஶ்நாத்மக ஸ்ரீமத்³ ராமாயண க⁴ட்ட பாராயணம்
அஹம் கரிஷ்யே ।

---

*இந்த 21-வது முறை உமாஸம்ஹிதையில் இல்லை. ஆயினும் பெரியவர்களின் ஸம்மதத்தைப் பெற்று இந்த முறை சேர்க்கப் பட்டிருக்கிறது.

## ஸர்க்கம் 100

# ராமன் பரதனுக்கு ராஜநீதியை உபதேசித்தது

*ஜடிலம் சீரவஸநம் ப்ராஞ்ஜலிம் பதிதம் பு⁴வி ।*
*த³த³ர்ஶ ராமோ து³ர்த³ர்ஶம் யுகா³ந்தே பாஸ்கரம் யதா² ॥ (1)*

பார்த்தவுடனேயே பரதன் ராஜ்யத்தை ஆளுகிறனென்று எண்ணிக்கொண்டு, கேள்விகளைக் கேட்பதுபோல் ராஜ்யபாலனத்திற்கு வேண்டிய நீதிகளை ராமன் உபதேசித்தார். தசரதர் மரணமடைந்தாரென்றும், பரதன் அதுமுதல் ராஜ்யத்தை விலக்கித் தபஸ்வி தர்மத்தையும் விரதத்தையும் அனுஷ்டித்துவருகிறரென்றும் கேள்விப்பட்டபிறகு அந்த உபதேசத்தைச் செய்ய ஸமயம் வாய்க்காதல்லவா?

"தசரதர் எப்பொழுதாவது உத்தமமான புஷ்பங்களைப் பார்த்தால், 'குழந்தை பரதனுடைய தலையில் இதை வைத்தாலல்லவா அழகாயிருக்கும்' என்று சொல்வார். அந்தப் பரதன் சடையும் தலையுமாய் வந்திருக்கிறனே. நேர்த்தியான வஸ்திரங்களைக் கண்டால் 'நமது குழந்தை பரதன் இவைகளைத் தரித்தாலல்லவா அழகாயிருக்கும்' என்று சொல்வார்; அப்படிப்பட்ட பரதன் இப்பொழுது மான்தோல் மரவுரிகளைத் தரித்துக்கொண்டிருக்கிறனே! 'ஒரு பதார்த்தத்தை வாங்கிக்கொள்' என்று தசரதர் வேண்டினாலும் பரதன் வாங்கிக்கொள்வது அரிது. 'இப்பொழுது அவனே தனக்கு வேண்டிய காரியத்தைத் தானே கைகூப்பி நமஸ்கரித்துப் பிறரைப் பிரார்த்திக்கும்படி நேர்ந்ததே! மிருதுவான புஷ்பசயனத்தில் உட்கார்ந்தாலும் பரதனுடைய தேகம் தாங்காதென்று தசரதர் எப்பொழுதும் இவனைத் தன்மடியிலேயே வைத்துக்கொண்டிருப்பார். அப்படிப்பட்டவன் இப்பொழுது வெறும் தரையில் கிடந்து புரளும்படி நேர்ந்ததே!" என்று ராமன் ஆச்சரியப்பட்டார். எண்ணிறந்த கிரணங்களால் பிரபஞ்சத்தை விளங்கச் செய்துகொண்டிருக்கும் ஸூரியன் பிரம்மதினத்தின் முடிவில் ஸகல தேஜஸும் குறைந்து பூமியில் விழுந்து கிடப்பதைப் போல், மஹாதேஜஸ்வியான பரதன் அவ்வளவு தேஜஸும் குன்றிப் பூமியில் விழுந்து கிடப்பதைக் கண்டு, ராமனும் அங்கிருந்தவர்கள் எல்லோரும் மிக்க துக்கத்தை அடைந்தார்கள். தேகம் மெலிந்து நிறம் மாறிப் பரதன் இவனே என்று அடையாளம் கண்டுபிடிக்கமுடியவில்லை. தன்னுடன் பிறந்தவனுகையால் ராமன் அவனை வாரி எடுத்துப் பிரியத்துடன் அணைத்து உச்சி

முகர்ந்து, தன் துக்கத்தை அடக்கிக்கொண்டு பரதனை ஸமாதானம் செய்ய, 'குழந்தாய்! நீ இந்தக் காட்டிற்கு எப்படி வந்தாய்? நமது பிதாவுககு ஸமீபத்திலிருந்து ஸகல பணிவிடையும் நீயே செய்யவேண்டியதல்லவா? அவர் எங்கே போய்விட்டார்? அவர் உன்னை விட்டுப் பிரியப் பொறுக்கமாட்டாரே அவர் உயிரோடிருந்தால் நீ இந்தக் காட்டிற்கு வர நியாயமில்லையே. கேகய ராஜ்யத்திலிருந்து இவ்வளவு தூரம் நீ வந்ததைப் பார்க்க எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. தேகம் இளைத்து நிறம் மாறி அடையாளம் தெரியாமல் இருப்பதேன்? இந்தக் கோரமான காட்டிற்கு நீ வந்த காரணமென்ன? மஹாராஜா பிழைத்திருக்கிறாரா? அப்படியிருந்தால் நீ அவருடைய அனுமதியைப் பெற்று இங்கே என்னைப் பார்க்க வந்திருக்கவேண்டும். உன்னை விட்டு அவர் ஒரு நிமிஷம்கூடப் பிரிந்திருக்கமாட்டாரே. ஆகையால் துக்கம் மேலிட்டு ஸ்வர்க்கத்தை அடைந்தாரா? அந்தக் கஷ்டம் நேர்ந்து, பாலனான உன்னிடத்திலிருந்து பலசாலிகளான சத்ருக்கள் இதே ஸமயம் பார்த்து ராஜ்யத்தைப் பிடுங்கிக்கொண்டார்களா? அல்லது பிரஜைகளுக்கு உன்னிடத்தில் விசுவாஸம் குறைந்து, கைகேயி என்னைக் காட்டிற்குப் போகச் சொன்னதற்காக உன்னை நகரத்திலிருந்து துரத்திவிட்டார்களா? ஆதிமுதல் இதுவரையில் இந்த ராஜ்யம் நமது வசத்திலேயே இருந்ததல்லவா அல்லது பிதாவிற்குப் பணிவிடை செய்வதில் உனக்கு அசிரத்தை பிறந்து மஹா பராக்கிரமசாலியான அவரை விட்டு வந்திருக்கிறாயா?

(1) சிரேஷ்டமான குலத்தில் பிறந்தவரும் ஸத்தியம் தவறாதவரும் எண்ணிறந்த அசுவமேதங்களையும் ராஜஸூயங்களையும் செய்தவரும் தாமத்திலிருந்து விலகாதவருமான தசரத சக்ரவர்த்தி ஸுகமாக இருக்கிறாரா? தன் பிரதிக்ஞையைத் தவற முடியாததால் நேர்ந்த கஷ்டங்களைப் பார்த்துப் பச்சாத்தாபமடைந்த அவருக்கு ஏதாவது வியாதி உண்டாயிற்றா? அதை எனக்குத் தெரிவிக்க வந்திருக்கிறாயா?

(2) கொடிய துக்கங்களை அனுபவித்த என் தாய் கௌஸல்யை இப்பொழுது ஸுகமாக இருக்கிறாளா; அவளைக் காட்டிலும் என் பக்திக்கும் பிரியத்திற்கும் பாத்திரமான உன் தாய் கைகேயி, தன் எண்ணப்படி காரியம் முடிந்து ஸுகமாக இருக்கிறாளா?

(3) பிரஹ்மஞானியும் ஸகல வித்தைகளிலும் நிபுணரும் ஞானத்திற்கொத்த தர்மானுஷ்டானமுள்ளவரும், அதனால் அபார தேஜஸை அடைந்தவரும் இக்ஷ்வாகுகுல மன்னர்களுக்குக் குலகுருவுமான வஸிஷ்டபகவானை நமது முன்னோர்கள் பூஜித்தபடி நீயும் பூஜித்து வருகிறாயா? அக்னி ஹோத்திரம் முதல் அசுவமேதம் வரையிலுள்ள யாகவிதிகள் யாவையும் நன்றாய் அறிந்தவரும்

அக்னி காரியங்களில் வெகு ஜாக்கிரதையுள்ளவரும் மஹாபுத்தி மானும் இஹபரலோக தர்மங்களை ஒரே விதமாக அனுஷ்டிப்பவரு மான உன் புரோஹிதர் அந்தந்தக் காலங்களில் ஹோமம் செய்த தையும செய்யவேண்டியதையும் உனக்கு ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கிறாரா ?

(4) தேவதைகளை யாகயக்ஞாதிகளாலும், மாதாபிதாக்களை அவர்களுடைய சொற்படி நடந்து அவர்களுக்குச் சிசுருஷைசெய் வதாலும், குருக்களைப் பூசித்து அவர்களுடைய கட்டளையை நிறை வேற்றுவதாலும், ஞாதிகளை அவர்களுக்கு வேண்டிய செல்வத்தை கொடுப்பதாலும், வயதாலும் ஞானத்தாலும் ஆசாரத்தாலும் பெரியோர்களை நமஸ்காரம் செய்வதாலும், வித்வான்களையும் பிராம்மணர்களையும் வெகுமானம் செய்வதாலும் திருப்தி செய் கிறாயா ?

(5) தனுர் வேதத்திலும் ராஜநீதியிலும் நிபுணரான ஸுதன்வா என்ற நமது உபாத்தியாயரைப் பூஜித்துவருகிறாயா ?

(6) உன் மந்திரிகள் புத்திமான்களாகவும் நீதிசாஸ்திர நிபுணர் களாகவும், உத்தம குலத்தில் பிறந்தவர்களாகவும், பிறருடைய எண்ணங்களையும்ஸூக்ஷ்மமாகத் தெரிந்துகொள்கிறவர்களாகவும் உன்னைப்போல் நம்பத் தகுந்தவர்களாகவும் இருக்கிறார்களா ? நீதி சாஸ்திரத்தில் கரைகண்ட மந்திரிகளால் நன்றாக ஆலோசிக் கப்பட்டு ஜாக்கிரதையாகக் காப்பாற்றப்படும் மந்திராலோசனை அரசர்களுக்கு ஜயத்தைக் கொடுக்கும்.

(7) தகுந்த காலத்தில் படுக்கிறாயா ? தகுந்த காலத்தில் விழிக்கிறாயா ?

(8) விடியற்காலத்தில் ஐசுவரியத்தை ஸம்பாதிக்கும் வழிகளை ஆலோசிக்கிறாயா ?

(9) ஒருவனாகவாவது பலருடனாவது ராஜ்ய காரியங்களை ஆலோசிககாமல் இருக்கிறாயா ? ஒருவனாக யோசித்தால் தனக்கு அந்த விஷயத்திலுள்ள விருப்பத்தாலோ வெறுப்பாலோ அதன் குணதோஷங்களைப் பக்ஷபாதமில்லாமல் அறியமுடியாது. பல ருடன் யோசித்தால் ஒருமை ஏற்படாது. அந்த யோசனை சீக்கிரம் வெளியாகிவிடும்.

(10) நீ செய்யும் ஆலோசனை அந்தக் காரியம் முடிவதற்குமுன் ராஜ்யத்தில் தெரியாமலிருக்கிறதா ?

(11) ஸுலபமான ஸாதனங்களால் விசேஷப் பயன்கிடைக்கக் கூடிய காரியத்தை நன்றாக ஆலோசித்துத் தாமதமில்லாமல்

செய்து முடிக்கிறாயா? சீக்கிரத்தில் செய்து முடிக்காத காரியத்தின் பயனைக் காலம் கொள்ளையிடுகிறது.

(12) நீ செய்யும் ஆலோசனைகள் அந்தக் காரியம் முடிந்து கொண்டிருக்கும்பொழுதாவது ஆரம்பத்திற்கு முந்தியாவது உன சிற்றரசர்களுக்குத் தெரியாமல் முடிந்த மாத்திரம் தெரிகின்றனவா ?

(13) நீயும் மந்திரிகளும் ஆலோசனை செய்யாத காரியங்களைப் பிறர் ஊஹத்தாலாவது அனுமானத்தாலாவது இங்கிதங்களாலாவது அறியமுடியாமல் ஜாக்கிரதையாகக் காப்பாற்றிவருகிறாயா?

(14) அநேக ஆயிரம் மூர்க்கர்கள் இருந்தாலும் அவர்களை விட்டு, நன்றாகப் பரிசோதித்துக் காரியத்தைச் செய்யும் புத்திமானைச் சேர்க்கிறாயா ? ராஜ்ய காரியங்களில் ஸங்கடம் நேரும் பொழுது அந்த வித்வான் அரசர்களுக்கு மிகுந்த கீர்த்தியையும் மேன்மையையும் உண்டாக்கும் உபாயங்களை உபதேசிப்பார். மூர்க்கர்களை ஆயிரக்கணக்காயும் கோடி கோடியாயும் அரசன் சேர்த்துக்கொண்டாலும் காரியங்களை ஆலோசிக்கும்பொழுது அவர்கள் கொஞ்சமாவது உபயோகப்படுவார்களா ? பிறர் ஆரம்பித்த காரியத்தை உடனே அறியும் சக்தியுடையவனும் ஸ்திரமான புத்தியுடையவனும் காரியங்களை விசாரித்துச் செய்கிறவனும் நீதி சாஸ்திரங்களில் நிபுணனுமான ஒரு மந்திரியிருந்தாலும் அவன் அந்த அரசனுக்கும் சிற்றரசர்களுக்கும் மிகுந்த கீர்த்தியை ஸம்பாதிப்பான்.

(15) முக்கியமான ஸேவகர்கள், சமையல் பரிமாறுதல் முதலிய காரியங்களில் மாத்திரமும், ஜாதி முதலியவைகளால் நடுத்திறத்தார்கள் படுக்கை ஆஸனம்வாஹனம் முதலியவைகளைக் கொண்டு வருவது முதலிய காரியங்களில் மாத்திரமும், கீழ்த்தரமான ஸேவகர்கள் கால்கழுவுவது மரவடிகளைக்கொண்டு வருவது கால் பிடிப்பது முதலிய வேலைகளில் மாத்திரமும் உபயோகிக்கப் படுகிறார்களா ? இல்லாவிட்டால் அதிகப் பொறாமையும் மனஸ்தாபமும் உண்டாகும்.

(16) உத்தமமான வஸ்திரங்கள் ஆபரணங்கள் வாகனங்கள் முதலியவைகளை மந்திரிகளிடத்தில் வேறு மனுஷ்யர்களால் ரஹஸ்யமாக அனுப்பி, அரசனுடைய அந்தப்புரத்திலிருந்து உங்களுக்கு அனுப்பப்பட்டதென்றும் சொல்லி, அவர்கள் ஆசையுடன் அவைகளைப் பெற்றுக் கொள்ளுகிறார்களா என்று பரீக்ஷிப்பது அரசர்களுக்கு வழக்கம். அந்தப் பரீக்ஷையில் தேறினவர்களும் பல தடவைகளாக வேலை பார்க்கிறவர்களும் மனோவாக்குக் காயங்களில் சுத்தர்களுமான உத்தம மந்திரிகளைப் பெரிய காரியங்களிலேயே உபயோகிக்கிறாயா ?

(17) கைகேயி புத்திர! வெகு கடுமையாகப் பிரஜைகளைத் தண்டித்து அதனால் அவர்கள் கஷ்டப்பட்டு மந்திரிகளிடத்தில் முறையிட்டு அவர்கள் உன்னைத் தடுக்கும்படி வைத்துக்கொள்ளாமல் இருக்கிறாயா? கெட்ட தானங்களை வாங்கி அளவற்ற திரவியத்தைச்சேர்த்து அதனால் யாகம் செய்ய விரும்புகிறவனை ரித்விக்குகள் எப்படி அவமதிப்பார்களோ, தங்களைப் பலாத்காரம் செய்து ஸ்வாதீனப்படுத்திக்கொள்ள விரும்பும் புருஷனை ஸ்த்ரீகள் எப்படி அவமதிப்பார்களோ, அப்படித் தண்டிக்கத்தகாதவர்களைக் கடுமையாகத் தண்டித்து அவர்களிடத்திலிருந்து தனத்தைப் பறித்து ஹிம்ஸை செய்வதால் பிரஜைகள் உன்னை அவமதிக்காமல் இருக்கிறார்களா?

(18) ஸாம தான பேத தண்டமென்ற உபாயங்களைப் பிரயோகிப்பதில் நிபுணனும், மஹரிஷிகளால் உபதேசிக்கப்பட்ட பிறரை வஞ்சிக்கும் நீதிகளை நன்றாகக் கற்றவனும், அரசனுக்கு அந்தரங்கமான ஸேவகர்களின்மேல் தோஷங்களை ஏற்படுத்தி அவர்களைக் கலைக்கிறவனும், அரசனை ஹிம்ஸை செய்வதில் பயமற்றவனும், காலக்கிரமத்தில அரசனுடைய ஐசுவரியத்தைக் கைப்பற்றிக் கொள்ளுகிறவனுமான புருஷனை எந்த அரசன் கொல்லாமல் விடுகிறானோ, அவனால் ராஜ்யத்தை விட்டு அவ்வரசன் துரத்தப் படுவான்; அல்லது கொல்லப்படுவான். இவ்விதமானவனை வைத்துக்கொள்ளாமல் இருக்கிறாயா?

(19) அரசன் செய்யும் மரியாதையால் ஸந்தோஷிக்கிறவனும், பிறரை ஜயிக்கும் சக்தியுடையவனும், அந்தந்த ஸமயத்திற்குத் தகுந்தபடி தன் ஸைன்யங்களை அணிவகுப்பதிலும் சத்ருவின் அணிவகுப்பைப் பிளப்பதிலும் ஸைன்யத்தை நடத்துவதிலும் நுட்பமான புத்தியுள்ளவனும், ஆபத்துக் காலத்தில் கலங்காத தைரியமுடையவனும், யஜமானனிடத்தில் விசுவாஸமுள்ளவனும் உள்ளும் புறமும் சுத்தமாக இருப்பவனும், உத்தம குலத்தில் பிறந்தவனும் காரியங்களை நடத்துவதில் திறமையுள்ளவனுமான மனிதனை ஸேனாபதியாக நியமித்திருக்கிறாயா?

(20) மஹா பலசாலிகளும், உத்தம குணங்கள் பொருந்தினவர்களும், யுத்தத்தில் ஸமர்த்தர்களும், சூரர்களுமான யுத்தவீரர்களை அவர்களுடைய பூர்வ வரலாற்றையும் தைரியத்தையும் நன்றாகப் பரீக்ஷித்து விசேஷமான வெகுமதிகளைச் செய்து மேன்மைப்படுத்தியிருக்கிறாயா?

(21) ஸைன்யங்களுக்கு அந்தந்தக் காலத்தில் கொடுக்க வேண்டிய சம்பளத்தையும் ஆகாரத்தையும் அவர்கள் செய்யும்

வேலைக்குத் தகுந்தபடி தாமதமில்லாமல் கொடுத்து வருகிறாயா? இல்லாவிட்டால் சம்பளக்காரர்கள் யஜமானனிடத்தில் கோபித்து விசுவாஸமற்றுப் போவார்கள். அது பெரிய அனர்த்தத்தை விளைவிக்கும்.

(22) க்ஷத்திரிய குலத்தில் பிறந்த முக்கியமானவர்களெல்லோரும் உன்னிடத்தில் மிகுந்த பிரீதி வைத்து, எந்த ஸமயத்திலும் உனக்காக உயிரைவிடத் தயாராக இருக்கிறார்களா?

(23) உன் தூதர்கள் உன் தேசத்தில் பிறந்தவர்களாகவும், பிறருடைய எண்ணங்களை அறியக்கூடியவர்களாகவும், காரியங்களை நடத்துவதில் ஸமர்த்தர்களாகவும், ஸமயோசிதமாகவும், தயங்காமலும் பதில் சொல்லுகிறவர்களாகவும், நீ சொல்லி அனுப்பிய ஸமாசாரத்தையும் பதிலையும் பிசகாமல் சொல்லுகிறவர்களாகவும், காரியத்தை முடிப்பதில் பல முக்கியமான விஷயங்களைப் பேசிக்கொண்டிருந்தாலும் யஜமானுடைய கட்டளையை மறக்காமலே வியவஹாரத்தை நடத்துகிறவர்களாகவும், விஷயங்களைப் பகுத்தறியும் சக்தியுள்ளவர்களாகவும் இருக்கிறார்களா?

(24) மந்திரி, புரோஹிதன், யுவராஜா, ஸேனாபதி, வாசல்காப்பவர்களுக்குத் தலைவன், அந்தப்புரத்தின் காரியங்களுக்குத் தலைவன், சிறைச்சாலைத் தலைவன், தனத்தை வசூல் செய்கிறவர்களுக்குத் தலைவன், அரசனது உத்தரவைப் பலர் அறியும்படி வெளியிடுபவர்கள், நியாயவாதிகள், நியாயாதிபதிகள், ஸைன்யங்களுக்குச் சம்பளத்தையும் உணவையும்கொடுப்பவன், ராத்திரியில் நகர சோதனை செய்து கோட்டை வாசல்கள் பிராகாரம் முதலியவைகளை ரக்ஷிப்பவர்களுக்குத் தலைவன், அரசனிடத்திலிருந்து ஒரே தடவையாகத் திரவியத்தை வாங்கிக்கொண்டு கூலிக்காக வேலை செய்யும் மற்றவர்களுக்குப் பிரித்துக் கொடுப்பவன், ஒவ்வொரு நாளும் ராஜஸபையை அலங்கரிப்பது, அரசன் மந்திரி முதலியவர்களுக்குத் தகுந்த ஆஸனங்களை அவர்களுக்காக ஏற்பட்ட இடங்களில் போடுவது, ஸபைக்கு வரவேண்டியவர்களை அழைத்துவந்து அவர்களுடைய அந்தஸ்திற்குத் தகுந்தபடி ஏற்பட்ட ஆஸனங்களில் உட்காரச் செய்வது, ஸபையில் வரத்தகாதவர்களை விலக்குவது, ஸபையில் சப்தமில்லாமல் பார்த்துக்கொள்வது, ஸபையைப் பாதுகாப்பது முதலிய வேலைகளைச் செய்பவர்களுக்குத் தலைவன், பிறருடைய திரவியங்களைத் திருடுவது முதலிய குற்றங்களைச் செய்தவர்களை அரசனுடைய உத்திரவுப்படி தண்டிக்கிறவர்களுக்குத் தலைவன், கோட்டைகளை ரக்ஷிப்பவர்களுக்குத் தலைவன், ராஜ்யத்தின் எல்லைகளில் நான்கு திக்குகளிலும் அன்னிய அரசர்கள் வராமல் பாதுகாப்பவர்களுக்குத் தலைவன், இந்தப்

பதினெட்டு மனிதர்களில் தன் ராஜ்யத்தில் மந்திரியையும் புரோஹிதரையும் யுவராஜாவையும் அரசன் பரீக்ஷிக்கவேண்டிய தில்லை. அவர்கள் எப்பொழுதும் தன் ஸமீபத்திலிருப்பதால் அவர்களுடைய ஸ்வபாவத்தைத் தானே நேரில் தெரிந்துகொள்ள லாம். தன் ராஜ்யத்தில் மற்றப் பதினைந்து பேர்களையும் சத்ரு பக்ஷத்தில் முன் சொன்ன பதினெட்டுப் பேர்களையும் மாறுவேடம் பூண்ட தூதர்களை ஒவ்வொருவருக்கு மும்மூவர் வீதம் ஏற்படுத்தி, ஒருவர்க்கொருவர் தெரியாமல், மேற்சொன்னவர்கள் தங்களுடைய வேலைகளை ஒழுங்காகச் செய்கிறார்களா இல்லையா என்று பரிசோதித்து வருகிறாயா ?

(25) உன் ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டுத் திரும்பி வந்திருக்கும் சத்ருக்களைப் பலமற்றவர்களென்று அலக்ஷ்யம் செய்யாமலிருக்கிறாயா? ஏதாவது ஆதாரமில்லாமல் அவர்கள் திரும்பி வரமாட்டார்களல்லவா? அவர்களை ஜாக்கிரதையுடன் கவனித்துக்கொண்டிருக்கவேண்டும்.

(26) பௌத்தன் சார்வாகன் முதலிய நாஸ்திக பிராம்மணர் களுடன் பழகாமலிருக்கிறாயா? சாஸ்திரங்களுக்கு விபரீதமான அர்த்தங்களை உபயோகிப்பதில் இவர்களுக்கு அதிகத் திறமை யுண்டு. உண்மையான ஞானத்திற்கு விரோதமான ஞானத்தை உடையவர்கள்; பாலர்களைப்போல் ஒன்றும் தெரியாதவர்கள்; ஆனால் தங்களைப் பெரிய பண்டிதர்களென்று எண்ணுகிறவர்கள்; வேதமார்க்கத்திற்கு விபரீதமான புத்தியையுடையவர்கள்; தாமஸ ஸ்மிருதிகளையும் தாமஸ புராணங்களையும் நீக்கி மஹரிஷி களால் செய்யப்பட்டு ஸாதுக்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட புராணங்களையும் தர்மசாஸ்திரங்களையும் பெரியோர்களுடைய ஸம்பிரதாய பரம்பரைப்படி அர்த்தம் செய்யாமல், கேவல தர்க்கத்தைப் பிரயோகித்து, அவை இஹத்திலும் பரத்திலும் பயனற்றவை என்று வாதிப்பவர்கள்.

(27) நமது ராஜதானியான அயோத்யை மஹாவீரர்கள் இருக்குமிடம்; நமது முன்னோர்களால் ஆதிகாலம் முதல் ஆளப் பட்டு வருகிறது. அதிலுள்ள நான்கு வர்ணத்தாரும் வர்ணாசிரம தர்மங்களைக் குறைவின்றி நடத்திவருகிறார்கள்; இந்திரியங்களை அடக்கினவர்கள்; அதிக உத்ஸாகமுள்ளவர்கள்; உத்தம குணங் களால் அலங்கரிக்கப்பட்டவர்கள்; மேலும் அந்த நகரம் எல்லா வித்தைகளிலும் தேர்ந்தவர்கள் பிரியத்துடன் வஸிக்கும் ஸ்தலம்; அதிலுள்ள ஜனங்கள் யாதொரு குறையுமில்லாமல் ஆனந்தமாக இருக்கிறார்கள், ஸகல ஐச்வர்யங்களும் பொருந்தி, சத்ருக்கள் நெருங்கமுடியாத அரண்களுடன், விசித்திரமான ஆலயங்களா

லும் அரண்மனைகளாலும் உப்பரிகைகளாலும் அலங்கரிக்கப்பட்டு, உத்தமமான யானைகள் குதிரைகள் ஒட்டகங்கள் இவைகளால் நிறைந்து, பிறரால் ஜயிக்கமுடியாததென்ற பெயருக்குத் தகுந்த யோக்கியதை வாய்த்திருக்கிறது. இவ்விதமான நமது ராஜதானியை ஜாக்கிரதையாக ரக்ஷித்துவருகிறாயா?

(28) நமது ராஜ்யத்திலுள்ள நாடுகளில் அசுவமேதம், சயனம் முதலிய மஹா யாகங்கள் செய்யப்படும் சாலைகள் பல உண்டு. அங்கே வஸிக்கும் ஜனங்கள், தங்களுக்குத் தகுந்த அரசன் கிடைத்திருப்பதால், காலத்தில் மழை பெய்து நீர்வளம் நிலவளம் முதலியவை பொருந்திய தேசத்திலேயே வஸிக்க விரும்புகிறார்கள். இதர தேசங்களுக்குப் போக மனம் வராது நமது தேசத்தில் நேர்த்தியான தேவாலயங்களும், அழகான சாலைகளும் அவைகளின் பக்கத்தில் அமைக்கப்பட்டிருக்கும் ஓடைகளும், தண்ணீர்ப் பந்தல்களும், பயிரிடுவதற்காக வெட்டப்பட்ட பெரிய ஏரிகளும் விளங்குகின்றன. உழுது பயிரிடப்படாத பாகம் நமது தேசத்தில் அதிகமாகக் கிடையாது ; ஆடுமாடுகளுக்கோ கணக்கில்லை ; அதிக மழை பெய்வது, மழை பெய்யாமலிருப்பது, எலிகள், வெட்டுப் பூச்சிகள், பக்ஷிகள், அரசர்கள் ஸமீபத்தில் வஸிப்பதென்ற ஆறு உபத்திரவங்களுமில்லை. வானம் பார்த்த நிலமுடையதல்ல. எங்கும் ஆற்றுப் பாய்ச்சலுள்ளது ; சோலைகளும் தோப்புகளும் எங்கும் நிறைந்து பார்க்க அழகாக இருக்கும். புலி முதலிய துஷ்ட மிருகங்களின் ஸஞ்சாரமில்லை ; திருட்டுப் பயமில்லை; ரத்தினம் பொன் வெள்ளி முதலியவை கிடைக்கும் சுரங்கங்கள் பல உண்டு பாபிகள் நமது ராஜ்யத்தில் வஸிக்கமாட்டார்கள். அங்குள்ள ஸ்த்ரீ புருஷர்கள் எப்பொழுதும் ஆனந்தத்துடன் காலம் கழிக்கிறார்கள். ஆறு குளம் முதலியவைகளில் கரையிலுள்ள வனங்களில் ஸகல பண்டங்களையும் விற்க ஏற்பாடு செய்யப்பட்டு, எல்லோருக்கும் தெரியும்படி குறிப்பிட்ட நாட்களில்வர்த்தகர்கள் கூடும் சந்தைகள் பல உண்டு. இவ்விதமான நமது ராஜ்யத்திலுள்ள தேசங்கள் ஸுகத்தை அடைந்திருக்கின்றனவா ?

(29) பயிரிடுகிறவர்களும், பசுக்களை மேய்க்கிறவர்களும் உன் ஆளுகையில் எல்லையற்ற ஐசுவரியத்தை அடைந்து, உன்னிடத்தில் பிரீதி வைத்திருக்கிறார்களா ? கொடுக்கல் வாங்கல் ஏற்றுமதி இறக்குமதி முதலிய வியாபாரங்களைச் செய்து வர்த்தகர்கள் உன்னை அண்டி ஸுகமாகப் பிழைக்கிறார்களா? அரசன் தன் ராஜ்யத்தில் வஸிக்கும் ஜனங்களெல்லோரையும் தர்மமாக ஆள வேண்டும். ஆகையால் மேற்சொன்னவர்களுக்கு வேண்டிய ஸௌகரியங்களைச் செய்து அஸௌகரியங்களை விலக்கிக் காப்பாற்றி வருகிறாயா?

(30) உன்னைச் சேர்ந்த ஸ்த்ரீகளிடத்தில் அனுகூலமாக நடந்துவருகிறாயா ?

(31) அவர்கள் பிற புருஷர்களுடன் கலந்து பேசாமல் இருக்கும்படி ஜாக்கிரதையாகப் பாதுகாக்கிறாயா ?

(32) அவர்கள் சொல்வதை நிஜமென்று நம்பாமலிருக்கிறாயா?

(33) மிகவும் சஞ்சலமான தன்மையுள்ளவர்களாகையால் அவர்கள் ரஹஸ்யங்களைக் காப்பாற்றமுடியாதவர்கள். ஆகையால் அவர்களிடத்தில் ரஹஸ்யங்களைச் சொல்லாமலிருக்கிறாயா ?

(34) உன் ராஜ்யத்தில் யானைகள் உண்டாகுமிடத்தைப் பிறர் அறியாமல் மறைத்து வைத்திருக்கிறாயா? இல்லாவிட்டால் பிறர் அவைகளைப் பிடித்துக்கொண்டு போவார்கள்.

(35) ஆண் யானைகளைப் பிடிப்பதில் உபயோகப்படும் பெண் யானைகள் விருத்தியாகின்றனவா ?

(36) குதிரைகளையும் ஆண் யானைகளையும் பெண் யானைகளையும் மேன்மேலும் ஸம்பாதிக்கிறாயா ?

(37) ஒவ்வொரு நாளும் காலையில் நன்றாக அலங்கரித்துக் கொண்டு ராஜஸபையில்வந்து பிரஜைகளுக்குத் தரிசனம் கொடுக்கிறாயா ? இல்லாவிட்டால் அரசனுக்குத் தேகஸௌக்கியமில்லை என்றும் ஏதோ அபாயம் நேர்ந்ததென்றும் ஸந்தேகப்படுவார்கள்

(38) உன் வேலைக்காரர்கள் எந்தச் சமயத்திலும் உன்னை. ஸுலபமாகப் பார்க்கும்படி இடம் கொடுக்கக்கூடாது; கர்வமடைந்து உன்னிடத்தில் மரியாதை வைக்கமாட்டார்கள். எப்பொழுதும் உன்னைப் பார்க்காமலும் வைத்துக்கொள்ளக் கூடாது; அவர்களுக்கு வேண்டியவைகளைத் தெரிந்துகொள்ள முடியாமற் போய்விடும் ; இவனால் நமக்கென்ன பிரயோஜனமென்று கோபமுண்டாகும் ; அதனால் ராஜ்யத்திற்கும் கெடுதி நேரும். ஆகையால் எல்லோருக்கும் எப்பொழுதும் தரிசனம் கொடுக்கக் கூடாது ; கொடுக்காமலிருக்கவும் கூடாது ; நடுநிலைமையாக நடந்து கொள்ளவேண்டும்.

(39) உன் கோட்டைகளில் தனங்களும், தான்யங்களும், ஆயுதங்களும், யந்திரங்களும் வேண்டியவரையில் இருக்கின்றனவா ? சில்பிகளும் வில்லாளிகளும் நிறைந்திருக்கிறார்களா ? ஜலத்தட்டு இல்லையல்லவா ?

(40) உன் வரவு அதிகமாகவும் செலவு குறைவாகவும் இருக்கிறதா? நட்டுவன், விடன், பாடகன், கூத்தாடி முதலிய தகாதவர்களுக்கு உன் திரவியத்தை ஏராளமாகக் கொடுக்காமலிருக்கிருயா?

(41) பிராம்மணர்கள், தேவதைகள், யாசகர்கள், வீரர்கள், மித்திரர்கள் இவர்களுக்கு உன் ஐசுவரியத்தை அதிகமாகச் செலவு செய்கிருயா?

(42) உன் ராஜ்யத்தில் சுத்தமான ஸ்வபாவமுள்ளவனும் மனோவாக்கு காயம் ஒத்தவனுமான ஸாது, எவனாவது பிறரால் திருடனென்று திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டு, சாஸ்திரங்களில் நிபுணர்களால் விசாரிக்கப்படாமல் அவனுடைய தனத்திற்காக ஆசைப்பட்டுக் கொல்லப்படாமலிருக்கிருனா?

(43) எந்தத் திருடனாவது, திருடும்பொழுது தடையத்துடன் கண்டுபிடிக்கப்பட்டு, நன்ருக விசாரித்தபின், அவன் திருடின சொத்தைக் கொடுத்துவிட ஒப்புக்கொண்டால், அதை அநியாயமாக வாங்கிக்கொண்டு தண்டனை இல்லாமல் விடப்பட்டிருக்கிருனா?

(44) தனவான்களுக்கும் ஏழைகளுக்கும் வியாஜ்யம் நேர்ந்தால் உன் நியாயாதிகாரிகள் தனவானிடத்திலிருந்து லாபத்தை அடைய உத்தேசிக்காமல் தீர்ப்புச் செய்கிருர்களா? அரசன் தன் ராஜ்யத்தில் நடக்கும் நியாயநியாயங்களை விசாரிக்காமல் கேவலம் தன் ஸௌக்கியத்தையே நாடி ஆண்டுவந்தால் சரியாக விசாரிக்காமல் குற்றம் சாட்டப்பட்டவர்கள் கண்ணீர் விட்டால் அது அவனுடைய மனைவி மக்களையும் பசுக்களையும் நாசம் செய்யும்.

(45) வயது சென்றவர்களையும், பாலர்களையும், உத்தமமான வைத்தியர்களையும் வெகுமானங்களாலும் ஸ்நேஹத்தாலும் இனிமையான வார்த்தைகளாலும் வசப்படுத்துகிருயா?

(46) தேவதைகள் வஸிக்கும் பெரிய மரங்களையும், யோக மஹிமையால் இவ்வுலகத்து ஸுகங்களில் ஆசையில்லாதவர்களையும், குருமார்களையும், பெரியோர்களையும், தபஸ்விகளையும், தேவதைகளையும், அதிதிகளையும், பிராம்மணர்களையும் வணங்குகிருயா?

(47) முற்பகலில் தர்மத்தை ஸம்பாதிக்கவேண்டும். அப்படிச் செய்யாமல் அந்த வேளையில் அர்த்தத்தை ஸம்பாதித்து, பிற்பகலில் அர்த்தத்தை ஸம்பாதிக்கவேண்டியிருக்க, அப்படிச் செய்யாமல் தர்மத்தை ஸம்பாதித்தும், ஸாயங்காலத்தில் காமத்தை அனுஷ்டிக்க வேண்டியிருக்க அப்படிச் செய்யாமல் தர்மத்தையும் அர்த்தத்தையும் அனுஷ்டித்தும், இம்மூன்று

புருஷார்த்தங்களையும் கொடுக்காமலிருக்கிறாயா? (தர்மத்தை விட்டுத் தனத்தை மாத்திரம் ஸம்பாதிக்காமலிருக்கிறாயா? குடும்ப போஷணைத்திற்கு வேண்டிய தனத்தை ஸம்பாதிப்பதை விட்டுத் தர்மத்தை மாத்திரம் ஸம்பாதிக்காமலிருக்கிறாயா? தர்மத்தையும் அர்த்தத்தையும் விட்டு வேசிகளிடத்தில் அகப்பட்டு இம்மூன்றையும் கெடுத்துக் கொள்ளாமலிருக்கிறாயா? காலையில் தானம் முதலிய தர்மங்களையும், பிறகு ராஜ்யங்களையும், ராத்திரியில் காமத்தையும் ஒன்றிற்கொன்று விரோதமில்லாமல் பிரித்து அனுஷ்டிக்கிறாயா? அவைகளை அளவுக்கு மிஞ்சாமல் தடுக்கும் சக்தி உனக்கு இருக்கிறதல்லவா?)

(48) உன் ராஜ்யத்திலுள்ள ஸர்வ சாஸ்திர நிபுணர்களான பிராம்மணர்களும் பட்டணத்து ஜனங்களும் நாட்டுப்புறத்தாரும் நீ ஸௌக்கியமாக இருக்கவேண்டுமென்று எப்பொழுதும் பிரார்த்திருக்கிறார்களா?

(49) பரலோகமில்லை என்று வாதிப்பது, பொய் சொல்வது, பெற்றோர்கள் ஆசிரியர்கள் பிராம்மணர்கள் பலஹீனர்கள் குற்றம் செய்தாலும் அவர்களிடத்தில் கோபிப்பது, அஜாக்கிரதை. காரியங்களை நிதானமாகச் செய்வது, எல்லா மேன்மைக்கும் காரணமான ஸாதுக்களைத் தரிசிக்காமலிருப்பது, சோம்பல், இந்திரியங்களை அடக்காமலிருப்பது, மந்திரிகளின் உதவியில்லாமல் ராஜ்ய காரியங்களைத் தானே ஆலோசிப்பது, விபரீதமான அர்த்தங்களைச் சொல்கிறவர்களுடன் ஆலோசிப்பது, நிச்சயித்த காரியங்களை ஆரம்பிக்காமலிருப்பது, தன் ஆலோசனைகளை முன்னாடியாகவே வெளியிடுவது, காலையில் எழுந்தவுடன் கண்ணாடி முதலியவைகளைப் பார்ப்பதென்ற மங்களகாரியங்களை அனுஷ்டிக்காமலிருப்பது, யாரைப் பார்த்தாலும் எழுந்து மரியாதை செய்வது என்ற இந்தப் பதினான்கும் அரசன் விலக்கவேண்டிய தோஷங்களில் முக்கியமானவை. நீ அவைகளை விலக்குகிறாயா?

(50) வேட்டை, சூதாட்டம், பகலில் தூங்குவது, பிறரைத் தூஷிப்பது, பெண்களுடனே காலம்கழிப்பது, மதுபானம், பாட்டு, கூத்து, வாத்தியமென்றவைகளில் காலத்தைக் கழிப்பது, காரியமில்லாமல் அலைவதென்ற இந்தப் பத்தையும் விலக்கிவருகிறாயா?

(51) நீர் அரண் மலையரண் மரவரண் பாலையரண் படையரண் என்ற இவ்வைந்தையும், ஸாமம் பேதம் தண்டமென்ற இந்த நான்கையும், அரசன் மந்திரி ராஜ்யம் கோட்டை பொக்கிஷம் ஸைன்யம் மித்திரர்களென்ற இவ்வேழு ராஜ்யத்தின் அங்கங்களையும், பயிர்த்தொழில் வியாபாரம் கோட்டை அணைகள்

யானை பிடிப்பது, சுரங்கம் வெட்டுவது, கப்பம் வாங்குவது, தரிசு நிலத்தைப் பயிரிடுவது ஆகிய இந்த எட்டையும், தர்மம் அர்த்தம் காமமென்ற இந்த மூன்றையும், த்ரயீ வார்த்தா தண்டநீதி என்ற இம்மூன்று வித்யைகளையும், இந்திரியங்களை ஜயிக்கும் உபாயத்தையும் ஸந்தி விக்ரஹம் யானம் ஆஸனம் த்வைதீபாவம் ஸமாச்ரயமென்ற இந்த ஆறு உபாயங்களையும், நெருப்பு, ஜலம், வியாதி, பஞ்சம், மரணம் என தெய்வ கோபத்தால் வரும் ஐந்து கஷ்டங்களையும், அதிகாரி, திருடன், சத்ரு, அரசனுக்குப் பிரியமானவன், அரசனுடைய பேராசை என மனிதனால் நேரும் ஐந்து கஷ்டங்களையும், சத்ருவினால் கோபிக்கப்பட்டாவது, பயமுறுத்தப்பட்டாவது, அவமதிக்கப்பட்டாவது ஸரியாகச் சம்பளம் கொடுக்கப்படாமலாவது இருக்கும் மனிதனை அவன் விரும்புவதைக் கொடுத்து அவனுடைய எஜமானனை விட்டுப் பிரிப்பது, பாலன், வயது சென்றவன், தீரா நோயுள்ளவன், பந்துக்களால் ஒதுக்கப்பட்டவன், பயந்தவன், பயந்த ஜனங்களையுடையவன், பேராசையுடையவன், பேராசையுள்ள ஜனங்களை ஆளுகிறவன், குடிகளின் பிரீதியை இழந்தவன், இந்திரிய ஸுகங்களில் மிகுந்த ஆசையை வைத்தவன், பலருடன் ஆலோசிக்கிறவன், தேவர்களையும் பிராம்மணர்களையும் நிந்திக்கிறவன், மஹரிஷிகளின் சாபம் கோபம் முதலியவைகளால் பீடிக்கப்பட்டவன், தெய்வமே யாவற்றையும் செய்யுமென்று சும்மா இருக்கிறவன், ஸைன்யம் நஷ்டமாவதால் துக்கப்படுகிறவன், ராஜ்யத்திலேயே வஸிக்காதவன், குரூரமான கிரஹங்கள் குரூரமான தசைகள் இவைகளால் பீடிக்கப்பட்டவன், பஞ்சம் முதலிய கஷ்டங்களை அனுபவிக்கிறவன், பல சத்ருக்களை உடையவன், ஸத்தியமும் தர்மமும் அற்றவன் என வகுக்கப்பட்டு, ஒரு பொழுதும ஸ்நேஹம் செய்யத்தகாத இந்த இருபது விதமான அரசர்களையும், மந்திரி ராஜ்யம் கோட்டை பொக்கிஷம் தண்டனை என்ற ஐந்து பிரகிருதிகளையும் (அங்கங்கள்), நடுவில் விஜிகீஷு என்ற அரசன், அவனுக்கு முன்புறத்திலுள்ள அவனுடைய சத்ரு, அவனுடைய மித்திரன், அந்தச் சத்ருவின் மித்திரன், அந்த மித்திரனுடைய மித்திரன், சத்துருவின் மித்திரனுக்கு மித்திரன், விஜிகீஷுவுக்குப் பின் பக்கத்திலுள்ள பார்ஷ்ணிக்ராஹன், ஆக்ரந்தன், பார்ஷ்ணிக்ராஹஸாரன், ஆக்ரந்தஸாரன், பக்கத்தில் மத்யமன், இவர்களுக்கு வெளியில் உதாஸீனனென்ற பன்னிரண்டு அரசர்கள் அடங்கிய ராஜமண்டலத்தையும், படை எடுப்பது ஸைன்யங்களை அணிவகுப்பது படை எடுத்துச் செல்வது ஸைன்யங்களுடன் தங்குவதென்ற யுத்தமுறையையும், கலைப்பது பிறரை அண்டுவதென்ற ஸமாதானத்தையும் பரீக்ஷித்தறிந்து, இவைகளில் விலக்கவேண்டியவைகளை விலக்கி, கொள்ள வேண்டியவைகளை ஏற்றுக்கொண்டு வருகிறாயா ?

(52) சாஸ்திரங்களில் சொல்லப்படும் லக்ஷணங்கள் பொருந்திய நான்கு அல்லது மூன்று மந்திரிகளுடன் முதலில் கலந்து யோசித்துப் பிறகு அவர்களுடன் தனித்தனியாக ஆலோசிக்கிறாயா ?

(53) நீ அத்யயனம் செய்யும் தேவர்களும் அக்னிஹோத்திரம் முதலியவைகளும் தம்மை அனுஷ்டிப்பதால் பயனைக் கொடுக்கின்றனவா ?

(54) நீ ஸம்பாதித்த தனம், அதைப் பிறருக்குக் கொடுப்பதாலும் நீ அனுப்பியதாலும் பயன் பெறுகின்றதா ?

(55) உன் பாரியை உனக்கு அனுகூலமாக இருக்கிறாளா ?

(56) நீ சாஸ்திரங்களைக் கேட்டதற்கு அடையாளமாக நல்ல ஆசாரமுள்ளவனாகவும் நல்ல நடத்தையுள்ளவனாகவும் இருக்கிறாயா ?

(57) நான் இதுவரையில் சொல்லி வந்த நீதி, தீர்க்காயுளையும் கீர்த்தியையும் தர்மம் காமம் அர்த்தமென்ற புருஷார்த்தங்களையும் கொடுக்கக்கூடியது. உன் புத்தி அந்த வழியில் செல்கின்றதா ?

(58) ஸன்மார்க்கத்தை அனுஸரித்துப் பெரியோர்களால் நிந்திக்கப்படாத இந்த ஆசாரம் நமது பிதாவால் அனுஷ்டிக்கப்படுகிறது. நமது பிரபிதாமஹர் முதலிய முன்னோர்கள் இதையே அனுஷ்டித்து வந்தார்கள். நீயும் இதையே அனுஷ்டித்து வருகிறாயா ?

(59) மதுரமாகப் பக்குவம் செய்யப்பட்ட ஆகாரத்தைப் பிறருக்குக் கொடுக்காமல் நீ மாத்திரம் புஜிக்காமலிருக்கிறாயா ?

(60) உன்னிடத்திலிருந்து உதவியை எதிர்பார்க்கும் நண்பர்களுக்கு உதவி செய்கிறாயா ?

மேற்சொன்ன நீதிகளை அறிந்து உசிதமாகத் தண்டித்து நம் முன்னோர்களையும் போலக் குடிகளைத் தர்மமாக ஆண்டு வந்தால் நீ இவ்வுலகத்தில் பூமண்டலாதிபதியாக இருப்பாய். உன் ப்ராரப்த கர்மம் முடியும்பொழுது இந்த தேகத்தை விட்டு ஞானியாக உத்தம லோகங்களை அடைவாய் என்று ஸகல ராஜதர்மங்களின் ரஹஸ்யத்தை ராமன் உபதேசித்தார்.

ராஜா து த⁴ர்மேண ஹி பாலயித்வா
மஹாமதிர் த³ண்ட³த⁴ர: ப்ரஜாநாம் ।
அவாப்ய க்ருத்ஸ்நாம் வஸுதா⁴ம் யதா²வத்
இதஶ்ச்யுத: ஸ்வர்க³ முபைதி வித்³வாந் ॥ (76)

ஸகலகார்ய ஸித்தி ஸ்வரூபிணியான ஸர்வலோக மாதா



திருச்சானூர் ஸ்ரீ அலர்மேல்மங்கைத் தாயார்



திருப்பதி க்ஷேத்திரத்தில் திவ்ய ஸேவை தந்தருளும்
தீராத வினைகள் தீர்க்கும் ஸ்ரீ திருவேங்கடமுடையான்

ஸ்ரீ:

# ஸகலகாரிய ஸித்தியும் திராவிட வேதங்களும்

இக்கலி காலத்தில் பரம்பொருளின் கருணையைப் பெறுதல் வெகு கஷ்டம். அவன் கருணை கஷ்டங்களைப் போக்கும்; கவலை களைத் துரத்தும்; நன்மைகளை உண்டாக்கும்; எடுத்த காரியம் யாவினும் வெற்றி தரும்; அக்கருணையே நமக்குத் துணை. இத்தகைய கருணையை எளிதில் பெறுவதற்கு வழி ஆண்டவனை அடிபணிந்து, சொல் மலர்கொண்டு அன்பால் கட்டிப் பாமாலை சாத்தி நெஞ்சம் நெகிழ்ந்து, உடல் புளகித்துப் பிரார்த்தனை செய்வதே ஆகும். எல்லாம் வல்ல இறைவனை ஏத்திப் பெருங் கருணையைப் பெறப் பல வழிகள் உள. அவைகளில் முக்கிய மானவை:

1. ஸந்த்யாவந்தனம் முதலிய அவரவர்கட்கு ஏற்பட்டுள்ள நித்ய கர்மாக்களை ஒழுங்காகச் செய்துவருதல்;
2. முறை தவறாமல் ஆன்றோர்களும் மூதாதையரும் செய்தபடி தினமும தேவ பூஜை செய்தல்;
3. தினமும் தவறாமல் ஸ்ரீமத் ராமாயண பாராயணம் செய்தல்;
4. புராண ப்ரவசனங்களை ச்ரவணம் செய்தல்;
5. பாகவதாளைத் தரிசனம் செய்தல்;
6. கோயில்களுக்குச் சென்று அவன் அடிபணிதல்;
7. பகவான் திருவடிகளை நம் மனக்கண்ணில் அமர்த்தி மஹான்கள் பலர் அருளியுள்ள ஸ்தோத்திரங்களை அநு ஸந்தித்தல்.

இவ்வேழு வழிகளிலும் எளிதான ஏழாம் வழியைப் பார்ப்போம்:

அரவணையில் அறிதுயில் கொண்ட அமலனாகிய திருமாலி னிடத்தே அகத்தை ஆழ்த்தி அன்பு கனிந்து நெஞ்சம் நெக்குருகிப் பாடியவர்கள் ஆழ்வார்கள் எனப்படுவர்.

கண்ணுதற் கடவுளிடத்தே கருத்தை இருத்திக் காதல் கொண்டு கசிந்து கண்ணீர் மல்கி, உவந்து உவந்து பாடியவர்கள் நாயன்மார் எனப்படுவர்.

தமிழ் மக்களுக்கு உறுதிப் பொருள்களை உரைத்த பெரியார் களுள் முன்னணியில் நிற்பவர் பட்டினத்து அடிகள்.

கடவுள், உயிர், உள்ளம், தத்வம் முதலியவைகளைப்பற்றி அரிய கருத்துக்களை அழகாகப் பாடியவர் தாயுமானவர்.

அஞ்சு வயது ஊமைப் பாலகனுய்ச் செந்திற் பதியடைந்து செவ்வேளின் கருணைத் திறத்தால் கவிமழை பொழிந்து சகலாகம தெய்வச் சைவம் தழைக்க வந்து அவதரித்தவர் **குமரகுருபரர்.**

ஆண்டவனிடத்தே ஈடுபட்டு அன்பு வழியைக் காட்டி அருட் பண்பைப் பரப்பி வாழ்ந்த பெரியவர்களுள் பெரியார் திருவருட் பிரகாச வள்ளலாராகிய **இராமலிங்க அடிகள்.**

கலியுக வரதனுகிய முருகக் கடவுளிடத்தே காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி நமக்கு திருப்புகழ் தந்தருளியவர் **அருணகிரிநாதர்.**

இப்பெரியார்கள் வேதம், ஆகமம், ஸ்மிருதி, புராணம், சாஸ்திரம் ஆகியவைகளின் கருத்துக்கள் யாவருக்கும் எளிதில் விளங்கும் வண்ணம் பகவானைப் பாமாலைகளால் போற்றிப் புனைந் தனர். சொல்வளமும் பொருள் வளமும் செழித்துத் **தோன்றுத் துணையின்** திருவருளைப் பெரிதும் கூட்டுவிப்பன அப்பாடல்கள்.

மேலும், இப்பெரியார்கள் இக்கலிகாலத்தில் நம் மக்கள் கடைத்தேறவும், கஷ்டங்கள் குறைந்து சுலபமாகக் கார்ய ஸித்திகள் பெறவும் பகவானைக் குறித்து துதிப்பாடல்கள் பல திருவாய்மலர்ந்தருளியுள்ளனர். அப்பெரியார்களைத் துதித்துப் போற்றி அவர்கள் அருளிய பாடல்களை மனம் ஒருமித்துப் பாடிப்போற்றும் பக்தர்கள் இறைவன் அருளை எளிதில் அடைவர் ; இது சத்தியமே.

எனவே, **கீழ்க்கண்ட தலைப்புக்களில்,** ஆழ்வார்கள் தந்தருளிய ப்ரபந்தங்களிலிருந்தும் நாயன்மார்கள் நம்மனோர்க்கீந்த தேவார திருவாசகங்களிலிருந்தும் மற்றும் அநேக மகான்களின் வாக்கி னின்றும் வரப்ரஸாதமாக வந்த பொன்போன்ற பாக்களில் சில வற்றைப் பக்தர்முன் ஸமர்ப்பித்துள்ளோம்.

1. **எடுத்த காரியம் எதுவும் வெற்றி பெற ;**
2. **மாணவர் கல்வி நலம் பெற ;**
3. **க்ஷேமமா ?**
4. **ஆபத்தா ? அஞ்சவேண்டா ;**
5. **மானம் காக்க ;**
6. **வளமெலாம் நிறைந்து வாழ விருப்பமா ?**
7. **மணமாக வேண்டுமா ? மணமாகி மணமாக வாழ விருப்பமா ?**
8. **ஆண்டவனே அருமருந்து ;**
9. **நம் அங்கங்களால் காரியஸித்தி ;**
10. **வீட்டைவிட்டுக் கிளம்பும்போது ;**
11. **கடிதங்கள் மூலம் காரியஸித்தி.**

இப்பாடல்கள் யாவும் நம் நாட்டு ஞானிகள், துரிய நிலை யையும் கடந்து சென்று துவாதசாந்தத் தலம் கண்ட ஜீவன் முக்தர்கள் அன்புப் பெருக்கினால் அருளியவை. அவற்றைப் படிப் போர் உள்ளம் உருகும்; கேட்போர் மனம் கரையும்; அவர் களுக்கு எம்பெருமான் கருணை தானே பெருகும்; இடர்கள் நீங்கும்; ஸகல காரியங்களிலும் ஸித்தி கிடைக்கும்.

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்

வேலும் மயிலும் துணை

திருச்சிற்றம்பலம்

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்

## நாலாயிர திவ்ய ப்ரபந்தத் தனியன்கள்

நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தையேனும் அதன் ஒரு பகுதியை யேனும் பாராயணம் செய்பவர்கள் பாராயணம் தொடங்குமுன் பொதுத் தனியன்களை அநுஸந்தித்துப் பிறகு அவ்வப்பகுதிக்குரிய தனியன்களை அநுசந்திக்கவேண்டும். அதன் பிறகே பாராயணத் தைத் தொடங்கவேண்டும். இது ஸம்ப்ரதாயம். ஆகவே, பொதுத் தனியன்களையும் இப்புத்தகத்தில் வந்துள்ள பகுதிகளின் தனியன்களையும் தனியாக இங்குத் தந்துள்ளோம். அவைகளை முறையாக அநுஸந்தித்து, பக்தர்கள், ஸகல காரியங்களிலும் ஸித்தி பெறுமாறு ஆண்டவனை அனவரதமும் வேண்டுகிறோம்.

### பொதுத் தனியன்கள்

(வடகலையார்)

### ஸ்ரீ வேதாந்த தேசிகர் தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்ய பூஷணம் ।
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ॥

(தென்கலையார்)

### ஸ்ரீ மணவாள மாமுனிகள் தனியன்

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம் ।
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் ॥

### குருபரம்பரையின் தனியன்

(இருகலையாருக்கும் பொது)

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம் ।
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ॥

**ஸ்ரீ உடையவர் தனியன்**

யோ நித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணாய மேநே।
அஸ்மத்குரோர்பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்யே ॥

**ஸ்ரீ நம்மாழ்வார் தனியன்**

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ்-
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்।
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா ॥

**ஆழ்வார்கள் உடையவர் தனியன்**

பூதம் ஸரஶ்ச மஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலஶேகரயோகிவாஹாந்।
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிஶ்ராந்
ஸ்ரீமத்பராங்குஶமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம் ॥

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்

---

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

**பெரியாழ்வார் திருமொழித் தனியன்கள்**

குருமுகமநதீத்ய ப்ராஹ வேதாநஶேஷாந்
நரபதிபரிக்லுப்தம் ஶுல்கமாதாதுகாம:।
ஶ்வஶுரமமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத்
த்விஜகுலதிலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி।

மின்னார் தடமதில்சூழ் வில்லிபுத்தூ ரென்று, ஒருகால்
சொன்னார் கழற்கமலம் சூடினோம்—முன்னாள்
கிழியறுத்தா னென்றுரைத்தோம்; கீழ்மையினிற், சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே! வந்து.

பாண்டியன் கொண்டாடப்பட்டர்பிரான் வந்தானென்று,
ஈண்டிய சங்கம் எடுத்தூத—வேண்டிய
வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்,
பாதங்கள் யாமுடைய பற்று.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

---

ஆண்டாள் திருவடிகளே சரணம்

**நாச்சியார் திருமொழித் தனியன்கள்**

அல்லிநாட் டாமரைமே லாரணங்கி னின்துணைவி
மல்லிநா டாண்ட மடமயில்—மெல்லியலாள்,
ஆயர் குலவேந்த னாகத்தாள், தென்புதுவை
வேயர் பயந்த விளக்கு.

கோலச் சுரிசங்கை மாயன்செவ் வாயின் குணம்வினவும்
சீலத் தனள், தென் திருமல்லி நாடி, செழுங்குழல்மேல்
மாலைத் தொடைதென் னரங்கருக் கீயும் மதிப்புடைய
சோலைக் கிளி, அவள் தூயநற் பாதம் துணைநமக்கே.

ஆண்டாள் திருவடிகளே சரணம்

---

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்

**பெருமாள் திருமொழித் தனியன்கள்**

இன்னமுதம் ஊட்டுகேன் இங்கேவா பைங்கிளியே!
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்,—பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோன், எங்கள்
குலசே கரனென்றே கூறு.

ஆரம் கெடப்பரன் அன்பர்கொள் ளாரென்று, அவர்களுக்கே
வாரங் கொடுகுடப் பாம்பில்கை யிட்டவன், மாற்றலரை
வீரங்கெடுத்தசெங் கோல்கொல்லி காவலன் வில்லவர்கோன்,
சேரன் குலசே கரன்முடி வேந்தர் சிகாமணியே.

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்

---

திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்

**திருச்சந்த விருத்தத் தனியன்கள்**

தருச்சந்தப் பொழில்தழுவு தாரணியின் துயர்தீர,
திருச்சந்த விருத்தம்செய் திருமழிசைப் பரன்வருமூர்,
கருச்சந்தும் காரகிலும் கமழ்கோங்கும் மணநாறும்,
திருச்சந்தத் துடன்மருவு திருமழிசை வளம்பதியே.

உலகு மழிசையு முள்ளுணர்ந்து, தம்மில்
புலவர் புகழ்க்கோலால் தூக்க,—உலகுதன்னை
வைத்தெடுத்த பக்கத்தும், மாநீர் மழிசையே
வைத்தெடுத்த பக்கம் வலிது.

திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்

---

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

**பெரிய திருமொழித் தனியன்கள்**

கலயாமி கலித்த்வம்ஸம் கவிம் லோக திவாகரம்
யஸ்ய கோபி: ப்ரகாஶாபி: ஆவித்யம் நிஹதம்தம: ||

வாழி பரகாலன் வாழி கலிகன்றி,
வாழி குறையலூர் வாழ்வேந்தன்—வாழியரோ,
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள், மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்.

நெஞ்சுக் கிருள்கடி தீபம் அடங்கா நெடும்பிறவி
நஞ்சுக்கு நல்ல வமுதம், தமிழ்நன் னூல்துறைகள்
அஞ்சுக் கிலக்கியம் ஆரண சாரம், பரசமயப்
பஞ்சுக் கனலின் பொறி,பர காலன் பனுவல்களே.

எங்கள் கதியே! இராமா நுசமுனியே!
சங்கைகெடுத் தாண்ட தவராசா! —பொங்குபுகழ்
மங்கையர்கோ னீந்த மறையா யிரமனைத்தும்,
தங்குமனம் நீயெனக்குத் தா.

மாலைத் தனியே வழிபறிக்க வேணுமென்று,
கோலிப் பதிவிருந்த கொற்றவனே—வேலை
அணைத்தருளும் கையா லடியேன் வினையை,
துணித்தருள வேணும் துணிந்து.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

---

பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்

**முதல் திருவந்தாதித் தனியன்**

கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்துதித்த,
பொய்கைப் பிரான்கவிஞர் போரேறு,—வையத்து
தடியவர்கள் வாழ அருந்தமிழ்நூற் றந்தாதி,
படிவிளங்கச் செய்தான் பரிந்து.

பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்

---

**நம்மாழ்வார் திருவடிகளே சரணம்**

**திருவாய்மொழித் தனியன்கள்**

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ் :
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் ।
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா ॥

பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோப வாங்மயம் ।
ஸஹஸ்ரசாகோப நிஷத்ஸமாகமம்
நமாம்யஹம்த்ராவிடவேத ஸாகரம் ॥

திருவழுதி நாடென்றும் தென்குருகூ ரென்றும்,
மருவினிய வண்பொருநலென்றும்,—அருமறைகள்
அந்தாதி செய்தான் அடியிணையே எப்பொழுதும்
சிந்தியாய் நெஞ்சே! தெளிந்து.

*மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணும்*
*இனத்தாரை யல்லா திறைஞ்சேன்,—தனத்தாலும்*
*ஏதுங் குறைவிலேன் எந்தை சடகோபன்*
*பாதங்கள் யாமுடைய பற்று.*

*ஏய்ந்தபெருங் கீர்த்தி யிராமா நுசமுனிதன்*
*வாய்ந்தமலர்ப் பாதம் வணங்குகின்றேன்,—ஆய்ந்தபெருஞ்*
*சீரார் சடகோபன் செந்தமிழ்வே தந்தரிக்கும்,*
*பேராத உள்ளம் பெற.*

*வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்*
*ஆன்ற தமிழ்மறைக ளாயிரமும்,—ஈன்ற*
*முதல்தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த*
*இதத்தா யிராமா நுசன்.*

*மிக்க விறைநிலையும் மெய்யா முயிர்நிலையும்,*
*தக்க நெறியும் தடையாகித்—தொக்கியலும்,*
*ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்,*
*யாழினிசை வேதத் தியல்.*

*நம்மாழ்வார் திருவடிகளே சரணம்*

*சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்*

**தேசிக ப்ரபந்தத் தனியன்**

*ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்ய பூஷணம்*
*ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ||*

*சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்*
*பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று*
*தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு*
*வானேறப் போமளவும் வாழ்வு.*

*சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்*

---

## 1. எடுத்த காரியம் எதுவும் வெற்றி பெற

**"எண்ணிய முடிதல் வேண்டும்**
**நல்லவே எண்ணல் வேண்டும்."**

நல்ல காரியத்தை ஸங்கல்பித்துக்கொண்டு நேர் வழியில் ஆண்டவனைத் துதித்து அவனருள் கோரிச் செய்யத் தொடங்கினால் அது முட்டின்றி நிறைவேறும் என்பது ஆன்றோர்கள் அனுபவத்தில் உணர்ந்தது. நல்ல காரியங்களுக்கென்று தடைகள் எத்தனையோ காத்துக்கொண்டிருக்கலாம்; செய்ய விடாது. அவைகளையெல்லாம் பொருட்டாகக் கருதாமல் ஈசுவரன்மேல் பாரம்

மாறுநிரைத் திரைக்கும் சரங்கள்இன
நூறுபிணம் மலைபோல் புரளக் கடல்
ஆடுமடுத்துதிரப் புனலா அப்பன்
நீறுபட இலங்கை செற்ற நேரே. (7)

நேர்சரிந்தான் கொடிக்கோழி கொண்டான் பின்னும்
நேர் சரிந்தா னெரியு மனலோன் பின்னும்
நேர்சரிந்தான் முக்கண்மூர்த்தி கண்டீர் அப்பன்
நேர்சரிவாணன் திண்டோள் கொண்ட வன்றே. (8)

அன்றுமண் நீரெரி கால்விண் மலைமுதல்
அன்று சுடரிரண்டும் பிறவும் பின்னும்
அன்று மழையுயிர் தேவும்மற்றும் அப்பன்
அன்று முதலுலகம் செய்ததுமே. (9)

மேய்நிரை கீழ்புக மாபுரளச் சுனை
வாய்நிறை நீர்பிளிறிச் சொரியஇன
ஆநிறை பாடியங்கே யொடுங்க அப்பன்
தீமழை காத்துக் குன்ற மெடுத்தானே. (10)

*குன்ற மெடுத்த பிரானடி யாரொடும்
ஒன்றி நின்ற சடகோப னுரைசெயல்
நன்றி புனைந்த ஓராயிரத் துள்ளிவை
வென்றி தரும்பத்தும் மேவிக் கற்பார்க்கே. (11)

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

## 2. மாணவர் கல்வி நலன் பெற

மக்களுக்குக் கல்வி நலனே நலன். இதைப் பெறுவதால் ழேழு ஜன்மங்களிலும் உய்யும் வழி கிடைக்கும். தற்காலத்தில் ாணவர்கள் கல்வியைக் கற்கவேண்டும் என்று பெரிதும் ஆவ டன் கஷ்டப்பட்டுப் படித்தபோதிலும் இவர்களிற் பலர் நிறைவு பருமல் வருந்துகின்றனர். இதற்குக் காரணம் என்ன? ருவருள் குறைவுதான்! ஆகையால் அத்திருவருளைப் பெற்று னத்தை வேறு எதிலும் செலுத்தாமல் படிப்பார்களேயாயின் ல்வி நன்கு வாய்க்கும். பிறவியில் ஊமையாய் இருந்த குமரகுரு ரர் செந்தூர் ஆண்டவன் அருளால் அருங்கவியாய் விளங்க இல்லையா? ஏதுமறியாத மூன்று வயதுப் பாலகன் "தோடுடைய செவியன்" என்றெடுத்து அருமையாய்ப் பாடி 'ஞானசம்பந்தன்' என்று பெயர் பெறவில்லையா? ஆகையால் தெய்வத்திருவருள் ட்டுவிக்காததொன்றில்லை. இத்தகைய பெருநம்பிக்கையுடன், மாணவர்களே! கீழ்வரும் பாசுரங்களை நாள்தோறும் நியமத் துடன் பாராயணம் செய்யுங்கள். தெய்வம் இரங்கும்; அருள் கொடுக்கும்; கற்ற கல்வி பெருகித் தக்க சமயத்தில் கைகொடுத்து உதவும். பரீட்சைகளிலும் நல்ல மார்க்குகள் கிடைக்கும்.

போட்டு மனத்தோடு செய்தால் யாராலும் அதைத் தடுக்க முடியாது. ஈசுவரன் கைகொடுப்பான்; எடுத்த காரியம் இனிது நிறைவேறும். கஷ்டங்கள், கவலைகள் அனைத்தும் சட்டென ஓடி மறையும்; சிந்தித்த செயல்கள் எல்லாம் சிறப்புடன் சித்திக்கும். ஆகவே, பரம புருஷனது வீரப்பிரதாபங்களையெல்லாம் தொடுத்துக் கூறும் கீழ்வரும் பாசுரங்களைப் பாராயணம் செய்பவர்களுக்கு எம்பெருமான் அருள் எளிதில் கிடைத்துப் பெரியதோர் லாபம் கிடைக்கும்.

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்

## நாலாயிர திவ்ய ப்ரபந்தம்

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

### திருவாய்மொழி [7—4]

### ஆழியெழ

*ஆழியெழச் சங்கும் வில்லு மெழத் திசை
வாழியெழத் தண்டும் வாளுமெழ அண்டம்
மோழை யெழமுடி பாதமெழ அப்பன்
ஊழியெழ வுலகங் கொண்ட வாறே. (1)

ஆறுமலைக் கெதிர்ந்தோடுமொலி அர
வூறுசுலாய் மலைதேய்க்குமொலி கடல்
மாறுசுழன் றழைக்கின் றவொலி அப்பன்
சாறுபடவமுதங்கொண்டநான்றே. (2)

நான்றில வேழ்மண்ணும் தானத்தவே பின்னும்
நான்றில வேழ்மலை தானத்தவே பின்னும்
நான்றில வேழ்கடல் தானத்தவே அப்பன்
ஊன்றி யிடந்தெயிற்றில் கொண்ட நாளே. (3)

நாளுமெழ நிலநீருமெழ விண்ணும்
கோளுமெழ எரிகாலுமெழ மலை
தாளுமெழச் சுடர்தானுமெழ அப்பன்
ஊளியெழ வுலக முண்ட வூணே. (4)

ஊணுடை மல்லர் ததர்ந்தவொலி மன்னர்
ஆணுடைச் சேனை நடுங்குமொலி விண்ணுள்
ஏணுடைத் தேவர் வெளிப்பட்ட வொலி அப்பன்
காணுடைப் பாரதம் கையறை போழ்தே. (5)

போழ்து மெலிந்த புன்செக்கரில் வான்திசை
சூழுமெழுந் துதிரப்புனலாமலை
கீழ்து பிளந்த சிங்கமொத்ததால் அப்பன்
ஆழ்துயர்செய் தசுரரைக் கொல்லுமாறே. (6)

* இக்குறிப்பிட்ட பாசுரங்களை இரண்டு தரம் பாராயணம் செய்யவேண்டும்

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்

## நாலாயிர திவ்ய ப்ரபந்தம்

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

### திருவாய்மொழி [1—10]

*பொருமா நீள்படை யாழிசங் கத்தொடு
திருமா நீள்கழ லேழுல குந்தொழ
ஒருமா ணிக்குற ளாகிநி மிர்ந்தஅக்
கருமா ணிக்கமென் கண்ணுள தாகுமே. (1)

கண்ணுள்ளே நிற்கும் காதன்மை யால்தொழில்
எண்ணி லும்வரும் என்னினி வேண்டுவம்
மண்ணும் நீரும் எரியும்நல் வாயுவும்
விண்ணுமாய் விரியும் எம்பி ரானையே. (2)

எம்பிரானை எந்தை தந்தை தந்தைக்கும்
தம்பிரானை, தண்டாமரைக் கண்ணனை
கொம்ப ராவு நுண் ணேரிடை மார்வனை
எம்பி ரானைத் தொழாய்மட நெஞ்சமே. (3)

நெஞ்சமே நல்லை நல்லை உன்னைப் பெற்றால்
என்செய்யோம், இனியென்ன குறைவினம்
மைந்தனை மலராள் மணவாளனை
துஞ்சும் போதும் விடாது தொடர்கண்டாய். (4)

கண்டாயே நெஞ்சே கருமங்கள் வாய்க்கின்றுஓர்
எண்டானும் இன்றியே வந்தியலு மாறு
உண்டானை உலகேழும் ஓர்மூவடி
கொண்டானை, கண்டு கொண்டனை நீயுமே. (5)

நீயும் நானுமிந் நேர்நிற்கில் மேல்மற்றோர்
நோயும் சார்கொடான் நெஞ்சமே சொன்னேன்
தாயும் தந்தையு மாயிவ் வுலகினில்
வாயும் ஈசன் மணிவண்ணன் எந்தையே. (6)

எந்தையே என்றும் எம்பெருமான் என்றும்
சிந்தையுள் வைப்பன் சொல்லுவன் பாவியேன்
எந்தையெம் பெருமா னென்று வானவர்
சிந்தையுள் வைத்துச் சொல்லும் செல்வனையே. (7)

செல்வ நாரணன் என்ற சொல் கேட்டலும்
மல்கும் கண்பனி நாடுவன் மாயமே
அல்லும் நன்பகலும் இடைவீ டின்றி
நல்கி யென்னை விடான் நம்பி நம்பியே, (8)

*நம்பி யைத்தென் குறுங்குடி நின்ற அச்
செம்பொ னேதிக ழுந்திரு மூர்த்தியை
உம்பர் வானவர் ஆதியஞ் சோதியை
எம்பி ரானை என்சொல்லி மறப்பனோ. (9)

மறப்பும் ஞானமும் நானொன் றுணர்ந்திலன்
மறக்குமென்றுசெந் தாமரைக் கண்ணொடு
மறப்பற வென்னுள்ளே மன்னி னான்தனை
மறப்ப னோவினி யானென் மணியையே. (10)

*மணியை வானவர் கண்ணனைத் தன்னதோர்
அணியை, தென்குரு கூர்ச்சட கோபன்சொல்
பணிசெய் ஆயிரத் துள்ளிவை பத்துடன்
**தணிவிலர் கற்பரேல் கல்வி வாயுமே.**

திருவாய்மொழி [5—6—2]

கற்கும் **கல்விக் கெல்லை** யிலனே யென்னும்
கற்கும் **கல்வி யாவேனும் யானே** யென்னும்
கற்கும் **கல்வி செய்வேனும் யானே** யென்னும்
கற்கும் **கல்வி தீர்ப்பேனும் யானே** யென்னும்
கற்கும் **கல்விச் சாரமும் யானே** யென்னும்
கற்கும் **கல்வி நாதன்** வந்தே றக்கொலோ
கற்கும் **கல்வியீர்க்கிவை** யென்சொல்லுகேன்
கற்கும் **கல்வி என்மகள் காண்கின்றவே.**

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

---

திருச்சிற்றம்பலம்

**திருநாவுக்கரசர் தேவாரம்**

நமச்சி வாயவே **ஞானமும் கல்வியும்**
நமச்சி வாயவே நானறி **விச்சையும்**
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறிக் காட்டுமே.

திருச்சிற்றம்பலம்

---

வேலுமயிலும் துணை

**அருணகிரிநாதர் கந்தரனுபூதி**

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
**குருவாய்** வருவாய் அருள்வாய் குகனே.

வேலுமயிலும் துணை

செந்திலாண்டவன் துணை

**குமரகுருபரர் சகலகலாவல்லி மாலை**

வெண் தாமரைக்கன்றி நின்பதம்தாங்க என்வெள்ளை உள்ளத்
தண்தாமரைக்குத் தகாதுகொலோ சகம்ஏழும் அளித்து
உண்டான் உறங்க ஒழித்தான் பித்தாக உண்டாக்கும்வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே சகல கலாவல்லியே. (1

நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்
பாடும் பணியிற் பணித்தருள்வாய் பங்கயாசனத்தில்
கூடும் பசும்பொற்கொடியே கனதனக் குன்றும்ஐம்பால்
காடும் சுமக்கும் கரும்பே சகல கலாவல்லியே. (2

அளிக்கும் செழுந்தமிழ்த் தெள்ளமுதார்ந்துன் அருட்கடலில்
குளிக்கும் படிக்கென்று கூடுங்கொலோ உளம்கொண்டு தெள்ளித்
தெளிக்கும் பனுவல் புலவோர் கவிமழை சிந்தக்கண்டு
களிக்கும் கலாப மயிலே சகல கலாவல்லியே. (3

தூக்கும் பனுவற் றுறைதோய்ந்த கல்வியும் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள்வாய் வடநூற்கடலும்
தேக்கும் செழுந்தமிழ்ச்செல்வமும் தொண்டர் செந்நாவினின்று
காக்கும் கருணைக் கடலே சகல கலாவல்லியே. (4

பஞ்சப்பிதந்தரு செய்யபொற்பாத பங்கேருகம் என்
நெஞ்சத் தடத்து அலராததென்னே நெடுந்தாட்கமலத்து
அஞ்சத் துவசம் உயர்த்தோன் செந்நாவும் அகமும் வெள்ளைக்
கஞ்சத் தவிசு ஒத்து இருந்தாய் சகல கலாவல்லியே. (5

பண்ணும் பரதமும் கல்வியும் தீஞ்சொற் பனுவலும்யான்
எண்ணும் பொழுது எளிதெய்த நல்காய் எழுதாமறையும்
விண்ணும் புவியும் புனலும் கனலும் வெங்காலும் அன்பர்
கண்ணும் கருத்தும் நிறைந்தாய் சகல கலாவல்லியே. (6

பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனும் என்பால்
கூட்டும்படி நின்கடைக்கண் நல்காய் உளங்கொண்டுதொண்டர்
தீட்டுங் கலைத்தமிழ்த் தீம்பால் அமுதம் தெளிக்கும்வண்ணம்
காட்டும் வெள்ளோதிமப் பேடே சகல கலாவல்லியே. (7

சொல்விற்பனமும அவதானமும் கவிசொல்லவல்ல
நல்வித்தையும் தந்து அடிமைகொள்வாய் நளினாசனஞ்சேர்
செல்விக்கு அரிதென்று ஒருகாலமும் சிதையாமைநல்கும்
கல்விப் பெருஞ்செல்வப் பேறே சகல கலாவல்லியே. (8

சொற்கும் பொருட்கும் உயிராம் மெய்ஞ்ஞானத்தின் தோற்ற மென்ன
நிற்கின்ற நின்னை நினைப்பவர்யார் நிலந்தோய் புழைக்கை
நற்குஞ்சரத்தின் பிடியோடு அரசன்னம் நாண நடை
கற்கும் பதாம்புயத்தாயே சகல கலாவல்லியே, (9)

மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னரும்என்
பண்கண்ட ளவில் பணியச் செய்வாய் படைப்போன் முதலாம்
விண்கண்ட தெய்வம் பல்கோடி உண்டேனும் விளம்பில்உன்போல்
கண்கண்ட தெய்வம் உளதோ சகல கலாவல்லியே. (10)

செந்திலாண்டவன்

## 3. க்ஷேமமா?

பக்த கோடிகளே! நாம் யாவரும் நல்ல உடலும் மனத்திடமும் பெற்று நீண்ட நாள் க்ஷேமமாக வாழவேண்டும். நாம் அப்படித்தானே விரும்புவோம்! நோயற்ற, வேறு வகைகளிலும் தொல்லையற்ற, வாழ்வுதானே குறைவற்ற செல்வம்! ஆகையால் கவலை இன்றி க்ஷேமமாக வாழ ஆண்டவன் அருள் அவசியம் வேண்டும். அவனன்றி யார் நமக்குப் பெரிய லாபத்தைக் கொடுக்கமுடியும்? ஆகையால் க்ஷேமத்தைக் கொடுக்கவேண்டும் என்று பகவானை முழுமனத்துடன் தினமும் பிரார்த்தனை செய்ய வேண்டும். அதன் பலன் மகத்தானது. அதையும் இப்போதே செய்யவேண்டும். ஏனெனில், நாம் பசி வந்தபிறகு ஆகாரம் சமைக்கத் தொடங்கமாட்டோம். முன்னமேயே 'பசி வந்து விடுமே' என்ற கவலையுடன் தயார் செய்து வைத்துக்கொண்டு பசி வேளைக்கு உண்போம். அதுபோலவே க்ஷேமமாயும் சுகமாயும் இருக்கும்போதே பரமகாருண்யமூர்த்தியான பரமன் அடிதாழ்ந்து தாழ்ந்து மனங்கசிந்து துதிக்கவேண்டும். முடையில்லாத காலங்களில் சிறுகச் சிறுகப் பணத்தைப் பாங்கியில் சேர்த்துவைப்பது போல் பரந்தாமன் திருநாமங்களை அடிக்கடிச் சொல்லிச் சொல்லி அதனால் உண்டாகும் புண்ணியத்தைச் சேர்த்துவைக்கவேண்டும். அதுதான் சோர்விடத்தில் துணையாகும்; எய்ப்பிடத்தில் வைப்பாகும். ஆண்டவனை எவ்வாறு போற்றித் துதிப்பது? அவனருள் பெற்ற அடியார்களுக்குத்தான் அது சுலபம். ஆனால் அறியாத பாமரரும் அத்தகைய நலனை அடைவதற்காகவே ஆழ்வார்களும் சிவனடியார்களும் சிறந்த துதிப்பாடல்களை அருளியிருக்கின்றனர். சிந்திக்கத் தித்திக்கும் திகட்டாத அமிர்தமாகிய அத்தகைய துதிகளில் சிலவற்றைக் கீழே காண்க. இவற்றைத் தினமும் அநுஸந்திப்பவர்கள் க்ஷேமத்தை அடைவார்கள் என்பதுநிச்சயம்.

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்

**நாலாயிர திவ்ய ப்ரபந்தம்**

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

**பெரியாழ்வார் திருமொழி [4—10—1]**

*துப்புடையாரை அடைவதெல்லாம்
சோர்விடத் துத்துணை யாவரென்றே
ஒப்பிலே னாகிலும் நின்னடைந்தேன்
**ஆனைக்கு நீயருள் செய்தமையால்**

எய்ப்பென்னை வந்து நலியும்போ(து)
அங்கேதும் நானுன்னை நினைக்கமாட்டேன்
அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்
அரங்கத் தரவணைப் பள்ளியானே.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

---

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

**பெரிய திருமொழி [1—3]**

*முற்றமூத்துக் கோல்துணையாமுன் னடிநோக் கிவளைந்து
இற்றகால்போல் தள்ளிமெள்ள விருந்தங் கிளையாமுன்
பெற்றதாய்போல் வந்தபேய்ச்சி பெருமுலை யூடுயிரை
வற்றவாங்கி யுண்டவாயான் வதரி வணங்குதுமே. (1)

முதுகுபற்றிக் கைத்தலத்தால் முன்னொரு கோலூன்றி
விதிர்விதிர்த்துக் கண்சுழன்று மேற்கிளை கொண்டிருமி
இதுவென்னப்பர் மூத்தவாறென் றிளையவ ரேசாமுன்
மதுவுண்வண்டு பண்கள்பாடும் வதரி வணங்குதுமே. (2)

உறிகள்போல்மெய்ந் நரம்பெழுந்தூன் தளர்ந்து உள்ளமெள்கி
நெறியைநோக்கிக் கண்சுழன்று நின்று நடுங்காமுன்
அறிதியாகில் நெஞ்சமன்பாய் ஆயிரநா மஞ்சொல்லி
வெறிகொள்வண்டு பண்கள்பாடும் வதரி வணங்குதுமே. (3)

பீளைசோரக் கண்ணிடுங்கிப் பித்தெழ மூத்திருமி
தாள்கள்நோவத் தம்மில்முட்டித் தள்ளி நடவாமுன்
காளையாகிக் கன்றுமேய்த்துக் குன்றெடுத் தன்றுநின்றான்
வாளைபாயும் தண்டடஞ்சூழ் வதரி வணங்குதுமே. (4)

பண்டுகாம ரானவாறும் பாவையர் வாயமுதம்
உண்டவாறும் வாழ்ந்தவாறும் ஒக்க வுரைத்திருமி
தண்டுகாலா வூன்றியூன்றித் தள்ளி நடவாமுன்
வண்டுபாடும் தண்டுழாயான் வதரி வணங்குதுமே. (5)

எய்த்தசொல்லோ டீளையேங்கி யிருமியிளைத்துடலம்
பித்தர்போலச் சித்தம்வேறாய்ப் பேசி யயராமுன்
அத்தனெந்தை யாதிமூர்த்தி யாழ்கடலைக்கடைந்த
மைத்தசோதி யெம்பெருமான் வதரி வணங்குதுமே. (6)

பப்பஅப்பர் மூத்தவாறு பாழ்ப்பது சீத்திரளை
ஒப்பஐக்கள் போதவுந்த வுன் தமர் காண்மினென்று
செப்புநேர்மென் கொங்கை நல்லார் தாம்சிரி யாதமுன்னம்
வைப்புநங்கள் வாழ்வுமானான் வதரி வணங்குதுமே. (7)

ஈசிபோமின் ஈங்கிரேன்மின் இருமி இளைத்தீர்உள்ளம்
கூசியிட்டீ ரென்றுபேசும் குவளையங் கண்ணியர்பால்
நாசமான பாசம்விட்டு நன்னெறி நோக்கலுறில்
வாசம்மல்கு தண்டுழாயான் வதரி வணங்குதுமே. (8)

புலன்கள்நைய மெய்யில்மூத்துப் போந்திருந் துள்ளமெள்கி
கலங்கஐக்கள் போதவுந்திக் கண்ட பிதற்றுமுன்
அலங்காலய தண்டுழாய்கொண் டாயிர நாமஞ் சொல்லி
வலங்கொள்தொண்டர் பாடியாடும் வதரி வணங்குதுமே. (9)

*வண்டுதண்டே னுண்டுவாழும் வதரி நெடுமாலை
கண்டல்வேலி மங்கைவேந்தன் கலிய னொலிமாலை
கொண்டுதொண்டர் பாடியாடக் கூடிடில் நீள்விசும்பில்
அண்டமல்லால் மற்றவர்க்கோர் ஆட்சி அறியோமே. (10)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

---

திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்

**திருச்சந்த விருத்தம் [101]**

இரந்துரைப்ப துண்டுவாழி ஏமநீர் நி றத்தமா
வரந்தருந் திருக்குறிப்பில் வைத்ததாகில் மன்னுசீர்
பரந்தசிந்தை ஒன்றிநின்று **நின்னபாத பங்கயம்**
**நிரந்தரம் நினைப்பதாக நீநினைக்க வேண்டுமே.**

திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்

---

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

**தேசிக ப்ரபந்தம்**

## நவமணிமாலை

மையுமா கடலும் மயிலுமா மழையும்
மணிகளுங் குவளையுங் கொண்ட
மெய்யனே அடியார் மெய்யனே விண்ணோர்
ஈசனே நீசனே னடைந்தேன்
கையும்ஆ ழியுமாய்க் களிறுகாத் தவனே
காலனார் தமரெனைக் கவரா(து)
ஐயனே வந்தன் றஞ்சலென் றருள்தென்
அயிந்தைமா நகரமர்ந் தானே. (7)

மஞ்சுலாவு சோலைசூழ யிந்தைமன்னு மன்னுசீர்
வரையெடுத்து நிரையளித்த மாசில்வாசு தேவனே
செஞ்சொலன்பர் சிந்தைகொண்டு தீதிலாத தூதனுய்த்
தேருமூர்ந்து தேசுயர்ந்த செல்வதெய்வ நாயக
வெஞ்சொலாளர் காலதூதர் விசுபாசம் வந்தென்மேல்
விழுந்தழுந்தி யானயர்ந்து வீழ்வதற்கு முன்னம்நீ
அஞ்சல்அஞ்சல் அஞ்சல்என்ற ளிக்கவேண்டும் அச்சுதா
அடியவர்க்கு மருளியக்கும் அடியவர்க்கு மெய்யனே. (8)

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

திருச்சிற்றம்பலம்

**மாணிக்கவாசகர் திருவாசகம்**

உணர்ந்தமா முனிவ ரும்பரோ டொழிந்தார்
உணர்வுக்கும் தெரிவரும் பொருளே
இணங்கிலி யெல்லா உயிர்கட்கும் உயிரே
எனைப்பிறப் பறுக்குமெம் மருந்தே
திணிந்ததோர் இருளில் தெளிந்தது வெளியே
திருப்பெருந் துறையுறை சிவனே
குணங்கள்தாம் இல்லா இன்பமே உன்னைக்
குறுகினேற் கினியென்ன குறையே.
திருச்சிற்றம்பலம்

திருச்சிற்றம்பலம்

**பட்டினத்தார் பாடல்**

கிழவருமாய் நோய்மூப்புக் கீழ்ப்பட்டுக் காமத்து
உழவரும்போய் ஓயுமா கண்டோம்—மொழிதெரிய
வாயினால் இப்போதே மன்றில் நடமாடும்
நாயனார் என்றுரைப்போம் நாம்.
திருச்சிற்றம்பலம்

செந்திலாண்டவன் துணை

**குமரகுருபரர் அருளிய முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்**

## வருகைப் பருவம்

உலகு குளிர எமது மதியில் ஒழுகும் அமுத கிரணமே
உருகும் அடியர் இதயம் நெகிழ உணர்வில் எழுநல் உதயமே
கலையும் நிறையும் அறவும் முதிர முதிரும் மதுர நறவமே
கழுவு துகளர் முழுக கநெடிய கருணை பெருகு சலதியே
அலகில் புவன முடியும் வெளியில் அளியும் ஒளியின் நிலயமே
அறிவுள் அறிவை அறியும் அவரும் அறிய அரிய பிரமமே
மலையின் மகள்கண் மணியை யனைய மதலை வருக வருகவே.
வளமை தழுவு பருதி புரியின் மருவு குமரன் வருகவே.
இழுமென் அருவி சொரியும் இமய முதல்வி புதல்வன் வருகவே
இயலும் நடையும் வடிவும் அழகும் எழுத அரியன் வருகவே
ஒழுகு கருணை முழுகு கமல வதனன் வருக வருகவே
ஒருவன் இருவ ரொருகை தொழுநல் உபய சரணன் வருகவே

விழுது விடுவெ ணிலவு பொழியும் நகையன் வருக வருகவே
விளரி பயிலும் அளியும் ஞிமிறும் விரவு குரவன் வருகவே
மழலை முதிர முதிரும் மதுர வசனன் வருக வருகவே
வளமை தழுவு பருதி புரியின் மருவு குமரன் வருகவே.

செந்திலாண்டவன் துணை

## 4. ஆபத்தா ? அஞ்சவேண்டா !

இயந்திர மயமாகிக்கொண்டிருக்கும் நவீன உலகில் ஆபத்துக்களும் விபத்துக்களும் ஸாதாரணமாகிவிட்டன. வெகு வேகமாக முன்னேறிக்கொண்டிருக்கும் விஞ்ஞானம் தந்த மிக 'நுண்ணிய அதிசயமான கருவிகளாலும் வேறு எவற்றாலும் விபத்துக்களையோ ஆபத்தையோ தடுக்கமுடியவில்லை. ஜன நெருக்கடி மிக்க பெரு நகரங்களிலோ கேட்கவேண்டாம். எதிர்பாராத விபத்துக்களும் ஆபத்துக்களும் ஏற்பட்டுக்கொண்டுதான் இருக்கின்றன. இப்படிப் பட்ட விபத்துக்களினின்றும் தப்ப ஒரே வழிதான் உண்டு. அது அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய், எங்கும் நிறைந்து நிற்கும் பரம்பொருளின் பாதகமலம் பணிந்து பாதகமலம் போற்றி **அவனே கதி** என்று சரணமடைதலேயாகும். 'ஆதிமூலமே' என்றலறிய யானைக்கு அருள்புரிய விரைந்தோடி வந்தான் பரமமூர்த்தி; வாகனத்தைஎதிர்பார்க்கவும் இல்லை; தான் வரும் வேகமும் போதா வென்று சுதரிசனத்தை முன்னே செலுத்தி களிற்றைக் காத்தான். ஆகவே தெய்வம் நமக்குத் துணையென்பதில் முழு நம்பிக்கை வைத்து ஆபத்துக் காலத்தில் **அவனடியே** சரணென்று சார்ந்தால் மலையத்தனை துன்பமும் தினையத்தனையாய் ஒழியும்.

**"சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்கு**
**அபாயம் ஒரு நாளும் இல்லை"**

என்ற ஔவையின் வாக்கு ஆண்டவன் வாக்கன்றோ ! ஆகவே, பக்தர்களே ! எத்தகைய இடுக்கண் வந்தாலும் மனங்கலங்க வேண்டா. எதற்கும் அஞ்சவேண்டா. ஆண்டவன் அருளில் ஆழ்ந்த நம்பிக்கை வைத்து அவனடியை மனத்தில் இருத்தி நெஞ்சங்கனிய "ஆண்டவனே ! அபயம், பரம புருஷா ! சரணம்" என்றெல்லாம் கதறி அடைக்கலம் புகுந்தால் அருவினையால் வந்த ஆபத்தெல்லாம் அழியும். ஆழ்வார்களும் சிவனடியார்களும் இவ்வாறு ஶரணாகதியடைவதே சுலபமான வழியென்று பலபடியாக எடுத்துக் காட்டியுள்ளார்கள். அவர்கள், கல்லும் புல்லும் கேட்டு உருகப் பண்ணுடன் பாடிய பாசுரங்களை நாமும் பாடியும் நினைத்தும் தொழுதும் வந்தால் ஆபத்தெல்லாம் அகலும். அத்தகைய சில பாசுரங்கள் இதோ :

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்

## நாலாயிர திவ்ய ப்ரபந்தம்

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்

[திருவித்துவக்கோடு என்ற திவ்யதேசம் மலைநாட்டில் சோரனூர் – எர்ணாகுளம் கிளை ரயில் பாதையில் பட்டாம்பி என்ற ஸ்டேஷனிலிருந்து சுமார் ஒரு மைலில் உள்ளது. எம்பெருமான் திருநாமம் : உய்யவந்த பெருமாள், தாயார் : வித்துவக்கோட்டுவல்லி. விமானம் : தத்வகாஞ்சன விமானம். தீர்த்தம் : சக்ர தீர்த்தம். எம்பெருமான் இங்கு அம்பரீஷனுக்கு ப்ரத்யக்ஷம். இப்பெருமானின் திருவடிகளை நினைத்து குலசேகர ஆழ்வார் அத்யத்புதமாக மங்களாசாஸனம் செய்துள்ளார்.]

### பெருமாள் திருமொழி [5]

*தருதுயரம் தடாயேல்உன் சரணல்லாற் சரணில்லை
விரைகுழுவு மலர்ப்பொழிற்சூழ் வித்துவக்கோட் டம்மானே
அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்
அருள்நினைந்தே அழுங்குழவி அதுவேபோன் றிருந்தேனே. (1)

கண்டார் இகழ்வனவே காதலன்றான் செய்திடினும்
கொண்டானை யல்லால் அறியாக் குலமகள்போல்
விண்டோய் மதிள்புடைசூழ் வித்துவக் கோட் டம்மாநீ
கொண்டாளாய் ஆகிலுமுன் குரைகழலே கூறுவனே. (2)

மீன்நோக்கும் நீள்வயல்சூழ் வித்துவக்கோட் டம்மாவென்
பால்நோக்கா யாகிலுமுன் பற்றல்லால் பற்றிலேன்
தான்நோக்கா தெத்துயரம் செய்திடினும் தார்வேந்தன்
கோல்நோக்கி வாழும் குடிபோன் றிருந்தேனே. (3)

வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால்
மாளாத காதல்நோ யாளன்போல் மாயத்தால்
மீளாத் துயர்தரினும் வித்துவக்கோட் டம்மாநீ
ஆளா வுனதருளே பார்த்திருப்ப னடியேனே. (4)

வெங்கண்திண் களிறடர்த்தாய் வித்துவக்கோட் டம்மானே
எங்குப்போய் உய்கேன்உன் இணையடியே யடையலல்லால்
எங்கும்போய்க் கரைகாணா தெறிகடல்வாய் மீண்டேயும்
வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே. (5)

செந்தழலே வந்தழலைச் செய்திடினும் செங்கமலம்
அந்தரஞ்சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்
வெந்துயர்வீட் டாவிடினும் வித்துவக்கோட் டம்மாவுன்
அந்தமில்சீர்க் கல்லால் அகங்குழைய மாட்டேனே. (6)

எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள்
மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் மற்றவைபோல்
மெய்த்துயர்வீட் டாவிடினும் வித்துவக்கோட் டம்மாவென்
சித்தமிக வுன்பாலே வைப்பன் அடியேனே. (7)

தொக்கிலங்கி யாறெல்லாம் பரந்தோடித் தொடுகடலே
புக்கன்றிப் புறம்நிற்க மாட்டாத மற்றவைபோல்
மிக்கிலங்கு முகில்நிறத்தாய் வித்துவக்கோட் டம்மாவுன்
புக்கிலங்கு சீரல்லால் புக்கிலன்காண் புண்ணியனே. (8)

நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்
தன்னையே தான்வேண்டும் செல்வம்போல் மாயத்தால்
மின்னையே சேர்திகிரி வித்துவக்கோட் டம்மா
நின்னையே தான்வேண்டி நிற்பன் அடியேனே. (9)

*வித்துவக்கோட் டம்மாநீ வேண்டாயே ஆயிடினும்
மற்றாரும் பற்றிலேன் என்றவனைத் தாள்நயந்த
கொற்றவேல் தானைக் குலசே கரன்சொன்ன
நற்றமிழ் பத்தும்வல்லார் நண்ணார் நரகமே. (10)

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்

---

## திருவேங்கடம்

[வேங்கடம் என்றால் பாபம் நீங்கிப் பரமனருள் கிடைக்கும் ஸ்தலம் என்று பொருள். இத்தலம் திருப்பதி, திருமலை என்ற பெயர்களாலும் வழங்கும். பெருமாள் திருவேங்கடமுடையான். ஸ்ரீநிவாஸப் பெருமான் கிழக்கு நின்ற திருக்கோலத்துடன் காட்சி தருகின்றார். இங்குக் கோனேரி முதலிய பல புண்ய தீர்த்தங்கள் உண்டு. இது மிகப் பிரபலமான பிரார்த்தனை ஸ்தலம் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?]

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

### பெரிய திருமொழி [1-10]

*கண்ணார் கடல்சூ ழிலங்கைக் கிறைவன்தன்
திண்ணாகம் பிளக்கச் சரஞ்செல வுய்த்தாய்
விண்ணோர் தொழும்வேங் கடமா மலைமேய
அண்ணா அடியே னிடரைக் களையாயே. (1)

இலங்கைப் பதிக்கன் றிறையாய அரக்கர்
குலங்கெட் டவர்மாளக் கொடிப்புள் திரித்தாய்
விலங்கல் குடுமித் திருவேங் கடம்மேய
அலங்கல் துளப முடியாய் அருளாயே. (2)

நீரார் கடலும் நிலனும் முழுதுண்டு
ஏரால மிளந்தளிர் மேல்துயி லெந்தாய்
சீரார் திருவேங் கடமா மலைமேய
ஆரா அமுதே! அடியேற் கருளாயே. (3)

உண்டா யுறிமேல் நறுநெய் யமுதாகக்
கொண்டாய் குறளாய் நிலமீ ரடியாலே
விண்டோய் சிகரத் திருவேங் கடம்மேய
அண்டா அடியே னுக்கருள் புரியாயே. (4)

தூணா யதனூ டரியாய் வந்துதோன்றி
பேணா அவுண னுடலம் பிளந்திட்டாய்
சேணார் திருவேங் கடமா மலைமேய
கோணா கணையாய் குறிக்கொள் ளெனைநீயே. (5)

மன்னா இம் மனிசப் பிறவியை நீக்கித்
தன்னாக்கித் தன்னின்னருள் செய்யும் தலைவன்
மின்னார் முகில்சேர் திருவேங் கடம்மேய
என்னானை யென்னப்ப னென்னெஞ்சி லுளானே. (6)

மானேய் மடநோக்கி திறத்தெதிர் வந்த
ஆனேய் விடைசெற்ற அணிவரைத் தோளா
தேனே திருவேங் கடமா மலைமேய
கோனே என்மனம் குடிகொண் டிருந்தாயே. (7)

சேய னணியனென் சிந்தையுள் நின்ற
மாயன் மணிவா ளொளிவெண் தரளங்கள்
வேய்விண் டுதிர்வேங் கடமா மலைமேய
ஆய னடியல் லதுமற் றறியேனே. (8)

**வந்தா யென் மனம் புகுந்தாய் மன்னிநின்றாய்**
**நந்தாத கொழுஞ்சுடரே எங்கள் நம்பீ**
**சிந்தாமணியே திருவேங் கடமேய**
**எந்தாய் இனியா னுன்னையென்றும்விடேனே.** (9)

*வில்லார் மலிவேங் கடமா மலைமேய
மல்லார் திரடோள் மணிவண்ண னம்மானை
கல்லார் திரடோள் கலியன் சொன்னமாலை
வல்லாரவர் வானவ ராகுவர் தாமே. (10)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

---

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

## திருவெள்ளக்குளம்

தஞ்சை ஜில்லாவிலுள்ள சீகாழிக்கு அருகில் 4 மைல் தூரத்தில் திருவெள்ளக்குளம் என்ற திவ்ய தேசம் உள்ளது; **அண்ணன் கோயில் என்று ப்ரஸித்தி** பெற்றது; மிகவும் புனிதமான திவ்ய தேசம். ஸ்ரீமந் நாராயணன் கிழக்கு நின்ற திருக்கோலத்துடன் காட்சியளிக்கின்றார். தாயார் பெயர் பூவார் திருமாமகள் நாச்சியார். இந்த திவ்ய தேசத்தில் செலுத்தப்படும் பிரார்த்தனைகள் திருப்பதியில் செலுத்துவதற்கு ஸமம் என்பது ப்ரஸித்தம். எனவே, திருப்பதி ப்ரார்த்தனைகளை இங்குச் செய்விக்கலாம்.

பக்தர்கள் இந்த எம்பெருமானை "ஸ்ரீநிவாஸன்" என்றும், தாயாரை "அலர்மேல மங்கை" என்றும், இவரை திருப்பதிப் பெருமாளுக்கு "அண்ணா" என்றும் போற்றுகிறார்கள்.]

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

## பெரிய திருமொழி [4-7]

*கண்ணார் கடல்போல் திருமேனி கரியாய்
நண்ணார்முனை வென்றிகொள் வார்மன்னு நாங்கூர்
திண்ணார் மதிள்சூழ்திரு வெள்ளக் குளத்துள்
**அண்ணா அடியே னிடரைக் களையாயே.** (1)

கொந்தார் துளவமலர் கொண்டணி வானே
நந்தாத பெரும்புகழ் வேதியர் நாங்கூர்
செந்தாமரை நீர்த்திரு வெள்ளக் குளத்துள்
**எந்தாய் அடியே னிடரைக் களையாயே.** (2)

குன்றால் குளிர்மாரி தடுத்துகந் தானே
நன்றாய பெரும்புகழ் வேதியர் நாங்கூர்
சென்றார் வணங்கும் திருவெள்ளக் குளத்துள்
**நின்றாய் நெடியா யடியே னிடர்நீக்கே.** (3)

கானார் கரிகொம்ப தொசித்த களிறே
நானாவகை நல்லவர் மன்னிய நாங்கூர்
தேனார் பொழில்சூழ் திருவெள்ளக் குளத்து
ளானாய்அடி யேனுக் கருள்புரி யாயே. (4)

*வேடார்திரு வேங்கடம் மேய விளக்கே
நாடார் புகழ்வேதியர் மன்னிய நாங்கூர்
சேடார் பொழில்சூழ் திருவெள்ளக் குளத்தாய்
பாடா வருவேன் வினையாயின பாற்றே. (5)

கல்லால் கடலை யணைகட்டி யுகந்தாய்
நல்லார்பலர் வேதியர் மன்னிய நாங்கூர்ச்
செல்வா திருவெள்ளக் குளத்துறை வானே
**எல்லா இடரும் கெடுமா றருளாயே.** (6)

கோலால் நிரைமேய்த்த எங்கோ வலர்கோவே
நாலாகிய வேதியர் மன்னிய நாங்கூர்
சேலார் வயல்சூழ் திருவெள்ளக் குளத்துள்
மாலேஎன வல்வினை தீர்த்தருளாயே. (7)

வாராகம தாகியும் மண்ணை யிடந்தாய்
நாராயண னேநல்ல வேதியர் நாங்கூர்
சீரார் பொழில்சூழ் திருவெள்ளக் குளத்துள்
**ஆரா வமுதே அடியேற் கருளாயே.** (8)

பூவார்திரு மாமகள் புல்லிய மார்பா
நாவார்புகழ் வேதியர் மன்னிய நாங்கூர்த்
தேவா திருவெள்ளக் குளத்துறை வானே
ஆவா அடியானிவ னென்றரு ளாயே. (9)

*நல்லன்புடை வேதியர் மன்னிய நாங்கூர்ச்
செல்வன் திருவெள்ளக் குளத்துறை வானை
கல்லின்மலி தோள்கலியன் சொன்ன மாலை
வல்லரென வல்லவர் வானவர் தாமே. (10)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

---

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

**தேசிக ப்ரபந்தம்**

**அடைக்கலப்பத்து**

பத்திமுதலாமவற்றில் பதியெனக்குக்கூடாமல்
எத்திசையும்உழன்றோடி இளைத்து விழுங்காகம்போல்
முத்திதருநகரேழில் முக்கியமாங்கச்சிதனில்
**அத்திகிரி அருளாளர்க்கு அடைக்கலம் நான் புகுந்தேனே.** (1)

உமதடிகள் அடைகின்றேன் **என்றொருகால் உரைத்தவரை**
அமையுமினி என்பவர்போல் அஞ்சலெனக்கரம்வைத்துத்
தமதனைத்தும் அவர் தமக்கு வழங்கியும் தாம்மிகவிளங்கும்
**அமைவுடைய அருளாளர் அடியிணையை அடைந்தேனே.** (7)

**அமிருதரஞ்சனி**

திருமாலடியிணைசேர்ந்து திகழ்ந்த அடிமைபெறத்
திருநாரணன்சரண் திண்சரணாகத்துணிந்தடைவோர்
ஒருநாளுரைக்க உயிர்தருமந்திரமோதியநாம்
**வருநாள்பழுதற்று வாழும்வகையதில்மன்னுவமே.** (35)

**அமிருதாசுவாதினி**

நின்னருளாங்கதியன்றி மற்றொன்றில்லேன்
நெடுங்காலம்பிழைசெய்த நிலைகழிந்தேன்
உன்னருளுக்கினிதான நிலையுகந்தேன்
உன்சரணேசரணென்னும் துணிவுபூண்டேன்
மன்னிருளாய்நின்ற நிலையெனக்குத் தீர்த்து
வானவர்தம்வாழ்ச்சிதரவரித்தேனுன்னை
இன்னருளால் இனியெனக்கோர்பரமேற்றாமல்
**என்திருமால் அடைக்கலங்கொள் என்னைநீயே.** (31)

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

திருச்சிற்றம்பலம்

திருநாவுக்கரசர் தேவாரம்

ஆடல் புரிந்த நிலையும் அரையில் அசைத்த அரவும்
பாடல் பயின்றபல் பூதம் பல்லா யிரங்கொள் கருவி
நாடற் கரியதோர் கூத்தும் நன்குயர் வீரட்டஞ் சூழ்ந்து
ஓடும் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சி வாயவே.

க்கண்பட் டிருக்கினும் இரந்தி யாரையும்
க்கிற்பிரானென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற்கீழ் கிடக்கினும் அருளின் நாமுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே.

உடல் கடுக்க லுற்ற உலகத்துள் உயிர்கட்கெல்லாம்
இடர்தனைக் கழிக்க வேண்டில் இறைவனை யேத்து மின்னோ
கடல்தனில் நஞ்ச முண்டு காண்பரி தாகி நின்ற
சுடர்தனைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்டவாறே.

நிறைபுன லணிந்த சென்னி நீணிலா அரவஞ் சூடி
மறையொலி பாடி யாடல் மயானத்து மகிழ்ந்த மைந்தன்
கறைமலிகடல்சூழ் நாகைக் கரோணம் கோயில் கொண்ட
இறைவனை நாளும் ஏத்த இடும்பைபோய் இன்ப மாமே.

மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற் றேழுலகும்
விண்பால் திசைகெட் டிருசுடர் வீழினும் அஞ்சல்நெஞ்சே
திண்பால் நமக்கொன்று கண்டோம் திருப்பா திரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே.

வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்(டு)
ஊனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே.

திருச்சிற்றம்பலம்

திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்தர் தேவாரம்

# கோளறுபதிகம்

ஆசார்யாள் வாக்கு

[1962 ஆம் பிப்ரவரி மீ 5உ எட்டுக் கிரஹங்கள் ஒரே ராசியில் கூடின. அப்போது பிரளயமே ஏற்பட்டு உலகம் அழிந்துவிடும் என்று யாவரும் நடுங்கினர். அவ்வமயம் நடமாடும் தெய்வமாக விளங்குகின்ற ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீமத் சங்கர பகவத்பாத ப்ரதிஷ்டித ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்திர சரஸ்வதி ஸ்ரீ பாதர்கள் "அஞ்சேல் அஞ்சேல்" என்று அபயம் தந்தார்கள். "மங்கை பாகனை மனத்துள் வைத்துச் சைவ நாயன்மாரில் முதல்வரான திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவாய்மலர்ந்தருளிய **கோளறு பதிகத்தைப்** பாராயணம் செய்யுங்கள். எந்தக் கிரஹமும் ஒரு துன்பமும் செய்யாது; எட்டுக் கிரஹங்கள் அல்ல; இதுபோன்ற எண்ணாயிரம் கிரஹங்கள் ஒன்றுசேர்ந்தாலும் அவை நல்லவாய் நல்லனவே செய்யும். ஒருவருக்கும் ஒரு துன்பமும் உண்டாகாது" என்று திருவாய்மலர்ந்தருளினார்கள். ஆகவே, இப்பதிகத்தைப் பாராயணம் செய்வதால் உண்டாகும் பெரும்பயனை எடுத்துக் கூறவும் வேண்டுமோ ?]

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள்கங்கை முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
**ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்வியாழம் வெள்ளி**
**சனிபாம் பிரண்டு முடனே**
**ஆசறு நல்லநல்ல அவைநல்ல நல்ல**
**அடியா ரவர்க்கு மிகவே.** (1)

என்பொடு கொம்பொடாமை இவைமார் பிலங்க
எருதேறி யேழை யுடனே
பொன்பொதி மத்தமாலை புனல்சூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
**ஒன்பதொ டொன்றொடேழு பதினெட் டொ டாறும்**
**உடனாய நாள்க ளவைதாம்**
**அன்பொடு நல்லநல்ல அவைநல்ல நல்ல**
**அடியா ரவர்க்கு மிகவே.** (2)

உருவளர் பவளமேனி ஒளிநீ றணிந்து
உவமையோடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றைதிங்கள் முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
திருமகள் கலையதூர்தி செயமாது பூமி
திசைதெய்வ மான பலவும்
அருநெதி நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. (3)

மதிநுதல் மங்கையோடு வடவா லிருந்து
மறையோது மெங்கள் பரமன்
நதியொடு கொன்றைமாலை முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
கொதியுறு காலன்அங்கி நமனோடு தூதர்
கொடுநோய்க ளான பலவும்
அதிகுணம் நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. (4)

நஞ்சணி கண்டனெந்தை மடவாள் தனோடும்
விடையேறு நங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னிகொன்றை முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
வெஞ்சின அவுணரோடும உருமிடியும் மின்னும்
மிகையான பூதமவையும்
அஞ்சிடும் நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. (5)

வாள்வரி அதளதாடை வரிகோ வணத்தர்
மடவாள் தனோடும் உடனாய்
நாள்மலர் வன்னிகொன்றை நதிசூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
கோளரி உழுவையோடு கொலையானை கேழல்
கொடுநாக மோடு கரடி
ஆளரி நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. (6)

செப்பிள முலைநன்மங்கை ஒருபாக மாக
விடையேறு செல்வ னடைவார்
ஒப்பிள மதியும்அப்பும் முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
வெப்பொடு குளிரும்வாத மிகையான பித்தும
வினையான வந்து நலியா
அப்படி நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. (7)

வேள்பட விழிசெய்தன்று விடைமேலிருந்து
மடவாள் தனோடும் உடனாய்
வாள்மதி வன்னிகொன்றை மலர்சூடி வந்தென்
உளமே புகுந்த வதனால்
ஏழ்கடல் சூழிலங்கை அரையன் றனோடும்
இடரான வந்து நலியா
ஆழ்கடல் நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. (8)

பலபல வேடமாகும் பரனாரி பாகன்
பசுவேறும் எங்கள் பரமன்
சலமக ளோடெருக்கு முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
மலர்மிசை யோனுமாலும் மறையோடு தேவர்
வருகால மான பலவும்
அலைகடல் மேருநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. (9)

கொத்தலர் குழலியோடு விசையற்கு நல்கு
குணமாய வேட விகிர்தன்
மத்தமும் மதியும்நாக முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
புத்தரொ டமணைவாதில் அழிவிக்கும் அண்ணல்
திருநீறு செம்மை திடமே
அத்தகு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. (10)

தேனமர் பொழில்கொள்ஆலை விளைசெந்நெல் துன்னி
வளர்செம்பொன் எங்கும் திகழ
நான்முகன் ஆதியாய பிரமா புரத்து
மறைஞான ஞான முனிவன்
தானுறு கோளும்நாளும் அடியாரை வந்து
நலியாத வண்ணம் உரைசெய்
ஆனசொல் மாலையோதும் அடியார்கள் வானில்
அரசாள்வர் ஆணை நமதே. (11)

திருச்சிற்றம்பலம்

திருச்சிற்றம்பலம்

**மாணிக்கவாசகர் திருவாசகம்**

அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
குன்றேயனையாய் என்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோ ரிடையூ றெனக்குண்டோ எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே.

திருச்சிற்றம்பலம்

திருச்சிற்றம்பலம்

**பட்டினத்தார் பாடல்கள்**

கல்லாப் பிழையும் கருதாப் பிழையும் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப் பிழையும்நின் அஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப்பிழையும்
எல்லாப் பிழையும பொறுத்தருள் வாய்கச்சி ஏகம்பனே.

என்செய லாவதி யாதொன்றும் இல்லை இனித்தெய்வமே
உன்செய லேஎன்று உணரப்பெற் றேன்இந்த ஊன்எடுத்த
பின்செய்த தீவினை யாதொன்றும் இல்லை பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யோஇங்ங னேவந்து மூண்டதுவே.

திருச்சிற்றம்பலம்

---

திருச்சிற்றம்பலம்

**தாயுமானவர் பாடல்கள்**

அரும்பொனே மணியேஎன் அன்பேஎன் அன்பான
அறிவேஎன் அறிவிலூறும்
ஆனந்த வெள்ளமே என்றென்று பாடினேன்
ஆடினேன் ஆடிநாடி
விரும்பியே கூவினேன் உலறினேன் அலறினேன்
மெய்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரி எனஎனிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தேனியான்
இரும்புநேர் நெஞ்சகக் கள்வனா னாலுமுனை
இடைவிட்டு நின்றதுண்டோ ?
என்றுநீ அன்றுநான் உன்னடிமை அல்லவோ ?
யாதேனும் அறியாவெறும்
துரும்பனே என்னினும் கைவிடுதல் நீதியோ ?
தொண்டரொடு கூட்டுகண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

தந்தை தாயும்நீ என்னுயிர்த் துணையும்நீ சஞ்சல மதுதீர்க்க
வந்த தேசிக வடிவுநீ உனையலால் மற்றொரு துணைகாணேன்
அந்த மாதியும் அளப்பெருஞ் சோதியே ஆதியே அடியார்தம்
சிந்தை மேவிய தாயுமா னவனெனும் சிரகிரிப் பெருமானே.

இனிய நின்னைச் சரணென அடைந்த நாயேன்
பேயினும் கடையனாகிப் பிதற்றுதல் செய்தல நன்றோ ?
தீயிடை மெழுகாய் நொந்தேன் தெளிவிலேன் வீணே காலம்
போயின தாற்று கில்லேன் பூரணா னந்த வாழ்வே.

**ஓயாதோ என்கவலை உள்ளேயா னந்தவெள்ளம்**
**பாயாதோ ஐயா பகராய் பராபரமே.**

**எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணியெண்ணி ஏழைநெஞ்சம்**
**புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே.**

**எத்தால் பிழைப்பேனோ எந்தையே நின்னருட்கே**
**பித்தானேன் மெத்தவும்நான் பேதை பராபரமே.**

**நின்னைச் சரண்புகுந்தால் நீகாத்தல் வேண்டுமல்லால்**
**என்னைப் புறம்விடுதல் என்னே பராபரமே.**

திருச்சிற்றம்பலம்

திருச்சிற்றம்பலம்

## இராமலிங்க சுவாமிகள் திருவருட்பா

முன்னவனே யானை முகத்தவனே முத்திநலம்
சொன்னவனே தூமெய்ச் சுகத்தவனே—மன்னவனே
சிற்பரனே ஐங்கரனே செஞ்சடைய சேகரனேர்
**தற்பரனே நின்றாள் சரண்.**

பொன்னின் றொளிரும் புரிசடையோய் நின்னையன்றிப்
பின்னொன் றறியேன் பிழைநோக்கி—என்னை
அடித்தாலும் நீயே அணைத்தாலும் நீயே
பிடித்தேன்உன் பொற்பாத பேறு.

பற்றும் செழுந்தமிழால் பாடுகின்றோர் செய்தபெருங்
குற்றம் குணமாகக் கொள்ளும் குணக்கடலே
மற்றங்கும் எண்தோள் மலையே மரகதமே
பெற்றிங் கடியேன் பிணிகெடுத்தால் ஆகாதோ ?

போற்றேன் எனினும் பொறுத்திடல் வேண்டும் புவிநடையாம்
சேற்றே விழுந்து தியங்குகின் றேனைச் சிறிதும்இனி
ஆற்றே னெனதர சேயமு தேயென் அருட்செல்வமே
மேற்றேன் பெருகு பொழில்தணி காசல வேலவனே,

பார்க்கின் நிலையே பன்னிருகண் படைத்தும் எளியேன்
பாடனைத்து,
தீரகின் நிலையே என்னையான் செய்வேன் சிறியேன் சீமானே
போர்க்குன் றெருடுசூர்ப் புயக்குன்றும் பொடிசெய் வேல்கைப்
புண்ணியனே
சீர்க்குன் றெனும்நல் வளத்தணிகைத் தேவே மயிலூர் சேவகனே.
திருச்சிற்றம்பலம்

---

வேலும் மயிலும் துணை

**அருணகிரிநாதர் கந்தரலங்காரம்**

**நாளென் செயும்வினை தானென் செயுமெனை நலியவந்த**
**கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயும்குமரேசரிரு**
**தாளும் சிலம்பும சதங்கையும் தண்டையும் சண்முகமும்**
**தோளும் கடம்பும் எனக்குமுன் னேவந்து தோன்றிடினே.**

வேலும் மயிலும துணை

---

வேலும் மயிலும் துணை

**அருணகிரிநாதர் அருளிச் செய்த திருப்புகழ்**

**குன்றுதோரூடல்**

அதிருங் கழல்ப ணிந்துன் அடியேனுன்
அபயம் புகுவ தென்று நிலைகாணு
இதயம் தனிலிருந்து க்ருபையாகி
இடர்சங் கைகள் கலங்க அருள்வாயே
எதிரிங் கொருவ ரின்றி நடமாடும்
இறைவன் தனது பங்கில் உமைபாலா
பதியெங் கிலுமிருந்து விளையாடிப்
பலகுன் றிலுமமர்ந்த பெருமாளே.

வேலும் மயிலும் துணை

## 5. மானம் காக்க

பெரும் புகழும் எல்லையிலாச் செல்வமும் வருமாயினும் அவற்றை அடைய மேற்கொள்ளும் வழி நேர்மையும் நீதியும் கொண்டதாய் இருக்கவேண்டும். நேர்மையைக் கடைப்பிடிக்காமல் இருப்பவன் பெருமையை இழக்கிறான். அந்நிலையிலிருந்து இழிந்தவன் மானம் இழந்தவன் ஆவான். மானம் பெரிதோ? உயிர் பெரிதோ? யாவரும் மானமே பெரிது என்பர். கவரிமான் என்றொரு மான் உண்டு. அது தன் உடம்பிலிருந்து ஒரு மயிர் நீக்கப்படு

மாயினும் உயிர் விட்டுவிடுமாம். அதுபோலச் சிறந்தோர்கள் தம் மானம அழியும் நிலைவரின உயிரைவிட்டு மானத்தைக் காத்துக்கொள் வார்கள். பலர் முன்னிலையில் திரௌபதியின் ஆடையைக் களையத் தொடங்கிய துச்சாதனன் தலை கவிழுமாறு திரௌபதி தன் உணர்ச்சிகள் யாவற்றையும் ஒருமுகமாக்கிக் கண்ணனைக் கருத்தில் இருத்தி, "'கோவிந்தா! கோவிந்தா!" என்று கதறினள். வண்ண வண்ணத் துணிகள் களையக்களைய மேலும் மேலும் வளர்ந்து வந்துகொண்டே இருந்தன. அவள் செய்த உபாயம் தான் என்ன? வேறென்னவாக இருக்கும்? திருமாலடியே சரண் எனக் கதறினள். இதனை வில்லிபுத்தூராழ்வார் வாக்கால் காண்போம்:

"ஆருகி இருதடங்கண் அஞ்சனவெம்
புனல்சோர அளகம் சோர
வேருன துகில்தகைந்த கைசோர
மெய்சோர வேறோர் சொல்லும்
கூருமல் கோவிந்தா கோவிந்தா
என்றரற்றிக் குளிர்ந்து நாவில்
ஊருத அமிழ்தூற உடல்புளகித்து
உள்ளமெலாம் உருகினளே."

ஆகவே, பக்தசிகாமணிகளே!

தன் நிலை குறைந்து பெருமை அழியும் என்ற அச்சமா? அல்லது சொன்ன சொல்லைக் காப்பாற்றமுடியாமல் மானம் போகும் நிலையா? எதற்கும் அஞ்சவேண்டா!

"கோவிந்தா ! கோவிந்தா !" என்று கதறுங்கள் ;
"அச்சுதா ! அச்சுதா !" என்று அலறுங்கள் ;

அச்சம்அழியும் ; மானம் நிலைக்கும்; ஆனந்தம் பெருகும்; கண்ணன் கைவிடான் ; கருணை பொழிவான் ; திண்ணம் திண்ணம்.

கண்ணன் கழலிணையே கதி

---

## 6. வளமெலாம் நிறைந்து வாழ விருப்பமா?

வளமான வாழ்க்கை வாழ வழி வேண்டுமா? ஆண்டவன் அருளில் அசையாத நம்பிக்கையுடன் அனவரதமும் துதிப்பதே அதற்கு வழி. அவனருள் இருந்தால் எத்தகைய கடினமான காரியமும் எளிதில் முடியும் ; ஊமை வாசாலம் உடையவன் ஆவான் ; நொண்டியோ மலையையும் தாண்டுவான்.

"மூகம் கரோதி வாசாலம் பங்கும் லங்கயதே கிரிம்
யத் க்ருபா தமஹம் வந்தே பரமானந்த மாதவம்" ||

ஆகையால்,கேவலம் தரித்திரத்தைக் களைந்து வளமான வாழ்க்கை வழியை அருளுவது அவனுக்குக் கஷ்டமோ? ஒரு நாளும் இல்லை. ——— ——ரமிக்கு வாழ்பவர்கள் சிலரே. தரித்திரத்தால் பிணிப்

புண்டு தடுமாறி 'ஏன் பிறந்தோம்' என்று மனம் நொந்து நடைபிணமாய் வாழ்பவரே பலர். இதற்கு காரணம் வேறொன்றுமில்லை. தவம் செய்பவர் சிலரே ; செய்யாதவர் பலர். இக்கலிகாலத்திலே ஆண்டவன் அருநாமத்தை அகமெகிழ்ந்து ஒரு முறை சொல்லுதலே பெருந்தவம் செய்த பலனைத் தரும்.

அது செய்தால் போதுமே! பழவினையால் வந்த கொடுமையெலாம் தீர்ந்து பாரில் வாக்குச் சாதுரியமும் மனமகிழ்ச்சியும் செல்வப்பெருக்கும் அரோக திடகாத்திரமும் மற்றும் வேண்டுவன யாவும் பெற்று வல்லாங்கு வாழலாமே.

"வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு."

என்று ஔவையார் அருளியிருப்பது சிந்திக்கத்தக்கது. ஆகையால், சுத்த நிர்க்குணமான பரதெய்வத்தை, பேராயிரம் படைத்த பெருமானை, பரம்பொருளை எவ்வாறு பெயரிட்டுப் பாடி ஆடித் துதிக்க வேண்டும் என்பதை அறவாழி அந்தணன் தாள் சேர்ந்த ஆழ்வார்களும் தனக்குவமை இல்லாத தனித்தலைவன் தாள்சேர்ந்த சிவனடியார்களும் செய்துகாட்டியிருக்கிறார்கள். அவைகளைத் தினமும் பாராயணம் செய்துவந்தால் அவையே நன்மையும் செல்வமும் நாளும் நல்கித் தீமையும் பாவமும் போக்கித் துன்பம் துடைத்து இன்பம் பெருக்கிப் பெருவாழ்வளிக்கும். அவைகளில் சில பொறுக்குமணிகள் :

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்

**நாலாயிர திவ்ய ப்ரபந்தம்**

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

**பெரிய திருமொழி [1-1-9]**

*குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுய ராயின எல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும்பு அருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலந்தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம். (1)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

## திருவாய்மொழி [3-10]

*சன்மம் பலபல செய்து வெளிப்பட்டுச்
 சங்கொடு சக்கரம்வில்
ஒண்மை யுடைய உலக்கை ஒள்வாள்
 தண்டுகொண்டு புள்ளூர்ந்து உலகில்
வன்மை யுடைய அரக்க ரசுரரை
 மாளப் படைபொருத
நன்மை யுடையவன் சீர்பர வப்பெற்ற
 நானோர் குறைவிலனே. (1)

குறைவில் தடங்கடல் கோளர வேறித்தன
 கோலச் செந்தா மரைக்கண்
உறைவன் போலவோர் யோகு புணர்ந்த
 ஒளிமணி வண்ணன் கண்ணன்
கறையணி மூக்குடைப் புள்ளைக் கடாவி
 அசுரரைக் காய்ந்த அம்மான்
நிறைபுக ழேத்தியும் பாடியும் ஆடியும
 யானொரு முட்டிலனே. (2)

முட்டில் பல்போகத் தொருதனி நாயகன்
 மூவுல குக்குரிய
கட்டியைத் தேனை யமுதை நன்பாலைச்

மட்டவிழ்தண்ணந் துழாய்முடி யானை
 வணங்கி அவன்திறத்துப்
பட்டபின்னை இறையாகிலும் யானென்
 மனத்துப் பரிவிலனே. (3)

பரிவின்றி வாணனைக் காத்துமென் றன்று
 படையொடும் வந்தெதிர்ந்த
திரிபுரம் செற்றவ னும்மகனும் பின்னும்
 அங்கியும் போர் தொலையப்
பொருசிறைப் புள்ளைக் கடாவிய மாயனை
 ஆயனைப் பொற்சக்கரத்
தரியினை அச்சுதனைப் பற்றி யானிறை
 யேனும் இடரிலனே. (4)

இடரின்றி யேயொரு நாளொரு போழ்தில்
 எல்லாவுல குங்கழிய
படர்புகழ்ப் பார்த்தனும் வைதிகனு முடனேறத்
 திண்டேர் கடவி

சுடரொளி யாய்நின்ற தன்னுடைச் சோதியில்
வைதிகன் பிள்ளைகளை
உடலொடுங் கொண்டு கொடுத்தவ னைப்பற்றி
ஒன்றுந் துயரிலனே. (5)

துயரில் சுடரொளி தன்னுடைச் சோதி
நின்ற வண்ணம் நிற்கவே
துயரில் மலியும் மனிசர் பிறவியில்
தோன்றிக்கண் காணவந்து
துயரங்கள் செய்து தன் தெய்வ நிலையுலகில்
புகவுய்க்கும் அம்மான்
துயரமில் சீர்க்கண்ணன் மாயன் புகழ்துற்ற
யானோர் துன்பமிலனே. (6)

துன்பமும் இன்பமும் ஆகிய செய்வினை
யாயுல கங்களுமாய்
இன்பமில் வெந்நர காகி இனிய
நல்வான் சுவர்க்கங் களுமாய்
மன்பல் லுயிர்களு மாகிப் பலபல
மாய மயக்குகளால்
இன்புறு மிவ்விளை யாட்டுடை யானைப்
பெற்றேதும அல்லலிலனே. (7)

அல்லலில் இன்பம் அளவிறந் தெங்கும்
அழகமர் சூழொளியன்
அல்லி மலர்மகள் போக மயக்குக்க
ளாகியும் நிற்குமம்மான்
எல்லையில் ஞானத்தன் ஞானமஃதேகொண்டு
எல்லாக் கருமங் களும்செய்
எல்லையில் மாயனைக் கண்ணனைத் தாள்பற்றி
யானோர் துக்கமிலனே. (8)

துக்கமில் ஞானச் சுடரொளி மூர்த்தி
துழாயலங் கற்பெருமான்
மிக்கபன் மாயங்களால் விகிர்தம் செய்து
வேண்டு முருவுகொண்டு
நக்க பிரானோ டயன்முத லாக
எல்லாரு மெவையும் தன்னுள
ஒக்க வொடுங்க விழுங்கவல் லானைப்பெற்
றொன்றும் தளர்விலனே. (9)

தளர்வின்றி யேயென்றும் எங்கும் பரந்த
தனிமுதல் ஞானமொன்றாய்
அளவுடை ஐம்புலனகள் அறியா வகையால
அருவாகி நிற்கும

வளரொளி யீசனை மூர்த்தியைப் பூதங்கள்
ஐந்தை இருசுடரை
கிளரொளி மாயனைக் கண்ணனைத் தாள்பற்றி
யானென்றும் கேடிலனே. (10)

*கேடில் விழுப்புகழ்க் கேசவனைக் குருகூர்ச்
சடகோபன் சொன்ன
பாடலோர் ஆயிரத்துள் இவையும் ஒருபத்தும்
பயிற்றவல் லார்கட்கு, அவன்
நாடும் நகரமும நன்குடன் காண
நலனிடை ஊர்திபண்ணி
வீடும் பெறுத்தித்தன் மூவுல குக்கும்
தருமொரு நாயகமே. (11)

**திருவாய்மொழி [4—5]**

*வீற்றிருந் தேழுல கும்தனிக் கோல்செல்ல வில்சீர்
ஆற்றல்மிக் காளு மம்மானை வெம்மா பிளந்தான் றன்னை
போற்றியென் றேகைக ளாரத் தொழுது சொல்மாலைகள்
ஏற்றநோற் றேற்கினி என்ன குறை எழுமையுமே. (1)

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

---

திருச்சிற்றம்பலம்

**திருநாவுக்கரசர் தேவாரம்**

மலையினார் மகளோர் பாக மைந்தனார் மழுவொன் றேந்திச்
சிலையினால் மதில்கள் மூன்றும் தீயெழச்செற்ற செல்வர்
இலையினார் சூல மேந்தி ஏகம்பம் மேவி னாரைத்
தலையினால் வணங்க வல்லார் தலைவர்க்கும் தலைவர் தாமே.

மையினார் மலர்நெ டுங்கண் மங்கையோர் பங்கராகிக்
கையிலோர் கபால மேந்திக் கடைதொறும் பலிகொள் வார்
எய்வதோர் ஏனம் ஓட்டி ஏகம்பம் மேவி னாரைக் [தாம்
கையினால் தொழவல லார்க்குக் கடுவினை களைய லாமே.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.

சங்குலாம் முன்கைத் தையலோர் பாகத்தன்
வெங்குலாமத வேழம் வெகுண்டவன்
கொங்குலாம் பொழில் கோடிகா வாவென
ஏங்கி லாததோர் இன்பம்வந் தெய்துமே.

திருச்சிற்றம்பலம்

---

திருச்சிற்றம்பலம்

**சுந்தரர் தேவாரம்**

பொன்னு மெய்ப்பொரு ளுந்தரு வானைப்
போக முந்திரு வும்புணர்ப் பானைப்
பின்னை யென்பிழை யைப்பொறுப் பானைப்
பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை
இன்ன தன்மைய னென்றறி யொண்ணா
எம்மா னையெளி வந்தபி ரானை
அன்னம் வைகும் வயற்பழ னத்தணி
யாரூ ரானை மறக்கலும் ஆமே.

திருச்சிற்றம்பலம்

திருச்சிற்றம்பலம்

**பட்டினத்தார் பாடல்கள்**

மானைக் கலந்த மணவாளன் காழி வரதன்செங்க
ணானைப் புரந்தவன் பத்தர்க்கு முத்தி அளித்தருளும்
ஏனைப் பெரும்பொருள் கல்விமெய்ச் செல்வம் இருந்தளிப்பார்
தேனைத் தருஞ்செழுந் தாமரை நாமகள்செந்திருவே.

பொருளும் குலனும் புகழும் திறனும்
அருளும் அறிவும் அனைத்தும்—ஒருவர்
கருதாஎன் பார்க்கும் கரைமிடற்றாய் தொல்லை
மருதாஎன் பார்க்கு வரும்.

ஓடாமல் பாழுக்கு உழையாமல் ஓரம் உரைப்பவர்பால்
கூடாமல் நல்லவர் கூட்டம் விடாமல்வெங் கோபம் நெஞ்சில்
நாடாமல் நன்மை வழுவாமல் இன்றைக்கு நாளைக்கென்று
தேடாமல் செல்வம் தருவாய் சிதம்பர தேசிகனே.

பாராமல் ஏற்பவர்க்கு இல்லைஎன் னாமல் பழுதுசொல்லி
வாராமல் பாவங்கள் வந்துஅணு காமல் மனமயர்ந்து
பேராமல் சேவை பிரியாமல் அன்பு பெறுதவரைச்
சேராமல் செல்வம் தருவாய் சிதம்பர தேசிகனே.

கொல்லாமல் கொன்றதைத் தின்னாமல் குத்திரம் கோள்களவு
கல்லாமல் கைதுவ ரோடிணங் காமல் கனவிலும்பொய்
சொல்லாமல் சொற்களைக் கேளாமல் தோகையர் மாயையிலே
செல்லாமல் செல்வம் தருவாய் சிதம்பர தேசிகனே.

திருச்சிற்றம்பலம்

திருச்சிற்றம்பலம்

**தாயுமானவர் பாடல்கள்**

இல்லை உண்டென் றெவர்பக்க மாயினும்
சொல்ல வோஅறி யாத தொழும்பன்யான்
செல்ல வேறொரு திக்கறி யேன்எலாம்
வல்ல நீயெனை வாழ்விக்க வேண்டுமே.

எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
யல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே.

திருச்சிற்றம்பலம்

---

செந்திலாண்டவன் துணை

**குமரகுருபரர் அருளிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்**

**வருகைப் பருவம்**

தொடுக்கும் கடவுள் பழம்பாடல் தொடையின் பயனே [நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ் சுவையே அகந்தைக் கிழங்கை [யகழ்ந்து
எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கே வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும் இளமென் பிடியே எறிதரங்கம்
உடுக்கும் புவனம் கடந்துநின்ற ஒருவன் திருவுள்ளத்தில் அழகு
ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிரோ வியமே மதுகரம்வாய்
மடுக்கும் குழற்காடு ஏந்தும்இள வஞ்சிக் கொடியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு வாழ்வே வருக வருகவே.

பெருந்தேன் இறைக்கும் நறைக்கூந்தல் பிடியே வருக முழுஞானப்
பெருக்கே வருக பிறமௌலிப் பெம்மான் முக்கட் சுடர்க்கிடுநல்
விருந்தே வருக மும்முதற்கும் வித்தே வருக வித்தின்றி
விளைந்த பரமா னந்தத்தின் விளைவே வருக பழமறையின்
குருந்தே வருக அருள்பழுத்த கொம்பே வருக திருக்கடைக்கண்
கொழித்த கருணைப் பெருவெள்ளம் குடைவார் பிறவிப் பெரும் [பிணிக்கோர்
மருந்தே வருக பசுங்குதலை மழலைக் கிளியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு வாழ்வே வருக வருகவே.

**குமரகுருபரர் அருளிய சிதம்பரச் செய்யுட் கோவை**

வாழி திருமன்றங் கண்ட மலர்கண்கள்
வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்
வாழி அவனை வணங்கு முடிச்சென்னி
வாழி அவன்சீர் பாடும் வாய்.

செந்திலாண்டவன் துணை

## 7. மணமாக வேண்டுமா ? மணமாகி மணமாக வாழ விருப்பமா ?

## ஸ்ரீ ஆண்டாள் அருளிச் செய்த

## வாரணமாயிரம்

"வாரணமாயிரம்" என்று தொடங்கும் இப்பகுதி ஆண்டா ளுடைய அருளிச் செயலாகிய நாச்சியார் திருமொழியில் ஆறுவ தாக அமைந்துள்ளது. திருமணக் காலத்தில் 'பச்சை பூசுதல்' என்னும் நிகழ்ச்சி நடைபெறுங்கால் இப்பகுதிப் பாடல்களைப் பாடுதல் இயல்பு. அவ்வாறு பாடுதலால் மணமக்களின் வாழ்க்கை இனிக்கும் என்பார் ஆன்றோர். மாயவனை மணந்து மகிழ்ந்தமை போல் தாம் கண்ட கனு நிகழ்ச்சியை ஆண்டாள் இப்பகுதியில் அழகுறப் பாடியுள்ளார். இப்பகுதியை நாத்தழும்பேறப் பயின் றவர், "வாயும் நன்மக்களைப் பெற்று மகிழ்வர்" என்று அம்மை யாரே அருளியுள்ளார். தமக்கு மணப்பருவம் எய்தியும், மணம் நடைபெறத் தடைவரின், மகளிர் இப்பகுதியை ஒருமனத்துடன் படித்து, ஆண்டாளின் திருவடிகளைத் துதித்தல் நலம். அவர்கட்கு விரைவில் திருமணம் நிகழும் என்பர் பெரியோர்.

*வாரணம் ஆயிரம் சூழ வலம்செய்து
நாரண நம்பி நடக்கின்றான் என்றெதிர்,
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீ ! நான். (1)

நாளை வதுவை மணமென்று நாளிட்டுப்
பாளை கமுகு பரிசுடைப் பந்தற்கீழ்
கோளரி மாதவன் கோவிந்தன் என்பானோர்
காளை புகுதக் கனாக்கண்டேன் தோழீ ! நான். (2)

இந்திரன் உள்ளிட்ட தேவர் குழாமெல்லாம்
வந்திருந் தென்னை மகள்பேசி மந்திரித்து
மந்திரக் கோடி உடுத்தி மணமாலை
அந்தரி சூட்டக் கனாக்கண்டேன் தோழீ ! நான். (3)

நால்திசைத் தீர்த்தங் கொணர்ந்து நனிநல்கி,
பார்ப்பனச் சிட்டர்கள் பல்லார் எடுத்தேத்தி,
பூப்புனை கண்ணிப் புனிதனோ டென்றன்னைக்
காப்புநாண் கட்டக் கனாக்கண்டேன் தோழீ ! நான். (4)

கதிரொளி தீபம் கலசமுடன் ஏந்திச்
சதிரிள மங்கையர் தாம்வந் தெதிர்கொள்ள
மதுரையார் மன்னன் அடிநிலை தொட்டெங்கும்
அதிரப் புகுதக் கனாக்கண்டேன் தோழீ ! நான். (5)

மத்தளம் கொட்ட வரிசங்கம நின்றூத
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழீ ! நான் (6)

வாய் நல்லார் நல்ல மறையோதி மந்திரத்தால
பாசிலை நாணல் படுத்துப் பரிதிவைத்துக்
காய்சின மாகளி றன்னான் என் கைபற்றித்
தீவலம் செய்யக் கனாக்கண்டேன் தோழீ ! நான். (7)

இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றாவான்
நம்மை உடையவன் நாராயணன் நம்பி
செம்மை உடைய திருக்கையால் தாள்பற்றி
அம்மி மிதிக்கக் கனாக்கண்டேன் தோழீ ! நான். (8)

வரிசிலை வாள்முகத்து என்னைமார் தாம்வந்திட்டு
எரிமுகம் பாரித்து என்னைமுன் னேநிறுத்தி
அரிமுகன் அச்சுதன் கைமமேலென் கைவைத்துப
பொரிமுகம் தட்டக் கனாக்கண்டேன் தோழீ! நான். (9)

குங்குமம் அப்பிக் குளிர்சாந்தம் மட்டித்து
மங்கல வீதி வலம்செய்து மணநீர
அங்கவ னோடும் உடன்சென்றங் கானைமேல
மஞ்சன மாட்டக் கனாக்கண்டேன் தோழீ! நான். (10)

*ஆயனுக்காகத் தான்கண்ட கனாவினை
வேயர் புகழ்வில்லி புத்தூர்க்கோன் கோதைசொல
தூய தமிழ்மாலை ஈரைந்தும் வல்லவர்
வாயும்நன் மக்களைப் பெற்று மகிழ்வரே. (11)

ஆண்டாள் திருவடிகளே சரணம்

## 8. ஆண்டவனே அருமருந்து

பால நினைந்து ஊட்டும் தாயினும் சாலப் பரிந்து பேரருள் செய்யும் பெருமான் ஆண்டவன். அவனே உளநோய்களையும் களைந்து உள்ளக் களிப்பும் உடற் சுகமும் தருவான. நோய்கள் உண்டாக மூல காரணம் பழவினையே ; மற்றைக் காரணங்கள் யாவும் மேலுக்குத் தோன்றுபவையே. கொடிய வினையாகவும், அதைத்தீர்ப்பவனாகவும், நோயாகவும், நோய் கொண்டவனாகவும், மருந்தாகவும், மருத்துவனாகவும், யாவுமாகவும இருப்பவன் அவனே. ஆகையால் தீராத வினைகள் எல்லாம் தீர்க்கும் தெய்வத் தைப் பணிந்தேத்தி அவனிடத்தும மருத்துவரிடத்தும் மாறாத நம்பிக்கையுடன் மருந்துண்பவர்கள் வெகு சீக்கிரத்தில் நோய் நீங்கித் திடகாத்திரம் பெற்று நீடுவாழ்வார்கள். சாமான்ய ஜனங் களும் அறிந்து பெரும்பயன் பெறவேண்டும் என்னும கருணை

விலாசத்தால் ஈசன் அடியார்கள் ஆண்டவனை அருமருந்தாய்க் கண்டு பாடிப் பரவியுள்ளார்கள். அவைகளை நாளும் நாவார, நெஞ்சுருக, கண்ணீர் மல்க, மெய்சிலிர்க்க அகங்குழைந்து அருமையாய்ப் பக்தியுடன் பாடி வந்தால் நம்மைப் பதைக்கச் செய்யும் பாதக நோய்கள், நம்மை அண்டா ; வந்தாலும் உடனே பறந்து விடும் என்பதில் அணுவளவும் ஐயமில்லை. ஆகையால் அத்தகைய பொக்கிஷங்களில் சில நன் முத்துக்களைத் தருகின்றோம் ; அனுதினமும் பாராயணம் செய்து பயன் பெற்று வாழ்க.

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்

## நாலாயிர திவ்ய ப்ரபந்தம்

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

### பெரியாழ்வார் திருமொழி [5 - 2]

*நெய்க்குடத்தைப் பற்றியேறும் எறும்புகள்போல் நிரந்தெங்கும்
கைக்கொண்டு நிற்கின்ற நோய்காள் காலம்பெற உய்யப்போமின்
மெய்க்கொண்டு வந்துபுகுந்து வேதப் பிரானார் கிடந்தார்
பைக்கொண்ட பாம்பணையோடும் பண்டன்று பட்டினங்காப்பே. (1)

சித்திரகுத்தன் எழுத்தால் தென்புலக்கோன் பொறியொற்றி
வைத்தவிலச் சினைமாற்றித் தூதுவரோடி யொளித்தார்
முத்துத்திரைக் கடற்சேர்ப்பன் மூதறிவாளர் முதல்வன்
பத்தர்க்கமுதன் அடியேன் பண்டன்று பட்டினம்காப்பே. (2)

வயிற்றில்தொழு வைப்பிரித்து வன்புலச் சேவையதக்கி
கயிற்றும்அக் காணிகழித்துக் காலிடைப் பாசங்கழற்றி
எயிற்றிடைமண் கொண்டவெந்தை இராப்பகல் ஓதுவித்தென்னைப்
பயிற்றிப்பணி செய்யக்கொண்டான் பண்டன்று பட்டினங்
காப்பே. (3)

மங்கியவல் வினைநோய்கள் உமக்குமோர் வல்வினை கண்டீர்
இங்குப்புகேன்மின் புகேன்மின் எளிதன்று கண்டீர்கேண்மின்
சிங்கப்பிரா னவனெம்மான் சேரும்திருக் கோயில்கண்டீர்
பங்கப்படா துய்யப்போமின் பண்டன்று பட்டினங்காப்பே. (4)

மாணிக்குற ளுருவாய மாயனையென் மனத்துள்ளே
பேணிக்கொணர்ந்து புகுத்வைத்துக் கொண்டேன் பிறிதின்றி
மாணிக்கப்பண் டாரங்கண்டீர் வலிவன்குறும் பர்களுள்ளீர்
பாணிக்கவேண்டா நடமின் பண்டன்று பட்டினங்காப்பே. (5)

உற்றவுறு பிணிநோய்கள் உமக்கொன்று சொல்லுகேன்கேண்மின்
பெற்றங்கள் மேய்க்கும்பிரானார் பேணும்திருக் கோயில்கண்டீர்
அற்றமுரைக் கின்றேன் இன்னம் ஆழ்வினைகாள் உமக்கிங்கோர்
பற்றில்லை கண்டீர் நடமின் பண்டன்று பட்டினங்காப்பே. (6)

மகாங்கைச் சிறுவரையென்னும் பொதும்பினில் வீழ்ந்துவழுக்கி
அங்கோர் முழையினில் புக்கிட்டழுந்திக் கிடந்துழல்வேனை
வங்கக்கடல் வண்ணனம்மான் வல்வினையாயினமாற்றி
பங்கப்படா வண்ணஞ்செய்தான் பண்டன்று பட்டினங்காப்பே.(7)

ஏதங்களா யினவெல்லாம் இறங்கவிடு வித்தென்னுள்ளே
பீதகவாடைப் பிரானார் பிரமகுரு வாகிவந்து
போதில்கமல வன்னெஞ்சம் புகுந்துமென் சென்னித்திடரில்
பாதவிலச் சினைவைத்தார் பண்டன்று பட்டினங்காப்பே. (8)

உறகல் உறகல்உறகல் ஒண்சுடர் ஆழியே சங்கே
அறர்வறிநாந் தகவாளே யழகிய சார்ங்கமேதண்டே
இறவுபடாமல் இருந்த எண்மருலோக பாலீர்காள்
பறவையரை யாவுறகல் பள்ளியறை குறிக்கொண்மின். (9)

*அரவத் தமளியினொடும் அழகிய பாற்கடலோடும்
அரவிந்தப் பாவையுந்தானும் அகம்படி வந்துபுகுந்து
பரவைத்திரை பலமோதப் பள்ளிகொள் கின்றபிரானை
பரவுகின்றான் விட்டுசித்தன் பட்டினங்கா வற்பொருட்டே. (10)

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

---

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசர் தேவாரம்

கூற்றாயின வாறு விலக்ககிலீர்
  கொடுமைபல செய்தன் நானறியேன்
ஏற்றாயடிக் கேயிர வும்பகலும்
  பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றி னகம்படியே
  குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேனடி யேனதி கைக்கெடில
  வீரட்டா னத்துறை யம்மானே. (1)

நெஞ்சம்உமக் கேயிட மாகவைத்தேன்
  நினையா தொருபோதும் இருந்தறியேன்
வஞ்சம்இது ஒப்பது கண்டறியேன்
  வயிற்றோடு துடக்கி முடக்கியிட
நஞ்சாகி வந்தென்னை நலிவதனை
  நணுகாமற் றுரந்து கரந்துமிடீர்
அஞ்சேலு மென்னீர் அதிகைக்கெடில
  வீரட்டா னத்துறை அம்மானே (2)

திருச்சிற்றம்பலம்

திருச்சிற்றம்பலம்

**சுந்தரர் தேவாரம்**

கட்ட மும்பிணி யுங்களை வானைக்
காலற் சீறிய காலுடை யானை
விட்ட வேட்கைவெந் நோய்களைவானை
விரகி னால்விடு தற்கரி யானைப்
பட்ட வார்த்தை படநின்ற வார்த்தை
வாரா மேதவிர்ப் பணிப் பானை
அட்ட மூர்த்தியை மட்டவிழ் சோலை
ஆரூ ரானை மறக்கலும் ஆமே.

திருச்சிற்றம்பலம்

திருச்சிற்றம்பலம்

**மாணிககவாசகர் திருவாசகம்**

முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன்—தென்னன்
பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரம் தீர்க்கும் மருந்து.

இருந்தென்னை ஆண்டான் இணையடியே சிந்தித்
திருந்திரந்து கொள்நெஞ்சே எல்லாம்—தரும்காண்
பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
மருந்துருவாய் என்மனத்தே வந்து.

திருச்சிற்றம்பலம்

திருச்சிற்றம்பலம்

**பட்டினத்தார் பாடல்**

பிறவா திருக்க வரம்பெறல் வேண்டும் பிறந்துவிட்டால்
இறவா திருக்க மருந்துண்டு காண்இது எப்படியோ
அறமார் புகழ்த்தில்லை அம்பல வாணர் அடிக்கமலம்
மறவா திருமன மேஅது காண்நல் மருந்தெனக்கே.

ம்பலம்

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதிய கீர்த்தனை

**பல்லவி**

பித்தந் தெளிய மருந்தொன் றிருக்குது
பேரின் மன்றுள்ளே

மற்ற மருந்துகள் தின்றாலும் உள்ளுக்கு
வல்லே வல்லே—ஐயோ அடிமை (பித்தந் தெளிய)

**சரணங்கள்**

பாம்பும் புலியும்மெய்ப் பாடுபட்டுத் தேடி
பார்த்துப் பயிரிட்டது
பாரளந்ததிரு மாயனும் வேதனும்
பார்த்துக் களித்ததுண்டு
பார்வதி யென்றொரு சீமாட்டி—அதில்
பாதியைத் தின்றதுண்டு—இன்னும்
பாதி யிருக்குது பறையா நீயும் போய்ப்
பாரென் றுத்தரம் தாரும் தீரும். (பித்தந் தெளிய)

பத்துத் திசையும் பரவிப் படர்ந்தாலும்
பார்த்துப் பிடியாரே
தத்திக் குதிக்கும் தாளங்கள் போடும்
தண்டைச் சிலம்பு கொஞ்சும்
தித்திக்கும் தேனொடு செங்கரும் போநல்ல
சத்தமுடை யார்க்கே—என்
சித்தத்தைக் கட்டி இழுக்குது அங்கே
சென்றால் போதும் கண்டால் தீரும். (பித்தந் தெளிய)

ஊரைச் சொன்னாலும் இப்பாவம் தொலையும்
ஊழ்வினை ஊடறுக்கும்
பேரைக் கொண்டாடி புலம்புகி றார்வெகு
பேர்களுக் குப்பிழைப்பு
சாரும் நரைதிரை தீரும் மருந்து
சாதியைப் பாராது—இன்னம்
தீராத நோய்கள் படைத்த எனக்குத்
தீரும் தீரும் ஐயே அடிமை. (பித்தந் தெளிய)

திருச்சிற்றம்பலம்

## 9. நம் அங்கங்களால் காரியஸித்தி

"மனம்போன போக்கெல்லாம் போகவேண்டா" என்பது பெரியோர் வாக்கு. மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம் பொறிகளும், மனத்தையும் இழுத்துக்கொண்டுபோய்த் தகாத வற்றில் செலுத்துவது சுலபம். இதனாலேயே "ஐம்பொறி ஆட்சி கொள், மனத்தை அடக்கு, மனத்தை அடக்கினால் ஜகத்தை அடக் கலாம்" என்ற வாக்குகள் தோன்றின. நாம் ஆண்டவன் பணிக்கே உடலை ஆளாக்கவேண்டும். சிவனடியார்களில் சிறந்த நாவுக்கரசர் உழவாரப் படைகொண்டு கோயிற் சுற்றுப்புறங்களில் புல் முதலிய வற்றைக் களைந்து சுத்தம் செய்து கைங்கரியம் செய்தது யாவருக்கும் தெரிந்ததே. இதனை அப்பர் பெருமானே பின்வரும் தேவாரப் பாசுரத்தால் விளங்கக் கூறியுள்ளார்

> **"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா**
> **நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்**
> **புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்**
> **பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்**
> **தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்**
> **சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்**
> **அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதி யென்றும்**
> **ஆரூரா என்றென்றே அலறு நில்லே."**

மற்ற விலங்குகட்கெல்லாம் இல்லாத சிறப்புகள் பலவற் றைப் பரமன் மக்களுக்கு அருளியுள்ளான். அவற்றை அவனுக்கே பயன்படுத்தவேண்டும். சிந்திக்கும் ஆற்றலும், பேசும் திறமும் அருளிய தெய்வத்தைச் சிந்திக்கவே மனம்; அவன் புகழ் பாடவே நாக்கு ; எங்கணும் நிறைந்துள்ளானைக்காணவே கண்கள்;மூலமாக நின்றானை முகரவே மூக்கு ; கருதுவார்க்குக் கதியாய் விளங்கும் பகவந் நாமாவைக் கேட்கவே காது.

ஸ்ரீ ராமசந்த்ர மூர்த்தியையும், காயாம்பூ வண்ணனாகிய கண்ணனையும் அந்தரங்கமாக அனுபவித்த குலசேகராழ்வாரும் தாம் இயற்றிய முகுந்தமாலையில் இக்கருத்தைக் கல்மனமும் கரை யும்படிக் கூறியிருக்கிறார். (ஸ்தோத்திரமாலையில் காண்க.)

**"என்பொறி ஐந்தும், உன்னிடத் தன்றி உண்ணும் இரை மாற்றவேண்டும் ; இதுவே என் விண்ணப்பம் ; என்னப்பனே."**

என்று அழகியமணவாள தாஸர் கதறுகின்றார். இவ்வாறு ஐம் பொறிகளையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்வதால் உடலா லும், வாயாலும், கண்ணாலும், மூக்காலும், செவியாலும், நாம் செய்யும் பாவங்களும் அபசாரங்களும் அடியோடு தீர்ந்து தெய்வத் திருவருள் பெருகும். குணமென்னும் குன்றேறி நின்று பரம புருஷனின் கடாட்சத்திற்குப் பாத்திரமான ஆழ்வார்களும் நாயன் மார்களும் இதனையே வற்புறுத்திக் கூறியிருக்கிறார்கள். அவைகளைத்

தினமும் பக்தி சிரத்தையுடன் பாராயணம் செய்வதால் ஐம்புலனையும் அடக்கி ஆதிபகவன் அருள்பெற்று இப்பிறப்பில் எல்லா இன்பமும் எய்துவர்; ஸகல காரியங்களும் ஸித்திக்கும். மறுபிறபிறப்பிலோ சிறந்த பேரின்பமடைவர்; இத்தகைய நெஞ்சையும் உயிரையும் உருக்கித் தொல்லை வஞ்சத்தை முருக்கியொழிக்கும் பாசுரங்களைக் கீழே காண்க. அவற்றை அனுதினமும் அன்புடனும் சிரத்தையுடனும் போற்றி மனனம் செய்துவந்தால் தீராத வினையாவும் தீர்ந்து தூய்மையராய்க் கண்ணும், காதும், மூக்கும்,வாயும் உடலும் பெற்ற பேற்றை அடைவார்கள். ஸகல காரியங்களிலும் வெற்றி பெற்று ஸௌக்யமாக வாழ்வார்கள்.

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்

## நாலாயிர திவ்ய ப்ரபந்தம்

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

### பெரிய திருமொழி [11-7]

*நீணகம் சுற்றி நெடுவரைநட் டாழ்கடலைப்
பேணான் கடைந்தமுதம் கொண்டுகந்த பெம்மானைப்
பூணார மார்வனைப் புள்ளூரும் பொன்மலையைக்
**காணாதார் கண்ணென்றும் கண்ணல்ல கண்டாமே.** (1)

நீள்வான் குறளுருவாய் நின்றிரந்து மாவலிமண்
தாளா லளவிட்ட தக்கணைக்கு மிக்கானைத்
தோளாத மாமணியைத் தொண்டர்க் கினியானைக்
**கேளாச் செவிகள் செவியல்ல கேட்டாமே.** (2)

தூயானைத் தூய மறையானைத் தென்னாலி
மேயானை மேவா ளுயிருண் டமுதுண்ட
வாயானை மாலை வணங்கி யவன்பெருமை
**பேசாதார் பேச்சென்றும் பேச்சல்ல கேட்டாமே.** (3)

கூடா விரணியனைக் கூருகிரால் மார்விடந்த
ஓடா வடலரியை உம்பரார் கோமானைத்
தோடார் நறுந்துழாய் மார்வனை ஆர்வத்தால்
**பாடாதார் பாட்டென்றும் பாட்டல்ல கேட்டாமே.** (4)

மையார் கடலும் மணிவரையும் மாமுகிலும்
கொய்யார் குவளையும் காயாவும் போன்றிருண்ட
மெய்யானை மெய்ய மலையானைச் சங்கேந்தும்
**கையானைக் கைதொழாக் கையல்ல கண்டாமே.** (5)

கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும்
முள்ளார் முளரியும் ஆம்பலுமுன் கண்டக்கால்
புள்ளாயோர் ஏனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்
உள்ளதா ருள்ளத்தை உள்ளமாக் கொள்ளோமே. [கென்று (6)

கனையார் கடலும் கருவிளையும் காயும்
அனையானை அன்பினால் ஆர்வத்தால் என்றும்
சுனையார் மலரிட்டுத் தொண்டராய் நின்று
நினையாதார் நெஞ்சென்றும் நெஞ்சல்ல கண்டாமே. (7)

*வெறியார் கருங்கூந்த லாய்ச்சியர் வைத்த
உறியார் நறுவெண்ணெய் தானுகந் துண்ட
சிறியானைச் செங்க ணெடியானைச் சிந்தித்
தறியாதார் என்றும் அறியாதார் கண்டாமே. (8)

தேனொடு வண்டாரும் திருமா லிருஞ்சோலை
தானிடமாக் கொண்டான் தடமலர்க் கண்ணிக்காய்
ஆன்விடையே ழன்றடர்த்தாற் காளானா ரல்லாதார்
மானிடவ ரல்லரென் றென்மனத்தே வைத்தேனே. (9)

மெய்ந்நின்ற பாவ மகலத் திருமாலைக்
கைந்நின்ற வாழியான் சூழும் கழல்சூடிக்
கைந்நின்ற வேல்கைக் கலிய னொருமாலை
ஐயொன்று மைந்தும் இவைபாடி ஆடுமினே. (10)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்

## இயற்பா—முதற்றிருவந்தாதி

தோள் அவனை யல்லால் தொழாஎன் செவியிரண்டும்
கேள்வன் இன்மொழியே கேட்டிருக்கும்—நாள்நாளும்
கோனாகனையான் குரைகழலே கூறுவதே
நாணாமை நள்ளேன் நயம். (63)

அன்பொழி யானை அணுகென்னும் நாஅவன்றன்
பண்பாழித் தோள்பரவி யேத்தென்னும்—முன்பூழி
காணானைக் காணென்னும் கண்செவி கேளென்னும்
பூணாரம் பூண்டான் புகழ். (72)

நாவாயி லுண்டே நமோநாரா ணாவென்று
ஓவா துரைக்கு முரையுண்டே—மூவாத
மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே என்னொருவர்
தீக்கதிக்கட் செல்லும் திறம்?

பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம் (95)

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

**[திருவாய்மொழி 3-8]**

வாசகமே ஏத்த அருள்செய்யும் வானவர்தம்
நாயகனே நாளிளந் திங்களைக் கோள்விடுத்து
வேயகம் பால்வெண்ணெய் தொடுவுண்ட ஆனாயர்
தாயவனே என்று தடவுமென் கைகளே. (3)

கைகளால் ஆரத் தொழுது தொழுதுன்னை
வைகலும் மாத்திரைப் போதுமோர் வீடின்றி
பைகொள் பாம்பேறி உறைபர னேஉன்னை
மெய்கொள்ளக் காண விரும்புமென் கண்களே. (4)

கண்களால் காண வருங்கொலன் றாசையால்
மண்கொண்டே வாமனன் ஏற மகிழ்ந்துசெல்
பண்கொண்ட புள்ளின் சிறகொலி பாவித்து
திண்கொள்ள ஓர்க்கும் கிடந்தென் செவிகளே. (5)

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

திருச்சிற்றம்பலம்

**திருநாவுக்கரசர் தேவாரம்**

திருஅங்கமாலை

தலையே நீ வணங்காய்—தலைமாலை தலைக்கணிந்து
தலையாலே பலிதேரும் தலைவனைத் தலையே நீ வணங்காய்.

கண்காள்காண்மின்களோ—கடல்நஞ்சுண்ட கண்டன் தன்னை
எண்டோள் வீசிநின் றாடும் பிரான்தன்னைக் கண்காள்
காண்மின்களோ.

செவிகாள் கேண்மின்களோ—சிவன் எம்மிறைசெம்பவள
எரிபோல் மேனிப்பிரான்றிறம் எப்போதும் செவிகாள்
கேண்மின்களோ.

மூக்கே நீமுரலாய்—முது காடுறை முக்கணனை
வாக்கே நோக்கிய மங்கை மணாளனை மூக்கே நீமுரலாய்.

வாயே வாழ்த்து கண்டாய்—மதயானை உரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும்பி ரான்றன்னை வாயே வாழ்த்து
கண்டாய்.

நெஞ்சே நீ நினையாய்—நிமிர் புன்சடை நின்மலனை
மஞ்சா டும்மலை மங்கைமணாளனை நெஞ்சே நீ நினையாய்.

கைகாள் கூப்பித்தொழீர்—கடிமாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக் கைகாள் கூப்பித்
தொழீர்.

ஆக்கை யாற்பயனென்—அரன்கோயில் வலம்வந்து
பூக்கை யாலட்டிப் போற்றி யென்னாதவிவ் வாக்கை
யாற்பயனென்

கால்க ளாற்பயனென்—கறைக்கண்ட னுறைகோயில்
கோலக் கோபுரக் கோகர ணஞ்சூழாக் கால்களாற்பயனெ
உற்றா ராருளரோ—உயிர்கொண்டு போம்பொழுது
குற்றா லத்துறை கூத்தனல் லால்நமக் குற்றா ராருளரோ.

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கலம் அரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலம் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே.

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே.

திருச்சிற்றம்பலம்

---

திருச்சிற்றம்பலம்

**மாணிக்கவாசகர் திருவாசகம்**

வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்து
இணங்கத்தன் சீரடியார் கூட்டமும்வைத் தெம்பெருமான்
அணங்கொ டணிதில்லை அம்பலத்தே ஆடுகின்ற
குணங்கூரப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ.

திருச்சிற்றம்பலம்

## 10. வீட்டை விட்டுக் கிளம்பும்போது

பஸ்கள், லாரிகள், கார்கள், சைகிள்கள் முதலியவற்றின் எண்ணிக்கை தினே தினே அதிகரித்துவருகின்றது. ஆகையால் அவைகளால் ஏற்படும் விபத்துக்களும் அதிகரிக்கின்றன. இதனால் வீட்டை விட்டுக் கிளம்பி வெளியே போகும் ஜனங்கள் க்ஷேமமாக வீடு திரும்பும்வரை பயமாகவே இருக்கிறது.

எனவே, வீட்டை விட்டு (1) உள்ளூரில் ஒரு காரியமாகவோ, அல்லது (2) வெளியூர் ப்ரயாணமாகவோ கிளம்பும் நாம், வழியில் எவ்வித ஆபத்திலும் அகப்பட்டுக்கொள்ளாமல் **காரிய ஸித்தியுடன்** க்ஷேமமாக வீடு திரும்பும் வகை என்ன ?

பக்கத்து வீட்டுக்கோ, கடைக்கோ, ஆஸ்பத்திரிக்கோ, பள்ளிக்கோ, ஆபீஸுக்கோ, வெளியூருக்கோ எங்குப் போவதானாலும், வீட்டுப் படியை விட்டுக் கீழே இறங்குவதற்கு முன்பு திமிடமாவது, அவரவர் பூஜை அறைக்குள் போய், பகவா

காகப் பிரார்த்தித்துப் பிறகு வீட்டை விட்டுக் கிளம்புவது அவசியம். இப்படிச் செய்வதால், நம்மை அறியாமலே, எம்பெருமான் "அக்ரத: ப்ருதஷ்டதஸ்சைவ பார்ஸ்வதஸ்ச" என்றபடி முன்னும் பின்னும் பக்கங்களிலும் நம்முடன்கூடத் தொடர்ந்து வருகிறார் ; வழி நெடுகக்காப்பாற்றுகிறார் என்பது நம் பெரியோர் நம்பிக்கை.

மாதிரி ப்ரார்த்தனை

"நாலு கவிப் பெருமாள் வந்தார் ! நம் கலியன் வந்தார் ! நாடர் வந்தார் ! அருள்மாரி வந்தார் ! கொங்குமலர்க் குழலியர் வேள் வந்தார்! மங்கை வேந்தர் வந்தார் ! பரகாலர் வந்தார்" என்று சிஷ்ய கோடிகள் விருதுகூற பல திவ்யதேசங்களில் வரவேற்கப்பட்ட, திருமங்கையாழ்வார நம்மனோர்க்கு அருளியுள்ள பெரிய திருமொழி 3—6—5-இல் ஒரு பகுதியைப் பாடுவோமே !

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

ஓ மண்ணளந்த
தாளாளா ! தண்குடந்தை நகராளா வரையெடுத்த
தோளாளா, என்றனக்கோர் துணையாளனாகாயே !"

திருமங்கையழ்வார் திருவடிகளே சரணம்

## வழியில் ஆபத்து வந்தால்

நம் இஷ்ட தெய்வத்தைப் பிரார்த்தித்துக்கொண்டு வெளியே புறப்பட்டுச் செல்லும் வழியில் ஓர் ஆபத்து—சோதனையாக—வரலாம். அந்த இடரைத் தவிர்ப்பது அல்லது அந்த ஆபத்தின் கடுமையைக் குறைப்பது எப்படி? இதற்கும் "ஸ்ரீராம நாமா" போன்ற அபயக்குரல் நம் ஹ்ருதயத்திலிருந்து உடனே கிளம்ப வேண்டும். திரௌபதியும் கஜேந்திரனும் கதறியது நமக்கு ஞாபகம் வரட்டும். "ஆபத் பாந்தவா! அனாத ரக்ஷகா!! 'ஆதி மூலமே!! 'என்று கதறிய யானைக்கு அபயம் அளித்த ப்ரபோ !! அபயம்! அபயம்!! அபயம்!!!" என்று கதறுவோம். நம் ஹ்ருதய கமலத்தில் அவன் திருவடித் தாமரையைப் பதித்துக் கதறுவோம் அவன் கண்டிப்பாகக் காப்பான்.

மாதிரி ப்ரார்த்தனை

திருவழுதி வளநாட்டிலே, திருக்குருகூரில் திருவவதாரம் செய்து பராங்குசன், மாறன், சடகோபன், வகுளாபரணன் காரிமாறன், மாறன், குருகைப்பிரான், திருக்குருகூர்நம்பி, அருள்மாறன், தென்னரங்கன், பொன்னடி, திருநாவீறுடையபிரான் என்ற பல திருநாமங்களால் தோத்திரம் செய்யப்படும் நம்மாழ்வார் நம்மனோர் கடைத்தேறுவதற்காக மங்களாசாஸனம் செய்துள்ள திருவாய்மொழி 9-2-6-ஆம் பாசுரத்தில் என்ன அற்புதமாக எம்பெருமானை அழைக்கிறார் பாருங்கள்.

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

"காய்சினப் பறவை யூர்ந்துபொன் மலையின்
மீமிசைக கார்முகில் போல,
மாசின மாலி மாலிமான் எனறங்
கவர்படக கனன்றுமுன் நின்ற.
காய்சின வேந்தே! கதிர்முடி யானே!
கலிவயல் திருப்புளிங் குடியாய்,
காய்சின ஆழி சங்குவாள் வில்தண்
டேந்தியெம் இடர்கடி வானே!"

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

---

## 11. கடிதம் மூலம் காரியஸித்தி

"என் செயலால் ஆவதொன்றில்லை, இறைவா, எல்லாம் உன தருளே" என்பதை அனுபவபூர்வமாக நன்குணர்ந்த ஆன்றோர்கள் எச்செயல் தொடங்கினும் தெய்வக் காப்புச் செய்தே தொடங்கினார். கவிச்சக்ரவர்த்தி கம்ப நம் தாம் ராமாயணம் இயற்றத் தொடங்கும்போது,

"உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்
நிலைபெறுத்தலும நீககலும நீங்கலா
அலகிலா விளையாட்டு உடையாா அவர்
தலைவர் அனனவர்ககே சரண் நாங்களே."

என்று சரணாகதி செய்கிறார். ஆகவே நாமும் அத்தகைய ஆன்றோர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றிப் பெருநன்மைகளை எய்த வேண்டும்.

நாம் எப்போதும் நாமே நேரில் சென்று உத்தேசித்த காரியங்களைச் சாதித்துக்கொள்வதில்லை. பல சமயங்களில் நம் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும கடிதம் எழுதி அதன்மூலம் பல காரியங்களை முடித்துக்கொள்கிறோம். அவ்வாறு எழுதும்போதும் ஆண்டவனை மனத்தில் தியானித்து அவன தாள் வணங்கி ஆரம்பத்திலும் முடிவிலும் "ஸ்ரீராம ஜயம், சிவமயம், ஆண்டவன் துணை" போன்ற துதிகளை எழுதுதல் நன்மை பயக்கும். நாம உத்தேசித்த காரியம் நிறைவேறவும் ஆண்டவன் அருள் புரிந்து பாலிப்பான். ஆகவே கடிதம் மூலம் காரிய ஸித்தி பெறத் தெய்வத்தை வாழ்த்தியும் சரணாகதி செய்தும் வேண்டியவாறு கடிதம் எழுதுக. அத்தகைய துதிச்சொற்றொடர்கள் சிலவற்றைக் கீழே மாதிரிக்காகக் கொடுத்துள்ளோம். அன்பர்கள் இவை போன்ற பலவற்றைத் தாமே தேர்ந்துகொள்ளலாம்.

**ஸ்ரீவிநாயகர் :**
1. உ (பிள்ளையார் சுழி)
2. சித்தி விநாயகன் சேவடி போற்றி
3. யானை முகத்தவனே போற்றி

4. ஆகுவாகனனே போற்றி
5. ஐங்கரனே போற்றி
6. இடையூறு அகற்றும் இறைவா சரணம்
7. தும்பிக்கையா தொழுதேனை காப்பாய்

**ஸ்ரீ சிவபெருமான் :**
1. திருச்சிற்றம்பலம்
2. சிவாய நம
3. சிவமயம்
4. தென்னாடுடைய சிவனே போற்றி
5. அண்ணாமலைக்கு அரசே போற்றி
6. ஓம் நமசிவாய
7. சிவனவன் தாள்என் சிந்தை வைத்தேனே

**ஸ்ரீ திருமுருகன் :**
1. வேலும் மயிலும் துணை
2. முருகன் துணை
3. செந்தூரான் சேவடி போற்றி
4. குகனே குருவே துணை
5. நமோ குமாராய
6. ஓம் சரவணபவ
7. செந்திலாண்டவன் துணை

**ஸ்ரீ ராமன் :**
1. ஸ்ரீராமஜயம்
2. ஸ்ரீராமாபிராமா சரணம்
3. ரவிகுலத் தோன்றல் தோள்வலி துணையே
4. கடற்கணை கட்டிய கருணாகரன் காப்பு
5. வீடணற் கருளிய விமலா சரணம்
6. சீதை மணாளா போற்றி
7. கோசலை பெற்ற குமரா போற்றி
8. தசரதன் பெற்ற தநயா சரணம்
9. எந்தையே ராகவா சரணம்
10. கோதண்டம் கைக்கொண்ட கோமான் சரணம்
11. தாயினும் இனியான் சரணமலர் போற்றி
12. கோசிகன் வேள்வி காத்தாய் போற்றி
13. பாதுகையளித்த பரமா சரணம்
14. நீதி கைக்கொண்ட நின்மலா சரணம்

**ஸ்ரீ கிருஷ்ணன் :**
1. கண்ணன் கழலடி சரணம்
2. வெண்ணெய் உண்ட வாயா போற்றி
3. மண்ணை உண்ட மாயா வாழ்க
4. தாயைக் குடல் விளக்கம் செய்தவா சரணம்
5. கருமுகில் வண்ணனைக் கருதென் மனனே
6. தாமரைக் கண்ணன் திருவடி போற்றி
7. தூது நடந்த சேவடி வாழ்க

முடிவுரை

# "ஸகலமும் நீயே! ஸகல காரியங்களும் ஸித்திக்க நீயே அருள்புரிதல் வேண்டும்"

நம் மூதாதையர் "அவனன்றி ஓரணுவும் அசையாது!" என்பதில் பரிபூரண நம்பிக்கை வைத்து, ஸகலமும் பரம்பொருளே என்று எம்பெருமானையே போற்றி வாழ்ந்து வந்தனர். நாமும் அப்படியே அவனே சரணே கதி, என்று அடிபணிந்து துதித்து வாழ்வோமானால், ஸகல காரியங்களும் சித்திக்கும்.

மாதிரி ப்ரார்த்தனை

தென் ஆற்காடு ஜில்லா, கடலூர் டவுனுக்கு 3 மைலில் உள்ள திருவஹீந்த்ரபுரம் என்ற திவ்ய தேசத்தில் "பக்தர்களை ஸத்யமாக ரக்ஷிக்கும்" தேவநாதன் அதி அழகாக ஸேவை ஸாதிக்கிறார். அவர் "வடிவழகை மறவாதார் பிறவாதாரே!" இந்த எம்பெருமானைப்பற்றி, ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரான ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகன் தமது மும்மணிக் கோவை, ஏழாம் பாசுரத்தில், உள்ளம் உருகும் வகையில் பிரார்த்திக்கிறார் :—

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

"பயின்மதி நீயே பயின்மதி தருதலின்
வெளியு நீயே வெளியுற நிற்றலின்
தாயு நீயே சாயைதந் துகத்தலின்
தந்தையு நீயே முந்துநின் றளித்தலின்
உறவு நீயே துறவா தொழிதலின்
உற்றது நீயே சிற்றின்ப மின்மையின்
ஆறு நீயே யாறுக் கருள்தலின்
அறமு நீயே மறமிலை மாய்த்தலின்
துணைவனு நீயே யிணையிலை யாதலின்
துய்யனு நீயே செய்யா ளுறைதலின்
காரண நீயே நாரண னாதலின்
கற்பக நீயே நற்பதந் தருதலின்
இறைவனு நீயே குறைவொன் றிலாமையின்
இன்பமு நீயே துன்பந் துடைத்தலின்
யானு நீயே யென்னு ளுறைதலின்
என்னது நீயே யுனதன்றி யின்மையின்
நல்லாய் நீயே பொல்லாங் கிலாமையின்
வல்லாய் நீயே வையமுன் படைத்தலின்
எங்ஙன மாகு மெய்ம்மையின் இயம்ப
அங்ஙனே யொக்க அருளாய் நீயே!"

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

# ஸ்ரீமத் ராமாயண நாட்குறிப்பு (டயரி)
## (Srimad Ramayana Diary)

காலையில் எழுந்ததும் தன் கைகளையோ, கண்ணாடியையோ, பகவான் பாத கமலங்களையோ முதலில் பார்ப்பதை வழக்கமாக ஒவ்வொருவரும் வைத்துக்கொள்ள வேண்டுமென்று பெரியோர் கூறுவர். "தன் கையே தனக்கு உதவி" என்பதை ஞாபகப்படுத்துவதற்காகக் கைகளையும், "தன முயற்சியால் முன்னேறி உயர்நிலையை அடையவேண்டும்" என்பதை வற்புறுத்துவதற்காகக் கண்ணாடியில் தன் உருவத்தையும், "பற்றற்று நல்ல காரியங்கள் யாவற்றையும் ஊக்கத்துடன் செய்து பகவான் பாத கமலங்களுக்கே அர்ப்பணம் செய்ய வேண்டும்" என்பதை நினைவுகூர ஆண்டவன் அடிகளையும் முதலில் பார்க்கவேண்டும் என்ற நோக்கத்துடன் இப்புத்திமதியைப் பெரியோர் கூறுகின்றனர் போலும்.

ஸ்ரீராமபிரானும் சித்திரகூடத்தில் தன்னை வந்து பணிந்த பரதனை நோக்கி, 'காலையில் எழுந்ததும் கண்ணாடி முதலிய மங்களப் பொருள்களை முதலில் பார்ப்பதை வழக்கமாக வைத்துக்கொண்டிருக்கிறாயா?' என்று கேட்கிறார். ஆகவே, மங்களகரமான பொருட்களை நாட்காலையில் முதலில் காண்பது எவ்வளவு முக்கியம் என்பது தெரிகிறது. அதுபோலவே, காலையில் எழுந்ததும் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு பகவந்நாமாவை வாயாரச் சொல்லுவதும் மனமொருமித்து எழுதுவதும் மிகச் சிறந்தவை. அதனால் ஆயுள், ஆரோக்கியம், ஐசுவர்யம, கல்வி முதலிய யாவும் பெருகும். நாம் தொடங்கும் ஸகல காரியங்களும் ஸித்திக்கும்.

நாள்தோறும் அதிகாலையில் எழுந்து காலைக்கடன்கள் யாவற்றையும் முடித்துக்கொண்டு முன் நாளில் தான் செய்த நல்ல காரியங்கள் யாவை; தீய காரியங்கள் யாவை எனச் சிந்தித்தல் வேண்டும். அவைகளை நாட்குறிப்பில் எழுதிவரவும் வேண்டும். அவ்வாறு எழுதுவதால் நல்ல பலனுண்டு. பிறகு அன்றைய தினத்தில் செய்யவேண்டுவனவற்றைச் சிந்திக்கவேண்டும். இவ்வாறெல்லாம் சிந்திப்பதற்குமுன் பரமன் பாதங்களைக் கருத்தில் இருத்தி அவன் புகழை ஓரிரு வரிகளில் இன்றைய நாட்குறிப்பில் முதலில் எழுதி, பிறகு, முன்தினச் செய்திகளை எழுதியபின் இன்றைய காரியங்களைத் திட்டமிட்டால் அக்காரியங்கள் இடையூறின்றி இனிது முடியும் என்பதில் எத்துணையும் ஐயமில்லை.

நம் நாட்டு இதிகாச புராணங்கள் யாவும் நம் முன்னோர்கள் நமக்காகப் பரம கருணையுடன் தேடித் தந்த அழியாச்செல்வங்கள். அத்தகைய இதிகாச புராணங்களிலிருந்து அருமையான கருத்துக்களைப் பொறுக்கி நாடோறும் நம் நாட்குறிப்பில் எழுதிவருவதால்

புராணங்களைப் படித்த பலனும், தெய்வத் திருவரும் பெருகும். **மேலும் சிந்தித்த செயல் ஸித்தி பெறும்.** மனம் தெளிவடைந்து சாந்தி உண்டாகும்.

ஆகவே, மாதிரிக்காக ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்திலிருந்து சில பொறுக்குமணிகள் மொழிபெயர்க்கப்பட்டு இங்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

அதுபோலக் கம்ப ராமாயணத்திலிருந்தும், துளசி ராமாயணத்திலிருந்தும் அன்பர்கள் தேர்ந்தெடுத்து எழுதி வரலாம். அதன் பலன் மிக மிக அற்புதமானது.

தவிர, இம்மாதிரி புனிதமான, பொன்னை, தமிழ் மணமும், தெய்வமணமும் கமழும் வாக்கியங்களை, நாலாயிரதிவ்யப்ரபந்தம், தேவாரம், திருவாசகம், அருட்பா முதலிய மாபெரும் நூல்களிலிருந்து, ஒவ்வொரு நாளும், தம்தம் **டயரிகளில்** முதலாவதாக எழுதும் வழக்கத்தைப் பழக்கஞ் செய்யும் பக்தர்கள் பகவான் துணையைப் பெரிதும் பெற்று, தாம் தொடங்கும் ஸகல காரியங்களிலும் பரம பாக்யங்கள் பெறுவர்.

|| ஸ்ரீராம : ஶரணம் மம ||

| **மாதமும் தேதியும்** | **ராமாயண நாட்குறிப்பு** |
|---|---|
| Jan. 1. | புனிதமானதும் பாவத்தை அழிக்கக்கூடியதும் புண்யம் நிறைந்ததும் வேதங்கட்கு ஒப்பானதும் ஆகிய ஸ்ரீ ராமசரிதத்தைப் படிப்பவன் ஸகல பாவங்களினின்றும் விடுபடுகிறான். —பால. 1 - 98. |
| Jan. 2. | ராமர் ஸகல உயிர்களையும் ரக்ஷிக்கிறார்; தர்மத்தை சிரத்தையுடன் ரக்ஷிக்கிறார் —பால. 1 - 13. |
| Jan. 3. | தகப்பனே நமக்கு பிரபு; அவரே நமக்கு உயர்ந்த தெய்வம். —பால. 32 - 21. |
| Jan. 4. | ப்ரஹ்ம தேஜஸின் பலமே மிகச் சிறந்தது. —பால. 56 – 23 |

Jan. 5. பொறுமையே தானம் பொறுமையே ஸத்யம்; பொறுமையே யக்ஞம். —பால. 33 - 8.

Jan. 6. பொறுமையே கீர்த்தி; பொறுமையே தர்மம்; பொறுமையிலேயே உலகம் நிலைநிற்கிறது. —பால. 33 - 9.

Jan. 7. காமத்தாலாவது கோபத்தாலாவது எதிலும் அலட்சியத் தன்மையைக் காட்டக்கூடாது. —பால. 13 - 15.

Jan. 8. ஸகல லோகங்களிலும் ஸ்ரீ ராமன் ஸத்புருஷன்; ஸத்யத்தையும் தர்மத்தையும் மேற்கொண்டவன். —அயோ. 2 - 29.

Jan. 9. தர்மமும் செல்வமும் ஸ்ரீ ராமனிடமிருந்தே வெளியாகின்றன. —அயோ. 2 - 29.

Jan. 10. தர்மத்தில் நிலையாக நிற்கும் பெரியோர்களுக்கு மனம் ஒரு நிலையாக விளங்கும். —அயோ. 4 - 27.

Jan. 11. நெருங்கிப் பழகுவதால் தாவரங்களிடமும் நட்பு உண்டாகிறது. —அயோ. 8 - 28.

Jan. 12. ஸத்யம் என்ற ஒரு சொல்லே ப்ரஹ்மம்; ஸத்தியத்தில் தர்மம் நிலைநாட்டப்படுகின்றது. —அயோ. 14 - 7.

Jan. 13. ஸ்ரீ ராமர் முன்னுக்குப்பின் முரணாகப் பேசமாட்டார். —அயோ. 18 - 30.

Jan. 14. தகப்பன் ஆணைப்படி செய்பவன் எவனும் கெட்டுவிடமாட்டான். —அயோ. 21 - 37.

Jan. 15. தர்மமே உலகில் சிறந்தது; தர்மத்தில் ஸத்யம் நிற்கிறது. —அயோ. 21 - 41.

Jan. 16. பெண்ணுக்குப் பதியே தெய்வம்; பிரபு. —அயோ. 24 - 21.

Jan. 17. பதிக்குப் பக்தியுடன் பணிவிடைகள் செய்யும் பெண் உத்தமமான சொர்க்கத்தை அடைகிறாள். —அயோ. 24 - 26.

Jan. 18. பர்த்தாவின் பாக்கியம் முழுவதையும் பத்தினி ஒருத்திதான் அடைகிறாள். —அயோ. 27 - 5.

Jan. 19. எந்நிலையிலும் பெண்களுக்குக் கணவன் காலடி நிழலே சிறந்தது. —அயோ. 27 - 9.

Jan. 20. இல்லறத்தை மேற்கொண்டவனுக்கு ஆத்மா பகைவியோ. —அயோ. 37 - 24.

Jan. 21. ஸ்ரீ ராமர் உள்ள இடத்தில் பயம் இல்லை; அங்கு அவமானமும் இல்லை. —அயோ. 48 - 15.

Jan. 22. தக்க காலத்தில் தாமதமில்லாமல் தானம் செய்ய வேண்டும். —அயோ. 100 - 32.

Jan. 23. லோக தர்மத்தைப் பின்பற்றியவன் சுகமடைவான். —அயோ. 100 - 47.

Jan. 24. வரவு அதிகமாகவும் செலவு குறைவாகவும் இருக்க வேண்டும். —அயோ. 100 - 54.

Jan. 25. இனிய பண்டங்களைத் தனியே உண்ணுதே. —அயோ. 100 - 75.

Jan. 26. வியாதியை உண்டாக்காமல் ஜீரணமாகக்கூடிய உணவையே உண்ணவேண்டும். —ஆரண். 50 - 17.

Jan. 27. ஸாதுக்களும் தர்மசீலர்களும் எல்லாவிடத்திலும் எல்லாப் பிராணிகளிலும் ர்கள். —ஆரண். 68 - 25.

Jan. 28. தர்மத்தாலேயே பொருளும் சுகமும் உண்டாகின்றன. —ஆரண். 9 - 30.

Jan. 29. தர்மத்தால் யாவும் கிடைக்கும்; இவ்வுலகில் தர்மமே ஸாரம். —ஆரண். 9 - 30.

Jan. 30. எப்பொழுதும் களங்கமற்ற உள்ளத்துடன் தர்மத்தைச் செய். —ஆரண். 9 - 32.

Jan. 31. தன் மனைவியிடம் மாத்திரமே பற்றுள்ளவனுக இரு. —ஆரண். 38 - 31.

Feb. 1. துன்புற்றவர்களைக் காப்பதே வில்லுக்குக் காரியம். —ஆரண். 9 - 26.

Feb.28/29. உற்சாகம் பலமுள்ளது; உற்சாகத்தைக் காட்டிலும் பலமானது மற்றென்றில்லை. —கிஷ். 1 - 140.

Mar. 1. தர்மம் மிகவும் நுண்ணியது. —கிஷ். 18 - 15.

Mar. 31. உற்சாகமும் மனுேவலிமையும் கொண்டவனுக்கு முடியாததென்பதொன்றில்லை. —கிஷ். 1 - 141.

Apr. 1. சுயபுத்தியால் யோசித்துத் தைரியத்துடன் செயல் புரிபவன் கெடுவதில்லை. —கிஷ். 7 - 9.

Apr. 30. இன்பத்திலும் துன்பத்திலும் நண்பனே கதி. —கிஷ். 8 - 40.

May 1 நண்பனைச் சம்பாதிப்பது எளிது; நட்பைக் காப்பது மிக அரிது. —கிஷ். 32 - 7.

May 31 துக்கத்தில் மனத்தைப் பறிகொடுக்காதே; தைரியமாக இரு; சுகம் வரும். —கிஷ்.64 - 11.

June 1. எழுத்து வாஸனேயே அற்ற பாமரனுயினும் வீட்டிற்கு வந்த விருந்தாளியை மிகவும் மரியாதையுடனும் அன்புடனும் போற்றவேண்டும். —சுந்தர. 1 - 129.

June 30. விருப்பு வெறுப்பின்றித் தம்மைக் கட்டுப்படுத்தியவர்களே மஹான்கள். —சுந்தர. 26 - 50.

July 1. அன்பு செலுத்துவதே உயர்நத தருமம்.-சுந்தர.38 - 41.

July 31. கோபங் கொண்டவன், 'சொல்லத் தகுந்தது எது? சொல்லத் தகாதது எது?' என்பதை அறியான். —சுந்தர. 55 - 5.

Aug. 1. ஸர்ப்பம், நைந்துபோன தன் மேல் தோலேப் பொறுமையுடன் நீக்குவதுபோல் கோபத்தைப் பொறுமையால் நீக்குபவனே புருஷன். —சுந்தர. 55 - 6.

Aug. 31. காலத்தில் சோகம கரைந்துவிடும். —யுத்த. 5 - 4.

Sep. 1. நன்கு ஆராய்ந்து முறையாகச் செய்யும் செயல்கள் நன்கு நிறைவேறுவன. —யுத்த. 9 - 9

Sep. 30. தன்பலம் முழுவதையும் மற்ற உயிர்களேக் காக்கவே பயன்படுத்த வேண்டும். —யுத்த. 9 - 14.

Oct. 1. ராமனே தர்மம்; தர்மமே ராமன். —யுத்த. 28 - 20.

Oct. 31. நன்மை தீமைகளே ஆராய்ந்தபிறகே செயல் புரிய வேண்டும். —யுத்த. 17 - 41.

Nov. 1 குணத்தைக்கொண்டு குற்றத்தைத் தள்ளுக. —யுத்த. 17 - 41.

Nov. 30 வாய்ப்பளிக்காமல் திறமையை அறியமுடியாது. —யுத்த. 17 - 54.

Dec. 1 ஸ்ரீ வால்மீகி பகவான் அருளிய புனிதமான இச்சரிதத்தை முழுமனத்துடன் பக்தி செலுத்தி எழுதுபவர் நிலமிசை நீடு வாழ்வார். —யுத்த. 131 - 12.

Dec. 31. இந்நிலவுலகில் மலேகள் உள்ளளவும், நதிகள் உள்ளளவும் ஸ்ரீமத் ராமாயணம் பரவி நின்று பக்தரைக் காக்கும் ரக்ஷையாக விளங்கும். —பால. 2 - 36.



# ஸ்ரீஸூக்தம்

## முன்னுரை

மாந்தர் பொன், பொருள், புகழ், கல்வி முதலிய யாவற்றையும் விரும்புகின்றனர். அவை மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதன. இவைகளை அடைவதற்கு மனிதன் பல வழிகளில் முயற்சி செய்கிறான். ஆனால் மனிதன் முயற்சிகள் யாவும் முழுமையுடையன (Perfect) அல்ல. ஆகையால் பல தோல்விகளைக் காண்கிறான். எனவே, தெய்வத் திருவருளால்தான் இவைகளை அடையமுடியும் என்பது தெளிவு. அத்திருவருளை அடைய ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் ஆழ்வார்கள் நாயன்மார் முதலியவர்களுடைய பாசுரப் பாராயணமும் பெரிதும் உதவுகின்றன. அவையும் தவிர லோகமாதாவான ஸ்ரீ மஹா லக்ஷ்மியையே நேரில் உபாசித்தும் அத்திருவருளைப் பெறலாம். அத்தகைய ஒரு சிறந்த உபாசனை முறையே ஸ்ரீஸூக்தம் ஆகும். இது **ருக் வேதத்தில் 'கிலம்'** என்ற பகுதியில் உள்ளது. வேதங்களே ஹிந்து மதத்திற்கு அடிப்படை; **ஸ்ரீ விவேகானந்தர்** வேதங்களை அறிவுக் களஞ்சியம் என்று கூறுகிறார். இதனால் அந்த வேதத்தின் ஒரு பாகமான ஸ்ரீஸூக்தத்தின் பெருமை சொல்லாமலே விளங்கும். ஆகையால் இந்த ருக்குகளை உச்சரித்து ஹோமம் செய்பவர் இம்மையில் பெருஞ் செல்வமும் புகழும் கல்வியும் பெற்றுப் பிறகு பிறவித்தளை நீங்கி இன்பமயமான வைகுண்ட விண்ணகரத்தில் வீற்றிருப்பர். தினந்தோறும் பாராயணம் செய்துவருவதால் ஸகல சௌபாக்யங்களும் பெற்று வாழ்வர்.

மேற்கூறிய ஸ்ரீஸூக்தத்தில் உள்ள ஒவ்வொரு ருக்கும் ஒவ்வொரு பலனைக் கொடுக்கும்.

அவை: —

1. தேஜஸ், கீர்த்தி முதலியன
2. பசு, சேவகர் முதலியவை
3. பகையழிவு
4. கல்வி
5. ஐசுவரிய விருத்தி
6. நிலையான செல்வம்
7. குபேரன் ஆசியும் சிந்தாமணியின் ஆசியும்
8. தரித்திரம் நீங்க
9. தான்யவிருத்தி
10. வாக்குச்சாதுர்ய விருத்தி
11. வம்சவிருத்தி
12. உயர்பதவி
13. வாகனாதிகள்
14. ராஜ்யபோகம்
15. கல்வி முதலிய செல்வங்கள்

[**வெகு முக்கியம்:** இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்ய ஆரம்பிக்குமுன் ஓர் ஆசார்யனை ஆச்ரயித்து அவரிடம் உபதேசம் பெற்றுக் கற்றுக்கொண்டு பிறகு பாராயணம் செய்தல்

நலம். மேலும், ஸ்ரீஸூக்த பாராயணத்தைக் காலை வேளைகளில் தான் செய்யவேண்டும் (விடியற்காலையில் செய்தால் இன்னும் சிறந்தது) என்றும், சூர்யாஸ்தமனத்துக்குப் பிறகு செய்யக்கூடாது என்றும் சில பெரியோர்கள் கருதுகின்றனர்.]

1. ஹிரண்யவர்ணாம் ஹரிணீம் ஸுவர்ண ரஜதஸ்ரஜாம் ।
சந்த்ராம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோ ம ஆவஹ ॥

ஹே ஸ்ரீயஃபதியே ! தங்க நிறமுள்ளவளும், பாபங்களைப் போக்குபவளும், பொன்னாலும் வெள்ளியாலும் இயன்ற மாலைகளை அணிந்திருப்பவளும் நிலவைப் போன்ற குளிர்ந்த ஒளியுடைய வளும், பொன்மயமானவளும் ஆகிய ஸ்ரீ லக்ஷ்மீ தேவியை எனக்குப் பிரஸன்னமாகும்படி அருள்புரிய வேண்டும்.

2. தாம் ம ஆவஹ ஜாத வேதோ லக்ஷ்மீம் அநபகாமிநீம் ।
யஸ்யாம் ஹிரண்யம் விந்தேயம் காமஸ்வம்
புருஷாந் அஹம் ॥

ஹே லோகநாதா ! ஸ்ரீதேவியின் வரவால் பொன் முதலிய செல்வங்களும், யானை, குதிரை, பசு முதலிய கால்நடைச் செல்வங் களும், வேலைக்காரர் முதலிய சுகச்செல்வங்களும் உண்டாகின்றன. அத்தகைய ஸ்ரீ தேவி என்னைவிட்டு நீங்காமல் என்றும் நிலைத்திருக் கும்படி நீ அருளவேண்டும்.

3. அஸ்வ பூர்வாம் ரதமத்யாம் ஹஸ்திநாத ப்ரபோதிநீம் ।
ஸ்ரியம் தேவீம் உபஹ்வயே ஸ்ரீர்மாதேவீ ஜுஷதாம் ॥

ஸ்ரீ தேவியினுடைய கோயில் முதல் பிராகாரத்தில் குதிரைகள் இருக்கின்றன ; இரண்டாம் பிராகாரத்தில் தேர்கள் இருக் கின்றன ; மூன்றும் பிராகாரத்தில் யானைகள் இருக்கின்றன ; யானை களின் இனிய கம்பீரமான த்வனி அம்பாளைத் தினமும் விடியற் காலையில் எழுப்புகிறது. அந்த ஸ்ரீதேவியை, விஷ்ணு பத்நியை என்னை ஆசீர்வதிக்குமாறு வேண்டுகிறேன்.

4. காம் ஸோஸ்மிதாம் ஹிரண்ய ப்ராகாராம்
ஆர்த்ராம் ஜ்வலந்தீம் த்ருப்தாம் தர்ப்பயந்தீம் ।
பத்மே ஸ்திதாம் பத்ம வர்ணாம்
த்வாம் இஹோபஹ்வயே ஸ்ரியம் ॥

ஸ்ரீதேவி ஒப்பற்ற தேஜஸ் உடையவள் ; அவளது ஒளிவீசும் புன்னகையும் ஒப்பற்றது. அவள் திருக்கோயிலின் மதிள்கள் பொன்மயமானவை. அவள் திருப்பாற் கடலினின்றும் வெளிப் பட்டவள் ; அவ்வாறு வெளிப்படும்போது தெய்வக் களிறுகள் அவளை அமிர்தகலசங்களால் அபிஷேகம் செய்தன ; அதனால் ஏற்பட்ட அமிர்ததாரையினால் அவளுடல் இன்னும் ஈரமாகவே இருக்கின்றது. அவள் திருப்தியடைந்தவள் ; பிறரைத் திருப்தி செய்பவள் ; செந்தாமரையில் வீற்றிருப்பவள் ; செந்தாமரை

நிறத்தையுடையவள் ; இத்தகு பெருமை மிக்க லோகமாதாவே ! நீ எப்போதும் என் அருகில் இருந்து என்னை அனுக்ரஹிக்குமாறு வேண்டுகிறேன்.

5. சந்த்ராம் ப்ரபாஸாம் யஶஸா ஜ்வலந்தீம்
ஶ்ரியம் லோகே தேவஜுஷ்டாம் உதாராம் |
தாம் பத்மநேமீம் சரணமஹம் ப்ரபத்யே
அலக்ஷ்மீர்மே நஶ்யதாம் த்வாம்வ்ருணே ||

அடியார்களின் ஆசைகள் யாவற்றையும் பூர்ணமாக அளித்து அநுக்ரஹிப்பவள் ஸ்ரீதேவி ; ஸ்ரீமந் நாராயணன் பூலோகத்தில் அவதரித்தால் தானும் அவ்வாறே அவதரித்து அடியார்களை ரக்ஷிக்கிறாள். ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஈ என்ற மூல சப்தத்தில் குறிக்கப்படுகிறாள் ; அத்தகைய தாய் தாமரையின்மேல் அமர்ந்திருக்கிறாள் ; அவளே எனக்குக் கதி ; அவளையே அடைக்கலமாக அடைகிறேன். ஹே தேவி, என்னுடைய தரித்திரத்தை அழி ; அறியாமையைப் போக்கு ; குற்றங்களை நீக்கு.

[ஸ்ரீஸூக்தத்தின் ஸாரத்தினும் ஸாரமாக விளங்குவது இந்த ஶ்லோகமே. ஸ்ரீ மஹாலக்ஷ்மியிடம் சரணமடைவதை இதுவே விளக்குகிறது. எல்லாப் பயன்களையும் அளிக்கவல்லது.]

6. ஆதித்ய வர்ணே தபஸோதி ஜாதோ
வனஸ்பதிஃ தவ வ்ருக்ஷோத பில்வஃ |
தஸ்ய பலாநி தபஸாநுதந்து
மாயாந்தராயாஶ்ச பாஹ்யா அலக்ஷ்மீஃ ||

சூரியகாந்திக்கு நிகரான தேஜோமயமானவளே ! நினதனுக்ரஹத்தாலேயே விருக்ஷராஜன் எனத்தக்க வில்வமரம் உண்டாயிற்று ; அம்மரத்தின் பழங்கள் எனது அஞ்ஞான இருளை அகற்றட்டும் ; ஐம்புலன்களாலும் உண்டான பாவங்களை நீக்கட்டும்.

7. உபைது மாம் தேவஸகஃ கீர்த்திஶ்ச மணிநா ஸஹ |
ப்ராதுர்பூதோஸ்மி ராஷ்ட்ரேஸ்மிந் கீர்த்திம்ருத்திம்
ததாது மே ||

ஹே தேவி ! தேவ ஸகாயனான மாதவன் எனக்கு அருள் புரியட்டும். கல்வியாலும் செல்வத்தாலும் எனக்குப் புகழ் உண்டாகட்டும். இவ்வுலகில் பிறந்துவிட்டேன் ; உன்னையே வேண்டுகிறேன். உன் அனுக்ரஹத்தால் செல்வக் கோமான், குபேரன், என் நண்பனாகட்டும் ; புகழ்க்கன்னி என்னைச் சேரட்டும் ; சிந்தித்ததெல்லாம் தரும் சிந்தாமணி என்னதாகட்டும்.

8 க்ஷுத் பிபாஸா மலாம் ஜ்யேஷ்டாம் அலக்ஷ்மீம்
நாஶயாம்யஹம் |
அபூதிம் அஸம்ருத்திம்ச
ஸர்வாம் நிர்ணுத மே க்ருஹாத் ||

ஹே தேவியே! பசி, தாகம் முதலிய பலவற்றாலும் மக்களை வருத்தும் உன் அக்காளை உன் அனுக்ரஹத்தால் வெளியே விரட்டு கிறேன். இனி, உழைப்பின் பயன், முன்னேற்றம் ஆகியவற்றைத் தடுக்கும் ஏழ்மை, பற்றாக்குறை முதலிய தடைகளை என் இருப் பிடத்தினின்றும் நீயே விரட்டவேண்டும்.

9. கந்த த்வாராம் துராதர்ஷாம் நித்யபுஷ்டாம் கரீஷிணீம் ।
ஈஸ்வரீம் ஸர்வபூதாநாம் த்வாமிஹோபஹ்வயே ஸ்ரியம் ॥

ஸுகந்த ஸ்வரூபமே ஸ்ரீதேவி; அவள் ஒருவராலும் அவமதிக்க முடியாதவள்; அஞ்ஞானிகளால் அறியப்படாதவள்; அவள் அருளாலேயே எல்லா உயிர்களும் பெரும் பாக்கியங்களைப் பெறு கின்றன. அந்த ஸ்ரீதேவியை எப்போதும் என் கிருஹத்தில் வாசம் செய்யும்படி நமஸ்கரித்து வேண்டுகிறேன்.

10. மநஸ:காமமாகூதிம் வாச: ஸத்யம் அஶீமஹி ।
பஶூநாம் ரூபமந்நஸ்ய மயி ஸ்ரீ: ஶ்ரயதாம் யஶ: ॥

ஆகவே, நாம் திண்ணமுடன் பண்ணின துதியால் எண்ணின யாவும்—பசுவும், தானியமும், புகழும்—பெற்றவராவோம்; ஸ்ரீதேவி என்னிடம் எப்போதும் பிரியாது அருள்புரியட்டும்.

11. கர்தமேந ப்ரஜாபூதா மயி ஸம்பவ கர்தம ।
ஶ்ரியம் வாஸய மே குலே மாதரம் பத்ம மாலிநீம் ॥

ஹே கர்தம பிரஜாபதியே! ஸ்ரீதேவி தங்களால் வளர்க்கப் பட்டவள்; தங்களுக்கு அவளுடைய கடாக்ஷம் எப்போதும் உண்டு; ஆகவே, தாங்கள் எனக்கு அனுக்ரஹம் செய்யவேண்டும்; எங்கள் குலத்தில் தலைமுறை தலைமுறையாக என்றும் ஸ்ரீதேவியின் பரிபூர்ண அநுக்ரஹம் நிலைத்திருக்கும்படி ஸ்ரீதேவியிடம் தாங்கள் சிபாரிசு செய்யவேண்டும்.

12. ஆப: ஸ்ருஜந்து ஸ்நிக்தாநி சிக்லீத வஸ மே க்ருஹே ।
நிச தேவீம் மாதரம் ஶ்ரியம் வாஸய மே குலே ॥

ஹே சிக்லீதரே! ஜலதேவதைகள் என் கிருஹத்தை நெய், தயிர், தேன் போன்ற இன்சுவைப் பொருள்களால் நிரப்பட்டும்; தாங்கள் என் கிருஹத்தில் எப்போதும் வசிக்குமாறு, என் வம்சத் தில் எப்போதும் நிலைத்து ஸ்ரீமகாலக்ஷ்மி வாசம் செய்யச் சிபாரிசு செய்யவேண்டும்.

13. ஆர்த்ராம் புஷ்கரிணீம் புஷ்டிம் ஸுவர்ணாம் ஹேமமா லிநீம் ।
ஸூர்யாம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம்ஜாதவேதோ மஆவஹ॥

ஸ்ரீமத் நாராயண மூர்த்தியே! ஸ்ரீதேவி நெஞ்சகத்தே ஈர முள்ளவள்; அன்பர் மனத்தாமரையில் வீற்றிருப்பவள்; புஷ்டிக்கு

(நிறைவுக்கு) அதிதேவதை; யஜுஸ்வரூபிணி; பொன் மாலை அணிந்தவள்; எல்லாரையும் மகிழ்விப்பவள். அவள் என் கிருஹத்தையே நிலையான வாஸஸ்தலமாகக் கொள்ளும்படி தாங்கள் அனுக்ரஹம் செய்யவேண்டும்.

14. ஆர்த்ராம் ய: கரிணீம் யஷ்டிம் பிங்களாம் பத்மமாலினீம்
சந்த்ராம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோ மஆவஹ ||

ஸ்ரீமந் நாராயணமூர்த்தியே! ஸ்ரீதேவி அமுதூறும் திருமேனி உடையாள்; செங்கோலேந்தும் கரமுடையாள்; ஸுவர்ண நிறமுடையாள்; தாமரை மாலை அணிந்தவள்; சந்திரன் போன்ற குளிர்ந்த அருள் உடையாள்; பொன்மயமானவள்; அவள் என்றும் என்னகத்தில் இடையீடின்றி இனிது வாழ்க.

15. தாம் ம ஆவஹ ஜாதவேதோ
லக்ஷ்மீம் அநபகாமிநீம் |
யஸ்யாம் ஹிரண்யம் ப்ரபூதம் காவோ
தாஸ்யோஶ்வான் விந்தேயம் புருஷாநஹம் ||

ஸ்ரீநாராயண மூர்த்தியே! பொன், பொருள், கால்நடைச் செல்வம், சேவகர், புத்ரபௌத்ராதிகள் முதலிய யாவற்றையும் நல்கும் மோக்ஷலக்ஷ்மி என்றென்றும் என்னுடன் இருக்குமாறு அருள்புரிய வேண்டும்.

## ஸ்ரீ தேவிக்குத் தனித் துதி

1. பத்மப்ரியே பத்மிநி பத்மஹஸ்தே பத்மாலயே
பத்மதளாயதாக்ஷி |
விஶ்வப்ரியே விஷ்ணுமநோநுகூலே த்வத் பாதபத்மம் மயி
ஸந்நிதத்ஸ்வ ||

தாமரையை விரும்புபவளே! பத்மநிதியை உடையவளே!
தாமரைக்கையளே! தாமரையில் வாழ்பவளே!
தாமரைக் கண்ணியே! உலகத்தால் விரும்பப்படுபவளே!
விஷ்ணுசித்தத்திற்குப் பாங்கானவளே!
நின் பாததாமரைகளை என் தலைமேல் வைப்பாயாக!

2. ஶ்ரியை ஜாத: ஶ்ரிய ஆநிர்யாய
ஶ்ரியம் வயோ ஜநித்ருப்யோ ததாது |
ஶ்ரியம் வஸாநாம் அம்ருதத்வம் ஆயந்
பஜந்தி ஸத்ய: ஸ்மிதா மிதத்யூந் ||

அம்பிகையின் லீலா விநோதத்துக்காகப் படைக்கப்பட்டதே இவ்வுலகம். அது எல்லாருக்கும் நீண்ட ஆயுளையும், செல்வங்களையும், சுகங்களையும் அருளட்டும்; தேவியை உபாஸனை செய்

பவர்கள் மீண்டும் மீண்டும் பிறவார்; ப்ரஹ்ம ஸ்வரூபம் பெற்று ஒளிர்வர்.

## பல ஶ்ருதி

3. ஶ்ரிய ஏவைநம் தத்ஶ்ரியா மாதநாதி ।
ஸந்ததம் ருசாவஷட்க ருத்யம் ஸந்தத்தம்
ஸந்தீயதே ப்ரஜயா பஶுபி: ।
ய ஏவம் வேத ।

இந்த ஸ்ரீஸூக்தத்தை அன்புடன் மனமுவந்து தினமும் அத்யயனம் செய்பவன் அழிவற்றதும் எல்லையற்றதுமான செல்வத்தை அடைவான். ஆகையால் அடியார்கள் இந்த 'ருக்கைக்' கொண்டு ஹோமங்களைச் செய்க. அவர்களை எல்லாச் செல்வங்களும் தாமாகவே வந்தடையும்.

## ஸ்ரீ லக்ஷ்மீ காயத்ரீ

1. ஓம் மஹாதேவ்யை ச வித்மஹே
விஷ்ணுபத்ந்யை ச தீமஹி ।
தந்நோ லக்ஷ்மீ: ப்ரசோதயாத் ॥

ஹே மஹா விஷ்ணுவே! ஸ்ரீதேவியை—மஹாலக்ஷ்மியை— பக்தியுடன் மனமொருமித்துத் தியானிக்கிறோம்; அவளை உபாசிப்பதற்கு வேண்டிய அறிவுச் செல்வத்தை அடைய அவளே எங்களறிவைத் தூண்டவேண்டும்: அவளே ப்ரார்த்தனையை நிறைவேற்றி வைக்கவேண்டும்.



## சில ஸ்ரீ ராம ஸந்நிதிகள்



மதுராந்தகம் (ஸ்ரீ வகுளாரண்ய க்ஷேத்ரம்)

[illegible] — விழுப்புரம் ரயில் பாதையில் உள்ள மதுராந்தகம் [illegible] மேற்கே சுமார் ஒரு மைல் தூரத்தில் உள்ள [illegible] க்ஷேத்ரம். சென்னையிலிருந்து பஸ் மூலமாகவும் [illegible] செல்லலாம். இதற்கு "வகுளாரண்ய க்ஷேத்ரம்" என்ற ப்ரஸித்தியான மற்றொரு பெயரும் உண்டு. இங்குக் கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீராமபிரான், இளைய பெருமாள், பிராட்டி ஸஹிதமாக, அபூர்வமான அழகுடைய [illegible] ஸேவை தருகிறார். ஆங்கிலேய கலெக்டர் [illegible] அவர் ப்ரார்த்தனைக்கு இணங்கி [illegible] இருந்த ஏரியைக் காத்து அருளியவர். இங்கு [illegible] பரமாசாரியரான ஸ்ரீ பாஷ்யகாரருக்கு ஸ்ரீ பெரிய நம்பிகள், சக்ரவர்த்தித் திருமகன் ஸந்நிதிக்குப் பின்புறமுள்ள வகுள (மகிழ) மரத்தடியில் பஞ்ச ஸம்ஸ்கார ஸமாச்ரயணம் செய்யப்பெற்றனர் என்பது இந்த ஸ்தலத்தின் மற்றொரு விசேஷமாகும்.



அயோ  தி

ரயூ நதிக் கரையில் உள்ள ஸ்ரீராம
லக்ஷ்மணர், ஆஞ்ஜநேய ஸந்நிதிகள்



லக்ஷ்  ஜூல

இளைய பெருமாளுக்கு நம் முன்னோர்
அமைத்த ஒரே ஒரு*தனிக் கோயில்
இது இமயமலைமீது அழகாக
விளங்குகிறது.



**அயோத்தி**

*இந்த ஸ்தலம் உத்தரப் பிரதேசத்தில் உள்ளது. இங்கு ஸ்ரீராம பிரானே கனவில் தோன்றிப் பணித்தவண்ணம், ஒரு தென்னாட்டுப் பெண்மணியால் நிர்மாணிக்கப்பட்ட* **"அம்மாஜி மந்திர்"** *என்னும் திருக்கோயிலில் ஸ்ரீ ராமசந்த்ரமூர்த்தி எழுந்தருளியுள்ளார்.*



ஞ்சவடி

இந்த ஸ்தலம் ஸ்ரீ ராமர் வன வாஸத்தில் லோகமாதாவுடன் மன முவந்து வசித்த இடம். து நாஸிக் ஸ்டேஷனுக்கு ' மைல் தூரத்தில் கோதாவரி நதிக்கரையில் அமைந துள்ளது.



வேலூ

ஆந்திர ராஜ்யத்தில் கர்நூலிலிருந் ஈமார் 20 மைல் தூரத்தில் உள்ள வேல்துர்த்தியி ாட்சி தரும் ஸ்ரீ ஸீதாலக்ஷ்மண ஸமேத ஸ்ரீ ராமர்



**பத்ராசலம்**

ராஜமஹேந்திரத்திற்கு வடமேற்கில் 60 மைல் தூரத்தில் பத்ராசல மலைக்காட்டில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ ராமபிரான். கோபன்னா என்ற பக்தரைக் காக்க, ஹைதராபாத் நவாபுக்கும பணம் செலுத்தித் தரிசனமும் அளித்தவர்.



**திருமலை (திருப்பதி)**

திருமலையில் ஸ்ரீ ஸ்ரீநிவாஸப்பெருமாள் மூலஸ்தானத்தில் எழுநதருளியுள்ள மூர்த்தி. திருவேங்கடமுடையானுடன் ஒரே இடத்தில் தரிசிக்கலாம்.



**கீழ்த் திருப்பதி**

கீழ்த் திருப்பதியில் ஸ்ரீ ஜாம்பவானால் பிரதிஷ்டை செய்யப்பட்ட பெருமாள்.



**திருவஹீந்திரபுரம்**

தென் ஆற்காடு ஜில்லாவைச் சேர்ந்த திருப்பாதிரிப்புலியூர் ரயில் நிலையத்திலிருந்து சுமார் 3 மைல் தூரத்தில் திருவஹீந்திரபுரத்தில் உள்ள இந்த மூர்த்தி ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் அருளிய "ஸ்ரீ ரகுவீரகத்யம்" என்னும் திவ்ய ஸ்தோத்ரத்திற்குக் காரணமானவர்.



**ஸ்ரீரங்கம்**

← பெரிய கோயில் பிராகாரத்தில் உள்ள ஸ்ரீ கோதண்டராமர்.



**திருநீர்மலை** (தோயாத்ரி)

சென்னை பல்லாவரம் ஸ்டேஷனுக்கு மேற்கே சுமார் 3½ மைல் தூரத்தில் பஸ் செல்லும் பாதையில் உள்ள க்ஷேத்ரம். ஸ்ரீ வால்மீகி பகவானே ப்ரதிஷ்டை செய்த மூர்த்திகள்.



**திருநின்றவூர்** (தின்னனூர்)

திருநின்றவூர் ரயில் நிலையத்திற்கு ¾ மைலில் உள்ள ஸ்தலம். வெள்ளத்தால் உடையும் நிலையிலிருந்த ஏரியைக் காத்ததால் "ஏரி காத்த ராமன்" என்று திருநாமம்.



**வடுவூர்**

மன்னார்குடிக்கு 10 மைலில் உள்ள வடுவூரில் எழுந்தருளியிருக்கும் இந்த ஸ்ரீ ராம விக்ரஹம், அழகுக்கோர் அணி போன்றதாகும். பார்க்கப் பார்க்கப் பரவசமூட்டும் திருமேனி.



**தில்லைவிளாகம்**

தஞ்சை ஜில்லா தில்லைவிளாகம் ரயில் நிலையத்திற்கு அருகில் உள்ள ஸ்தலம். பூ கர்பத்திலிருந்து அவதரித்த இம்மூர்த்திகள் சிற்பக் கலைக்கொரு சிறந்த உதாரணம். கண்களுக்கொரு தெவிட்டாத இன்பம்.



**தனுஷ்கோடி**

தனுஷ்கோடி ரயில் நிலையத்துக்கருகில் ஸமுத்திரக் கரையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ராமர்.



**திருச்சேறை**

கும்பகோணத்திலிருந்து திருவாரூர் பஸ் மார்க்கத்தில் 9-வது மைலில் உள்ள திருச்சேறை ஸ்ரீ ஸாரநாதப் பெருமாள் ஸந்நிதியில் வனவாஸத் தோற்றத்துடன் எழுந்தருளியுள்ள ஸ்ரீ ராமர்.

ஸ்ரீ ராமஜயம்

# பொருளடக்கம்

# ஸ்தோத்ரமாலை

## ஸகல கார்யங்களிலும் வெற்றி பெற ஸ்ரீராமன் பாதுகைகளைப் போற்றுவோம் !

## ஸ்ரீராம பாதுகைகளின் பெருமை

ஸ்ரீ ராமபிரானின் வனவாஸ காலத்தில், நந்தி க்ராமத்தில் ஸ்ரீராம பாதுகைகளின் ப்ரதிநிதியாக பரதாழ்வார் அரச கார்யங்களைக் கவனித்து வந்தமையால், அவர் ஒவ்வொரு நாளும் நடந்த ராஜ்ய கார்யங்களை ஸ்ரீராம பாதுகைகளிடம் விண்ணப்பித்து வந்தார். எதைச் செய்தாலும் ஸ்ரீ பாதுகா தேவியிடம் தெரிவிக்காமலும் அவரது நியமனத்தைப் பெறாமலும் செய்வதில்லை. எந்தக் காணிக்கை வந்தாலும் ஸ்ரீ பாதுகா தேவியிடம் அர்ப்பணம் செய்வார். இப்படி அந்த மஹாத்மா ஸ்ரீராமசந்திரனுடைய பாதுகைகளுக்கு அடிமையாயிருந்து அவரது பலத்தால் ராஜ்யத்தை நன்கு ஆண்டுவந்தார். (ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் : அயோ. 115 ஸர்க்கம்)



"வர்ஷாணி தாநி வ்ருஷலோ ந தபாம்ஸி தேபே
பாலோ ந கச்சிதபி ம்ருத்யுவசம் ஜகாம ।
ராஜ்யே தவாம்ப ரகுபுங்கவபாதரக்ஷே
நைவாபரம ப்ரதிவிதேயம் அபூத் ப்ரஸக்தம் ॥"

— ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரம்

[ஸ்ரீ பாதுகா ராஜ்யத்தில் சாஸ்த்ர வரம்பை யாரும் மீறியதில்லை. சிசு மரணமே கிடையாது. தீமை தோன்றி அதற்கு சாந்தி பண்ணவேண்டிய நிலைமையே ஏற்படவில்லை.]

*ஸ்ரீ பாதுகாதேவி பூலோகத்தை மாத்திரமின்றி வானுலகத்தவரையும் ரக்ஷித்ததைப் பெரியாழ்வார் திருமொழி 4-9-1-ம் பாசுரம் கூறுகிறது :—*

"மாவடியைத் தம்பிக்கு வான்பணயம் வைத்துப்போய் வானோர் வாழ,
செருவுடைய திசைக்கருமம் திருத்திவந் துலகாண்ட திருமால் கோயில்,
திருவடிதன் திருவுருவும திருமங்கை மலர்க்கண்ணும் காட்டி நின்று,
உருவுடைய மலர்நீலம் காற்றுட்ட ஓசலிக்கு மொளிய ரங்கமே."

## ஆண்டவனுக்கு அர்ப்பணிக்காமல் உண்பது திருடுவது போன்றது

### உணவின் தூய்மை
### ஸ்ரீ சிருங்கேரி ஆசார்யாள் பொன்னுரை

*உலகில், சாப்பிடாமலிருப்பது முடியாது. சரீரம் நிலைப்பதற்காக எப்படிச் சாப்பிடுவதென்பதைத் தெரிந்துகொள்வதுடன் எவை அருந்தத்தக்கவை, எந்தவிதமாகச் சாப்பிட வேண்டும் என்பதையும் புரிந்துகொள்ளுதல் நலம். பகவத்பாதாள் 'ஸதஸ்லோகி'யில், இதனைக் குறித்து விவரித்துள்ளார்கள்.*

*முதலாவதாக, கண்ட பொருள்களைக் கண்ட இடத்தில் சாப்பிடக் கூடாது. உண்ணும் வகை குறித்து நம் சாஸ்திரங்கள் எம்முறையைக் கைப்பற்றவேண்டும் என்பதைத் தெளிவாக்குகின்றன*

*உலகம் தானாக ஏற்படவில்லை என்பது ஆஸ்திகக் கருத்து. அது ஒரு காரிய காரணமாகவே ஏற்பட்டது. லோகநாயகன் இதனைச் சிருஷ்டித்து மக்களுக்குப் பஞ்ச இந்திரியங்களையும் ஆத்மாவையும கொடுத்தார். சுகவாழ்விற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்தார். இதனை* **உணராது பகவான் ஞாபகமே இராது வாழ்தல் தவறு.**

*அணைகள் கட்டலாம் ; கால்வாய்கள் வெட்டலாம் ;* **பருவ மழை இல்லையெனில் யாது பயன ? லோகநாயகன் சகாயமின்றி ஒன்றும் செய்யமுடியாது.** *இதை உணர்ந்து மக்கள் ஒருவருக்கொருவர் ஒத்தாசை செய்து உணவு சம்பாதித்து எல்லாரும் சந்தோஷமாகச் சாப்பிடவேண்டும். ஏகாங்கியாய் வாழ்வதில் சுகம் கிடையாது. சற்றுச் சிந்தித்துப் பார்த்தால் நீ மற்றொருவருக்காகவே ஆகாரம் தேடுகிறாய் என்பது புலனாகும். வீட்டில் உள்ள குழந்தைகளும் மற்றவர்களும் சுகமாயிருந்தால், தானும் சுக வாழ்வு வாழமுடியும் என்ற எண்ணம் இருக்கிறது. ஏகாங்கியாயிருந்தால் சுகமாய் வாழமுடியாது.*

*இஷ்ட காம்யங்களை நமக்குக் கொடுக்கச் சித்தமாயிருக்கும் பகவான் அளித்த வஸ்துக்களை, அவருக்கு முதலில் நிவேதனமாக அளிக்காது சாப்பிடுபவர் திருடனுக்குச் சமானமாவர்.*

ரக்கு அர்ப்பித்துச் சாப்பிடவேண்டும். தேவதை ரக்கு அளித்தபிறகு, மிச்சத்தைச் சாப்பிட்டால் ஸர்வ பாவங்களும் அகலும். அப்படிச் செய்யாதவன் அறிவில்லாதவன். அவன் சாப்பிட்ட அன்னம் வியர்த்தம். அவன் மிருத்துவை உள்ளே காப்பாற்றி வருகிறான். வந்ததெல்லாம் தனக்குப் போதாதென்று எண்ணுகிறான். இவனுக்குப் பாபம் பெருகி துர்ப்புத்தி அதிகமாகும்.

**உணவு தயாரிக்க ஆரம்பித்து அடுப்பில் வைக்கும்போதே தேவதா விநியோகத்துக்காகச் செய்கிறோம் என்ற மனோபாவம் வேண்டும்.**

அதிதியை விரட்டித் தான் மாத்திரம் சாப்பிடுவது பாவம். ஆண்டவனுக்கும், அதிதிக்கும் அளித்த அன்னம் அமிருதமாகும். எதுவானாலும், என் போகத்துக்காகச் சாப்பிடுகிறேன் என்ற எண்ணம் வரக்கூடாது. **பரோபகார சிந்தனையுடன் பகவான் கொடுக்கிறான் என்ற புத்தியுடன் தானம் செய்தால் லக்ஷ்மி கூடவே ஸதா இருப்பாள்.** எச்சிற்கையால்கூடக் காக்காய் ஓட்ட மனமில்லாத துர்ப்புத்தியானவனுக்கு எல்லாரும் சத்ருதான்; தானமளித்து, பின், தான் உண்பவனுக்கு எந்த சத்ருவும் மித்திரனாவான்.

ப்ராண அக்னிஹோத்ரம் செய்து சாப்பிடுவது நல்லது. இப்படிச் செய்தால், சாப்பிடுபவன் நான்தான், என்ற பாவம் விலகி, அந்நிலையில் சைதன்ய ஸ்வரூபத்தை உணரமுடியும். உண்பவருக்கு உயரிய நன்மை கிட்டும்.

**நமக்குச் சேவை செய்பவர்களுக்கும் திருப்தியாக அன்னம் அளிக்கவேண்டும்.—"தினமணி", 31—10—1960.**

அந்த நாட்களில் நம் மக்கள் ஸ்நானம் செய்தவுடன் நெற்றியில் விபூதி, திருமண் போன்ற தெய்வச் சின்னங்களைத் தவறாமல் இட்டுவந்தார்கள். இவற்றின் தத்துவம் என்ன?



**"ஏ பக்தா! நீ மண்ணிலிருந்து வந்தவன். உன் உடல் ஒரு மண்பாண்டம். என்றாவது ஒரு நாள் நீ மண்ணிற்குத் திரும்புவது திண்ணம். எனவே, திருமண் விபூதி இவற்றைக் குழைக்கும் ஸமயம் உன் அநித்யத்துவமும் நாளும் உனக்கு ஞாபகம் வரட்டும். கூடிய வரை பிறர்க்கு உபகாரம் செய். ஸ்வய நலத்தைக் குறைத்துக்கொள்."**

என்று [இ]வைகளின்மூலம் பகவான் **நமக்குக் கூறு[கி]றார்போலும்?**



தவிர, எவனொருவனுடைய நெற்றியில் இந்தத் தெய்வீகச் சின்னம் எப்பொழுதும் இருக்கிறதோ, எவன் வீட்டு முன்வாயிலில் இந்தச் சின்னங்கள் பொறிக்கப்பட்டு இருக்கின்றனவோ, அம்மனிதனுக்கும், அந்த வீட்டிற்கும் கடவுள் அருள் பரிபூரணமாக இருக்கும் என்று நம்பி நம் முன்னோர்கள் ஆனந்தமாக வாழ்ந்து வந்தார்கள் அக்காலத்தில்.

இன்று நெற்றிக்கு இடுவதை அவமானமாகக் கருதலானோம். அந்நாட்களில் வைஷ்ணவர் வீட்டு வாசல்களில் திருமண், சங்கு, சக்ரத்துடன் கூடிய சின்னங்கள் பொறித்துவைக்கப்பட்டிருப்பது வழக்கம்.








இப்போது அவர்கள் கட்டும் வீடுகளிலும் இதை மறந்து விட்டனர்.

"நீறில்லா நெற்றிப் பாழ்; நெய்யில்லா உண்டி பாழ்"






என்பது ஔவைப் பிராட்டி அருள் வாக்கன்றோ! நாமும் நீராடியவுடன் நெற்றியில் விபூதி, திருமண், கோபிசந்தனம் போன்ற சின்னங்களைத் தவறாமல் அணிவதுடன் நாம் வசிக்கும் வீடுகளிலும் இத்தகைய சின்னங்களை முன்வாயிலில் பொறித்து வைக்கவேண்டும்.



பல பிறவிகளில் செய்த புண்ணியப் பயனாய்ப் பெற்ற அரிய இம்மனித உடல் அழியக் கூடியதாதலின் அழியா இன்பத்தையடைய ஒவ்வொருவரும் பாடுபட்டு உய்யவேண்டும் என அறிவிப்பதே இச்சின்னம் என்பது நம் முன்னோர் நம்பிக்கை.

"முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும் முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ தும்கண்டு மேலுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லால்பொன்னி னம்பலவன்
அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றேயறி வாரிலையே"

என்ற பட்டினத்தார் பாடலும் இக்கருத்தை வலியுறுத்தும்.



ஆணவம், கன்மம், மாயை என்னும் முக்குற்றங்களும் அகலவேண்டுமென்று கருதி வலக்கை நடுவிரல் மூன்றினாலும் வடக்கு அல்லது கிழக்கு முகமாக இருந்து நெற்றியில் மூன்று கோடு வடிவமாக விபூதி என்னும் பஸ்மத்தை அணிதல்வேண்டும். விபூதியை அணியும்போது அது நிலத்தில் சிந்தா வண்ணம் அண்ணாந்து "ஓம் சிவசிவ" என்று கூறி அணிதல் முறையாகும்.

...யே பஸ்மம். விபூதியே சிவம். சிவமே பஸ்மம். தான் பஸ்மமாய் இருந்து நாஸ்திகத்தையும் பஸ்மம் செய்வது விபூதி.

"மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருவால வாயான் திருநீறே"

என்பது சம்பந்தர் அருள் மொழியாகும்.

## திருமண்

இவ்வாறே நெற்றியில் திருமண் காப்பு அணிதலும் நம் முன்னோர்கள் வழக்கமாகும். திருமண் காப்பு என்னும் சொல்லே, திருமண் இடுதல் நமக்கு ஒரு ரக்ஷையாக அமைவதைக் குறிக்கும். இவை தெய்வ பக்தியைக் குறிக்கும் அடையாளங்கள். திருமண் திருமாலின் பக்தியையும் இடையில் அணியும் ஸ்ரீசூர்ணம் திருமகள் பக்தியையும் குறிக்கும். அது திருமாலின் திருவடி வடிவமாக அமையவேண்டும் என்பதைக் கீழ்வரும் ச்லோகம் நன்கு விளக்குவதாம்;



"பரஸ்ய பும்ஸ: பத ஸந்நிவேசான்
ப்ரயுஞ்ஜதே பாவித பஞ்ச ராத்ரா: ।
அகப்ரதீபான் அபதிஸ்ய புண்ட்ரான்
அங்கேஷு ரங்கேஸய பாதுகே த்வாம் ॥"

—ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரம்.

பாஞ்சராத்ரம் முதலிய ஆகம நூல்களைக் கற்றுணர்ந்த பெரியோர் தம் உடலில் அணியும் புண்ட்ரங்கள் (குறிகள்) திருமாலின் பாதுகை வடிவமானவை என்பதும், அதனால் பாவங்கள் யாவும் நீங்கும் என்பதும் இந்த ஸ்லோகத்தின் கருத்தாகும்.

எனவே, உலகில் பிறந்த யாவரும் தத்தம் முன்னோர்கள் அணிந்தவாறு விபூதியோ, திருமண்ணோ, கோபிசந்தனமோ அணியவேண்டுவது அவசியம் என்பது பதற்றென விளங்கும் அன்றோ? நாமும் நம் முன்னோர் ஒழுகிய முறைப்படி நெற்றிக் குறியணிந்து நலம் பல பெறுவோமாக.

### ஸகல காரியங்களிலும் ஸித்தி பெற உங்கள் காரியங்களில் எதையும்

## தாமதம் செய்யாதீர்கள்!

## "DO IT NOW!"

"உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பதும் போலும் பிறப்பு"—குறள் 339

என்பதற்கிணங்க உலகம் நிலையில்லாதது. எந்நேரத்தில் என்ன நிகழும் என்பதை யாரும் அறுதியிட்டுரைத்தல் இயலாது. மின்னல் மின்னும்; ஒளிப்பிழம்பாய்க் காட்சி அளிக்கும்; உள்ளத்தை அள்ளும் எழிலுடன் திகழும்; ஆனால் அதன் ஆயுள் ஒரு கணமே. அத்தகைய மின்னல்போன்றதே வாழ்வு; ஒருகணத்தில் இருந்த இடம் தெரியாமல் மறையும்; ஆகவே, வாழ்க்கையில் நாம் செய்ய வேண்டிய கடமைகளை உடனுக்குடனே விரைந்து செய்ய வேண்டும். 'இந்நேரம் தப்பினால் எந்நேரம் வாய்க்கும்' என்ற அச்சம் நமக்கு எப்போதும் இருந்துகொண்டே இருக்கவேண்டும். உயிர்களுள் சிறந்த மக்களாய்ப் பிறந்த நாம் அண்ட சராசரங்களுக்கும் தலைவனாகிய ஆண்டவனை எப்போதும் மனத்தகத்தே இருத்தி வணங்கல் வேண்டும். ஆண்டவனை வழிபட வாழ்த்த—யாருக்கு மனம் உண்டோ அவனே மனிதன். அவ்வாறு வழிபடாதார் மனிதப் பிறவியினின்று வேறுபட்டவராவர்; தமக்கு அளிக்கப்பட்ட சிறந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ளத் தவறியவர் ஆவர். இதனாலேயே, 'இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்

குமோ?' என்ற கவலையோடு ஆண்டவன் அடியார்களுள் தலை சிறந்த பெரியார்கள்,

"மின்னின் நிலையில
மன்னுயிர் யாக்கைகள்
என்னு மிடத்து, இறை
உன்னுமின் நீரே"

எனப் பொருள் பொதிந்த அருளுரைகளைத் தெளிய அருளினர். அதாவது கடவுளை வழிபடுதலில் அசிரத்தை, காலஹரணம் கூடவே கூடாது என்பதை வலியுறுத்துகிறது மேற்கண்ட பொன்னுன மொழி.

அருளாலும் அனுபவத்தாலும் ஆன்ற பெரியோர்கள் அருளியவை ஆன்மீக நிலையை உயர்த்திப் பேரின்ப வாழ் வளிக்கப் பெருந்துணையாய்—வழி காட்டியாய்—அமைந்தவை. பேரின்பத்துக்கே வழிகாட்டும் அவை உலகியலுக்குச் சிறந்த வழிகாட்டி என்பதில் ஐயமேது? ஆகவே, அவர் கூறியவை உலகியலுக்கும் நன்கு பொருந்தும். நம் கடமைகளை—செய்ய வேண்டிய அறத்தை—பின்னொருகால் செய்து கொள்ளலாம் எனத் தள்ளிப்போடுவது அறியாமையாகும். பின்னொருகால் நமக்குச் சமயம் வாய்க்குமோ? ஆகவே, 'இன்னே செய்க' என்பதைத் தாரக மந்திரமாகக் கொண்டு செயல்பட வேண்டும். தாமதம்—சோம்பல்—நம்மைக் கெடுக்கும். பகைவர் நம்மைக் கண்டு எள்ளி நகையாடும் நிலையை உண்டாக்கும். விரைந்து செய லாற்றும் தன்மையோ பெருஞ்செல்வமும் புகழும் அளிக்கும். இதனாலேயே வள்ளுவர்,

மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு"—குறள் 610

என்றார்.

## கோயில் வழிபாடு

உலகில் அருமையும் பெருமையும் வாய்ந்தது மானிடப் பிறப்பு. அதனை நாம் புண்ணியப் பயனாய் அடைந்துள்ளோம். இதனைக் கொண்டு நாம் மிகவும் மேலான ஒரு நிலையை அடைந்து இன்புற வேண்டியவர்களாக இருக்கிறோம். அவ்வொப்பில்லா இன்பத்தைக் குறிக்கோளாகக் கொண்டு நாம் வாழ்க்கையாகிய யாத்திரையை நடத்திக்கொண்டிருக்கிறோம். இந்த நம் யாத்திரை இருவகைப்படும். ஒன்று உடலோம்பும் கொள்கையது; மற்றொன்று உயிரோம்புங் கொள்கையது. இவற்றை முறையே லௌகிகம், வைதிகம் என்ற பெயரால் நூலோர் கூறுவர். அறிந்தோ அறியாமலோ மேற்குறித்த இருவகைப் பயணத்தையும்

நாம் ஒருமிக்க நடத்திச் செல்கிறோம். பொதுவாய்க் கூறுமிடத்து எந்த வழிப்பிரயாணிக்கும் இடையிலே தாகம் உண்டாகாம லிராது. அந்நீர் வேட்கையை, நிறைந்த நீரைக்கொண்ட பெருங் கடல் நீக்காது. கடல்நீரை மேகங்கள் கொண்டு நன்னீராகப் பொழிந்து பல நீர்நிலைகளை ஏற்படுத்துகின்றன. தாகமடைந்தவன் இத்தகைய நீர்நிலைகளை அடைந்து பருகியே சோகம் தவிர்ந்து சுகமடைகிறான்.

அதுபோலவே, எங்கும் பரந்துள்ள அருட்பெருங் கடலாகிய ஆண்டவனை, நாம் நமது வாழ்க்கைப் பிரயாணத்தில் நேரிடும் துயரம் களைவதற்காக எளிதில் அடைந்து அனுபவித்தல் இயலாது; எனினும், மிகப் பழங்காலத்திலே, தூய ஆன்ம யாத்திரையை நடத்திய ஞானபக்தியும் விரக்தியும் வாய்ந்த மேலோர் பலர் அக்கருணைத் தடங்கடலை உருகிப் போற்றவேண்டி, வேண்டிய வண்ணமாக வடித்து வரைந்து வெளிப்படுத்திப் பல்வேறிடங்களில் நிலைகொள்ளச் செய்து உபகரித்துள்ளனர். இந்தவிதமாக அந்தந்த மேலோர்களும் உகந்து அமைத்த வடிவங்களையும் பெயர் களையும் தாங்கி, எழுந்தருளியுள்ள இடங்களே தேவாலயங்கள் என்று சொல்லப்படுவன. எங்கும் வியாபித்திருக்கும் இறைவன் மேலோர்கள் முயன்று கண்ட ஆலயத்துள்ள உருவங்களிலேயும் வீற்றிருப்பானென்பதில் ஒரு சிறிதும் நமக்குச் சந்தேகம் வேண்டுவ தில்லை.

இவ்வாலயங்கள் பல நிறுவி, அவற்றைக் கண்ணேபோல் காத்து, அவற்றில் தினமும் தொழுதும் வந்த, நம் முன்னோர்கள் தாழ்வு இன்றி வாழ்ந்து வந்தனர்.

இதன் உண்மை என்ன? அரசர்களிடமும் மக்களிடமும் தெய்வ நம்பிக்கை பூரணமாக இருந்து வந்தது.*

---

* VIBHISHANA'S COUNTRY SHOWS THE RIGHT WAY

Prime Minister Sirimavo Bandaranaike of Ceylon has introduced a number of new features in the island's politics. Being a simple religious minded lady, she wants to seek the guidance of God before taking any vital decision. To whatever religion her Ministers might belong, she is strongly convinced that everyone of her colleagues should believe in his religion and seek the guidance of his God in every activity. It has now become a regular custom to begin every Cabinet meeting with a few minutes of silent prayer. As the first meeting of the Cabinet, the Premier is reported to have told her colleagues that one's religious life was more important than anything else and that in all deliberations, discussions and decisions they should pray for the guidance of Gods. —"The Hindu". 9—8—1950

ஆலயங்கள்தோறும் பூஜைகள், திருவிழாக்கள் சரிவர நடை பெற்று வந்தன. கோயில்களில் அர்ச்சகர்கள் பொது மக்கள் நலத்தை உத்தேசித்து ஶ்ரத்தையுடன் "ஸர்வேஜனாஸ் ஸுகினோ பவந்து" என்று மனமுருகிப் பிரார்த்தித்து வந்தனர். ஆனால் நாகரிகம் முற்ற முற்றப் பூஜையில் ஶ்ரத்தையும் ஒழுங்கும் நாளடைவில் குறையலாயின. நல்லொழுக்கத்தின் மதிப்பையும் அவசியத்தையும் மக்கள் மறக்கலாயினர். எனவே, நம் நாடு பலவித கஷ்டங்களால் பீடிக்கப்பட்டு இருக்கிறது.

இக்கலிகாலத்தில் கடவுளின் கருணையைப் பெறுவது மிகச் சுலபம். மற்ற யுகங்களில் பகவானை நோக்கித் தவம் முதலியன செய்யும்போது உண்டாகும் சிரமங்கள் வெகு அதிகம்.

கலியுகத்திலோ அவன் நாமத்தைத் திரிகரண சுத்தியுடன் சொன்னாலும் போதும். இதனால் அவன் அருள் என்றென்றும் நமக்குக் கிட்டும் என்று நம் சாஸ்திரங்கள்

அதுவும் சில சுலபமான வழிகளில் கடவுளின் பேரருளை நாம் பெற்றுச் சுலபமாக வாழ்வது இந்த யுகத்தில் சாத்தியம் என்பது சத்தியம்.

அதாவது நாம் எல்லாரும் ஆலய வழிபாட்டை *ஒழுங்காகச் செய்து உருக்கத்துடன் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்துவருவது தேசத்திற்கே க்ஷேமம் தருவதாகும்.

ஆலயத்திற்குப் போகும்போது கைகால்களைச் சுத்தம் செய்து கொண்டு, சட்டை முதலியன மேலே இல்லாமல், நெற்றிக்கு இட்டுக்கொண்டு, ஆலயம் சென்று விநயத்துடனும் பயபக்தி யுடனும்,

* In performing the "Sila Vinyasa" (laying of the foundation-stone) of Sri Ananta Padmanabha Perumal at Gandhi Nagar, Adyar on 12-10-1960, His Holiness Sri Sankaracharya of Sringeri was pleased to advise the large and distinguished gathering thus :—

> " Bhagwan alone can fulfil man's desires. He is Sarva-vyapi. But, you must have some sadhana to seek HIS help—this sadhana is Thruaradhana. You must perform this sacred aradhana through some roopa (form) of the Lord and it is always preferable to have a prathishta roopa (idol). I, therefore, congratulate you on your efforts to construct a Temple for Lord Sri Ananta Padmanabha."

"என் அப்பனே! எங்கள் எல்லோருக்கும் நீதான் துணை;
காத்தருள்க! ஸர்வ ஆன்மாக்களையும் ரக்ஷிப்பாயாக."

என்று மனமுருகிக் கோயிலிலுள்ள மூர்த்திகளை நாம் எல்லோரும் அனுதினமும் பிரார்த்தித்து வந்தால் நம் தேசத்திற்குச் சுகமும் சுபிக்ஷமும் வெகு சீக்கிரம் ஏற்படும் என்பது சத்தியம் ; முக்காலும் சத்தியம்.

## ஸகலருக்கும் ஸகல காரிய ஸித்திதரும்

### ஸ்ரீ ராமராஜ்யம் பெறுவதற்கு 'ஆனந்த விகட'னின் கைங்கர்யம்

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் அயோத்யா காண்டம் 100-வது ஸர்க்கத்தின் அவச்யத்தைத் தமிழ் பேசும் உலகமெலாம் பரப்பும் நோக்கத்துடன் "ஆனந்த விகடன்" மகாத்மா காந்தி நூற்றாண்டு விழா மலரில் (5-10-1969) ஸ்ரீ ஸ்ரீ படாரி ஸேவக : ஸ்ரீ வ. கிருஷ்ணஸ்வாமி ஶர்மா எழுதிய இந்த ஸர்க்க ஸாராம்சத்தைக் கீழ்க்கண்ட முன்னுரையுடன் வெளியிட்டுள்ளார்கள்:—

ஏன் ராமராஜ்யம்.

"இந்தியாவுக்கு ராமராஜ்யம் வரவேண்டுமென்று கனவு கண்டார் காந்திஜி. அந்த ராமராஜ்யத்தின் ஆட்சிமுறைதான் என்ன?

"வால்மீகி ராமாயணத்தில் அயோத்யா காண்டம் 100-வது ஸர்க்கத்திலுள்ள இந்தப் பகுதியிலிருந்து அதைப் புரிந்து கொள்ளலாம்.

"விளக்கம்



# கோயில் தரிசன விதிகள்

பெருமாள் கோயிலில் சென்றதும் த்வஜஸ்தம்பம் இருக்குமானால் அதன் கீழோ அல்லது பிரதான வாயிலின் கீழோ, ஸாஷ்டாங்கமாக அதாவது எட்டு அங்கங்களும் பூமியில் படுமாறு விழுந்து நமஸ்காரங்கள் செய்வது மிக முக்கியம்.

அநேகமாக, கோயிலுக்கு வெளியில் சிறிய திருவடி கோயில் இருக்கும். அங்கு அநுமாரை ஸேவித்துவிட்டுக் கோயிலில் பிரவேசிக்கவேண்டும். கோயிலுக்குள் இருக்கும் த்வஜஸ்தம்பத்திற்கு ஸாஷ்டாங்கமாக விழுந்து ஸேவித்து அடுத்தபடியாக ப்ரதான துவாரபாலகர்களை ஸேவித்து அனுமதி பெற்றுக்கொள்ள வேண்டும். பிறகு ஆழ்வார், ஆசார்யர் ஸந்நிதிகள் இருக்குமானால் அங்கு ஸேவிக்கவேண்டும். அப்படி ஆழ்வார், ஆசார்யர் ஸந்நிதிகள் இல்லாத சிறிய கோயில்களாக இருக்குமானால், முதலில் ஆசார்ய பூர்வாசார்யர்களை மானஸீகமாகத் த்யானித்து அவர்களுடைய அனுக்ரஹத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

பிறகு தாயார் ஸந்நிதிக்குச் சென்று அங்குள்ள துவாரபாலகிகளை ஸேவித்து அனுமதி பெற்றுக்கொண்டு தாயாருக்கு அர்ச்சனை முதலானவை செய்யவேண்டும்.

அதன் பிறகு பிரதான பெருமாள் ஸந்நிதிக்கு எதிரிலுள்ள கருடாழ்வாரையும் துவாரபாலகர்களையும் மானஸீகமாகவாவது ஸேவித்துப் பகவானை ஸேவிக்க அனுமதியளிக்க வேண்டுமென்று பிரார்த்தித்த பிறகே, ஸந்நிதிக்குள் சென்று ச்ரிய: பதியான பகவானை ஸேவிக்கவேண்டும்.

அர்ச்சனைகள் செய்து, ஆரத்திகள் செய்வித்துத் தீர்த்தம் திருத்துழாய்ப் பிரஸாதம் இவைகளைப் பெற்றுக்கொண்டு வெளியில் வருவது நலம். அர்ச்சனைகள் செய்ய முடியாவிட்டாலும் தீர்த்தம், ஶடாரி முதலிய பிரஸாதங்கள் கிடைக்க ஹேது இல்லாவிட்டாலும் கவலை வேண்டாம். ஸந்நிதிகளைப் பிரதக்ஷிணம் செய்து ஸேவித்தாலுமே ஜகத்ரக்ஷகன் அருள் நமக்கு நிச்சயம் உண்டு. பிறகு சிறிது நேரம் கோயிலில் உட்கார்ந்து பகவானை சாந்தமாகப் பிரார்த்தித்துவிட்டு பிரதான துவாரபாலகர்களை மறுபடியும் மானஸிகமாக ஸேவித்து உத்தரவு பெற்றுக்கொண்டு மறுபடியும் த்வஜஸ்தம்பத்திற்கு எதிரில் ஸாஷ்டாங்கமாக ஸேவித்துவிட்டு வெளியில் வரவேண்டும்.

பொதுவாக, பெரிய சிவன் கோயில்களில் ஸ்ரீ நந்திகேசுவரர் த்வஜஸ்தமபத்திற்கு அருகிலேயே பிரதிஷ்டை செய்யப்பட்டிருப்பார். அம்மாதிரிக் கோயில்களில் ஸேவார்த்திகள் ஸ்ரீ நந்தி பகவானது வாலை பக்தியுடன் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டு வணங்கவேண்டும். பிறகு அங்கிருந்துகொண்டே ஸ்ரீ நந்தி பகவானுடைய கொம்புகளின்மூலம் மூலஸ்தானத்தை நோக்கித் திருமுடியைச் செலுத்தி நமஸ்கரிக்கவேண்டும். அதன் பிறகு கோயிலுக்குள் பிரவேசித்து விநாயகமூர்த்தியை நமஸ்கரிக்க வேண்டும்.

அதன் பிறகு அங்கிருந்து நேராக மூலஸ்தானம் சென்று சிவபிரானை ஸேவிக்கவேண்டும். பிறகு, அம்பாள் ஸந்நிதிதனியாக இருந்தால் அம்பாளை ஸேவித்துவிட்டுப் பிறகு கோயிலிலுள்ள மற்றைய பரிவார தேவதைகளை வணங்கவேண்டும். கடைசியில் சண்டிகேசுவரரைத் துதி செய்து விடைபெற்று வெளியில் வர வேண்டும்.

பிரதானக் கோயிலில், ஸ்ரீ நந்தி பகவானோ த்வஜஸ்தம்பமோ இல்லாத கோயில்களில் முதலில் தும்பிமுகத்தோனைத் துதி செய்ய வேண்டும். பிறகு மேற்கூறிய விதம் கோயிலின் உட்சென்று ஸ்ரீ நந்திபகவான முதலிய ஸந்நிதிகளில் வழிபாடு செய்ய வேண்டும்.

மதுரை ஸ்ரீ மீனாக்ஷியம்மன் கோயில், திருநெல்வேலி ஸ்ரீ காந்திமதியம்பாள் கோயில் போன்ற கோயில்களில், அம்பாள் கோயிலுக்குச் சென்று அங்குள்ள ஸ்ரீ விநாயகமூர்த்தியை வணங்கி விட்டுப் பிறகு ஸ்ரீ அம்பாளைத் துதி செய்தபிறகேதான் ஸ்ரீ நந்தி பகவான், சிவபிரான் முதலியவர்களை நமஸ்கரிக்கவேண்டும்.

---

## நவக்ரஹ க்ஷேத்திரங்கள்

**ஆதித்யாய ச ஸோமாய மங்களாய புதாய ச ।**
**குரு ஸுக்ர சநிப்யஸ்ச ராஹவே கேதவே நம: ॥**

**இந்த ஜன்மத்தில் நம் மக்கள் கடைத்தேற, இறைவனைப் பிரதிஷ்டை செய்த ஆலயங்களிலெல்லாம் நவக்ரஹங்களையும் நம் முன்னோர் பிரதிஷ்டை செய்துள்ளனர்.**

எனினும், நவக்ரஹங்கள் நம் நாட்டில், எட்டு முக்கிய க்ஷேத்திரங்களில மூலஸ்தான மூர்த்தங்களுடன் சேர்த்தே பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. அவை யந்திர ரூபமாகவும், தத்தம் காயத்ரீ மந்திர ரூபமாகவும், அவ்வவ்விடங்களில் நித்யவாஸம் செய்து, அந்தந்த க்ஷேத்திர மூர்த்திகளைத் தரிசிப்போரின் கஷ்டங்களை நீக்கி இன்பத்தையளிக்கின்றன என்று நம் புராதன கிரந்தங்களில் இருக்கிறது.

இந்த எட்டு திவ்ய ஸ்தலங்களின் விவரங்களும், அந்தந்த க்ரஹத்திற்கான காயத்ரியும், அடுத்த பக்கத்தில் தந்திருக்கிறோம். பக்தர்கள், ஸாத்யமான ஸமயங்களில், இந்த க்ஷேத்திரங்களுக்குச் சென்று இந்த மூர்த்திகளைத் தரிசனம் செய்து வருவது நலம்.

**சுபம் ! சுபமே ! !**

---

| க்ரஹம் | க்ஷேத்திரம் | மூர்த்தி | காயத்ரீ |
|---|---|---|---|
| சூரியன் | ஸூரியனூர் கோயில் (ஆடுதுறை அருகில்-தஞ்சை ஜில்லா) | ஸ்ரீ சிவஸூரிய நாராயண ஸ்வாமி | அஸ்வ த்வஜாய வித்மஹே, பாஸ ஹஸ்தாய தீமஹி । தந்நஸ் ஸூர்ய: ப்ரசோதயாத் ॥ |
| சந்திரன் | திருப்பதி | ஸ்ரீ வேங்கடாசலபதி | பத்ம த்வஜாய வித்மஹே, ஹேம ரூபாய தீமஹி । தந்நஸ் ஸோம: ப்ரசோதயாத் ॥ |
| செவ்வாய் | பழநி | ஸ்ரீ தண்டாயுதபாணி | வீர த்வஜாய வித்மஹே, விக்ந ஹஸ்தாய தீமஹி । தந்நோ பௌம: ப்ரசோதயாத் ॥ |
| புதன் | மதுரை | ஸ்ரீ சொக்கநாதர் | கஜ த்வஜாய வித்மஹே, ஸுக ஹஸ்தாய தீமஹி । தந்நோ புத: ப்ரசோதயாத் ॥ |
| குரு | திருச்செந்தூர் | ஸ்ரீ பாலஸுப்ரஹ்மண்யம் | வ்ருஷப த்வஜாய வித்மஹே, க்ருணி ஹஸ்தாய தீமஹி । தந்நோ குரு: ப்ரசோதயாத் ॥ |
| சுக்கிரன் | ஸ்ரீரங்கம் | ஸ்ரீ ரங்கநாதர் | அஸ்வ த்வஜாய வித்மஹே தநுர் ஹஸ்தாய தீமஹி । தந்ந: ஸுக்ர: ப்ரசோதயாத் ॥ |
| சனி | திருநள்ளாறு (காரைக்கால் அருகில்-தஞ்சை ஜில்லா) | ஸ்ரீ சனிபகவான் | காக த்வஜாய வித்மஹே, கட்க ஹஸ்தாய தீமஹி । தந்நோ மந்த: ப்ரசோதயாத் ॥ |
| ராகு } கேது } | ஸ்ரீ காளஹஸ்தி | ஸ்ரீ காளஹஸ்தீச்வரர் | நகத்வஜாய வித்மஹே, பத்ம ஹஸ்தாய தீமஹி । தந்நோ ராஹு: ப்ரசோதயாத் ॥ அஸ்வ த்வஜாய வித்மஹே, ஸூலஹஸ்தாய தீமஹி । தந்ந: கேது: ப்ரசோதயாத் ॥ |



ஸ்ரீ விருஷப தேவர் அருளிச்செய்த

# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்

---

1. அகணித குணகண மப்ரமேயமாத்யம்
ஸகல ஜகத் ஸ்திதி ஸம்யமாதி ஹேதும் ।
உபரத மனோயோகி ஹ்ருந் மந்திரம்தம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே ॥

2 நிரவதி ஸுகம் இஷ்ட தாதார மீட்யம்
நதஜன மநஸ்தாப பேதைக தக்ஷம் ।
பவ விபிந தவாக்னி நாமதேயம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே ॥

3. த்ரிபுவன குரும் ஆகமைகப்ரமாணம்
த்ரி ஜகத்காரண ஸூத்ரயோக மாயம் ।
ரவி சத பாஸ்வரம் ஈஹித ப்ரதானம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே ॥

4. அவிரத பவ பாவனாதி தூரம்
பத பத்மத்வய பாவினா மதூரம் ।
பவ ஜலதிஸுதா ரணாங்க்ரி போதம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே ॥

[அடுத்த பக்கம் காண்க

மூன் பக்கத் தொடர்ச்சி]

5. க்ருத நிலய மநிசம் வடாக மூலே
நிகம சிகா வ்ராத போதிதைக ரூபம் ।
த்ருத முத்ராங்குளி கம்ய சாரு போதம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே ॥

6. த்ருஹிண ஸுத பூஜிதாங்க்ரி பத்மம்
பத பத்மாநத மோக்ஷ தாந தக்ஷம் ।
க்ருத குருகுல வாஸ யோகி மித்ரம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே ॥

7. யதி வர ஹ்ருதயே ஸதா விபாந்தம்
ரதிபதி சதகோடி ஸுந்தராங்க மாத்யம் ।
பரஹித நிரதாத்மனாம் ஸுஸேவ்யம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே ॥

8. ஸ்மித தவள விகாஸிதாநநாப்ஜம்
ச்ருதி ஸுலபம் வ்ருஷபாதிரூட காத்ரம் ।
ஸித ஜலஜ ஸுசோப தேஹ காந்திம்
ஸததமஹம் தக்ஷிணாமூர்த்தி மீடே ॥

9. வ்ருஷப க்ருதமிதம் இஷ்ட ஸித்திதம்
குருவரதேவ ஸந்நிதௌ படேத்ய: ।
ஸகல துரித துக்க வர்க ஹாநிம்
வ்ரஜதிசிரம் க்ஞானவான் சம்புலோகம் ॥





ஸ்ரீராமஜயம்

# ஸ்தோத்திரமாலை

## ஆதித்யஹ்ருதயம்



[ஸ்ரீ சூரிய பகவான் பிரத்யக்ஷ தெய்வமாகத் தரிசனம் தருகிருர். அவர்தம் திருவடிகளைப் போற்றியே ஸ்ரீ ராமசந்திரமூர்த்தி ராம-ராவண யுத்தத்தில் வெற்றி கண்டார். நித்ய வாழ்க்கையில் ஸகல பாக்யங்களும் பெற, பக்தர்கள் இதைத் தினமும் பாராயணம் செய்வது அவசியம். தவிர, பெரிய ஆபத்தோ, வருத்தமோ, சோதனையோ வரும் காலங்களில், இந்த ஸ்தோத்திரத்தைப் பூரண நம்பிக்கையுடன் ஒரே சமயத்தில் தொடர்ந்து 9 தடவை பாராயணம் செய்வோர் நிம்மதி பெறுவர் என்பது நிச்சயம்.]

### ஸங்கல்பம்

மம சிந்தித மனோரத-அவாப்த்யர்த்தம் ஆதித்ய-
ஹ்ருதயஸ்தோத்ர மஹாமந்த்ர ஜபம் கரிஷ்யே.

### ந்யாஸம்

ஓம், அஸ்ய ஸ்ரீ ஆதித்யஹ்ருதய ஸ்தோ த்ர மஹா மந்த்ரஸ்ய
அகஸ்த்யோ பகவான் ரிஷி:-அநுஷ்டுப்ச்சந்த :
ஸ்ரீஸூர்யநாராயணோ தேவதா
நிரஸ்தாசேஷ விக்னதயா ஸ ர் வ த் ர
ஜயஸித்யர்த்தே விநியோக:

### த்யானம்

ஜயதி ஜயதி ஸூர்ய: ஸப்தலோகைகதீப :
கிரண ம்ருதிததாப: ஸர்வதுக்கஸ்ய ஹர்தா |
அருணகிரண கம்யஶ்சாதிராதித்யமூர்த்தி:
பரம பரம திவ்ய: பாஸ்கரஸ்தம் நமாமி ||

ததோ யுத்தபரிஶ்ராந்தம் ஸமரே சிந்தயா ஸ்த்திதம்
ராவணம் சாக்ரதோ த்ருஷ்ட்வா யுத்தாய ஸமுபஸ்த்திதம் (1)

தைவதைஶ்ச ஸமாகம்ய த்ரஷ்டு மப்யாகதோ ரணம்
உபாகம்யா ப்ரவீத் ராமம் அகஸ்த்யோ பகவாந் ரிஷி : (2)

ராம ராம மஹாபாஹோ ஶ்ருணு குஹ்யம் ஸநாதனம்
யேந ஸர்வாநரீந் வத்ஸ ஸமரே விஜயிஷ்யஸி (3)

ஆதித்யஹ்ருதயம் புண்யம் ஸர்வ ஶத்ரு விநாஶநம்
ஜயாவஹம் ஜபேந்நித்யம் அக்ஷய்யம் பரமம் ஶிவம் (4)

ஸர்வமங்கள மாங்கள்யம் ஸர்வபாப ப்ரணாஶநம்
சிந்தாஶோக ப்ரஶமனம் ஆயுர்வர்த்தந முத்தமம் (5)

ரஶ்மிமந்தம் ஸமுத்யந்தம் தேவாஸுர நமஸ்க்ருதம்
பூஜயஸ்வ விவஸ்வந்தம் பாஸ்கரம் புவநேஶ்வரம் (6)

ஸர்வதேவாத்மகோ ஹ்யேஷ : தேஜஸ்வீ ரஶ்மிபாவந :
ஏஷ தேவாஸுரகணாந் லோகாந் பாதி கபஸ்திபி : (7)

ஏஷ ப்ரஹ்மா ச விஷ்ணுஶ்ச ஶிவ : ஸ்கந்த:ப்ரஜாபதி:
மஹேந்த்ரோ தநத: காலோ யமஸ் ஸோமோ ஹ்யபாம்பதி: (8)

பிதரோ வஸவஸ்ஸாத்யா ஹ்யஶ்விநௌ மருதோ மநு:
வாயுர்வஹ்நி: ப்ரஜா ப்ராண: ருதுகர்த்தா ப்ரபாகர: (9)

ஆதித்ய: ஸவிதா ஸூர்ய: கக: பூஷா கபஸ்திமாந்
ஸுவர்ணஸத்ருஶோ பாநு: ஹிரண்யரேதா திவாகர : (10)

ஹரிதஶ்வ: ஸஹஸ்ரார்ச்சி: ஸப்தஸப்திர் மரீசிமாந்
திமிரோந்மதந: ஶம்பு: த்வஷ்டா மார்த்தாண்ட அம்ஶுமாந் (11)

ஹிரண்யகர்ப்ப: ஶிஶிர: தபநோ பாஸ்கரோ ரவி:
அக்நிகர்ப்போ (அ)திதே: புத்ர: ஶங்க: ஶிஶிரநாஶந: (12)

வ்யோமநாதஸ்தமோபேதீ ருக்யஜுஸ்ஸாமபாரக:
கநவ்ருஷ்டிரபாம் மித்ர: விந்த்யவீதீ ப்லவங்கம: (13)

ஆதபீ மண்டலீ ம்ருத்யு: பிங்கல: ஸர்வதாபந,
கவிர்விஶ்வோ மஹாதேஜா: ரக்த: ஸர்வபவோத்பவ: (14)

நக்ஷத்ர க்ரஹதாராணும் அதிபோ விஶ்வபாவந:
தேஜஸாமபி தேஜஸ்வீ த்வாதஶாத்மந் நமோஸ்துதே (15)

நம: பூர்வாய கிரயே பஶ்சிமாயாத்ரயே நம:
ஜ்யோதிர்கணாநாம் பதயே திநாதிபதயே நம: (16)

ஜயாய ஜயபத்ராய ஹர்யஶ்வாய நமோ நம:
நமோநம: ஸஹஸ்ராம்ஶோ ஆதித்யாய நமோ நம: (17)

நம உக்ராய வீராய ஸாரங்காய நமோ நம:
நம: பத்மப்ரபோதாய மார்த்தாண்டாய நமோ நம: (18)

ப்ரஹ்மேஶாநாச்யுதேஶாய ஸூர்யாயாதித்யவர்ச்சஸே
பாஸ்வதே ஸர்வபக்ஷாய ரௌத்ராய வபுஷே நம: (19)

தமோக்நாய ஹிமக்நாய சத்ருக்நாயாமிதாத்மநே
க்ருதக்நக்நாய தேவாய ஜ்யோதிஷாம் பதயே நம: (20)

தப்தசாமீகராபாய வஹ்நயே விஶ்வகர்மணே
நமஸ்தமோபிநிக்நாய ருசயே லோகஸாக்ஷிணே (21)

நாஶயத்யேஷ வை பூதம் ததேவ ஸ்ருஜதி ப்ரபு:
பாயத்யேஷ தபத்யேஷ வர்ஷத்யேஷ கபஸ்திபி: (22)

ஏஷ ஸுப்தேஷு ஜாகர்தி பூதேஷு பரிநிஷ்டித:
ஏஷ சைவாக்நிஹோத்ரம் ச பலம் சைவாக்நிஹோத்ரிணாம் (23)

வேதாஶ்ச க்ரதவஶ்சைவ க்ரதூநாம் பலமேவ ச
யாநி க்ருத்யாநி லோகேஷு ஸர்வ ஏஷ ரவி: ப்ரபு: (24)

ஏநமாபத்ஸு க்ருச்ச்ரேஷு காந்தாரேஷு பயேஷு ச
கீர்தயந் புருஷ: கஶ்சித் நாவஸீததி ராகவ (25)

பூஜயஸ்வைநமேகாக்ர: தேவதேவம் ஜகத்பதிம்
ஏதத் த்ரிகுணிதம் ஜப்த்வா யுத்தேஷு விஜயிஷ்யஸி (26)

அஸ்மிந் க்ஷணே மஹாபாஹோ ராவணம் த்வம் வதிஷ்யஸி
ஏவமுக்த்வா ததாகஸ்த்யோ ஜகாம ச யதாகதம் (27)

ஏதச் ச்ருத்வா மஹாதேஜா: நஷ்டஶோகோபவத் ததா
தாரயாமாஸ ஸுப்ரீத: ராகவ: ப்ரயதாத்மவாந் (28)

ஆதித்யம் ப்ரேக்ஷ்ய ஜப்த்வா து பரம் ஹர்ஷமவாப்தவாந்
த்ரிராசம்ய ஶுசிர் பூத்வா தநுராதாய வீர்யவான் (29)

ராவணம் ப்ரேக்ஷ்ய ஹ்ருஷ்டாத்மா யுத்தாய ஸமுபாகமத்
ஸர்வயத்நேந மஹதா வதே தஸ்ய த்ருதோபவத் (30)

அத ரவி ரவதந் நிரீக்ஷ்ய ராமம்
முதிதமநா: பரமம் ப்ரஹ்ருஷ்யமாண: |
நிஶிசரபதி ஸம்க்ஷயம் விதித்வா
ஸுரகணமத்யகதோ வசஸ்த்வரேதி || (31)

இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகியே
ஆதிகாவ்யே யுத்தகாண்டே
ஸப்தோத்தர ஶததம:
ஸர்க்க :

---

